

படுக்கையின்றும் எழுவதும், திரும்பவும் படுப்பதுமாகவே இரண்டு மாதங்கள் வாழ்வு மிகுந்த தொல்லையாயிருந்தது. ஒரு முறையில் வாதத்தின் தாக்குதலை மீறி யடிக்குமுன் இன்னொரு முறையும் தாக்கப்பட்டுப் படுக்கையில் கிடத்தப் பட்டான். வலியோடு கூட, கால விரயத்தின் பயனாகத் தொழிற்சாலையினின்றும் கிடைத்த ஊதியம் குடும்பத்தின் ஊண், உடைக்கும் போதாததால் ஏற்பட்ட கவலையும் சேர்ந்து கொண்டது. இதனால் மிகுந்த மனத்தளர்ச்சி யுற்றுப் பின்னர் சில நாட்களுக்குக் க்ருஷன் உட்கொண்டான் ...

இவ் வாதத்தால் அடிக்கடி ஏற்படும் குத்து வலி, கடைசல் முதலியவற்றை ஒரே அடியாக நிறுத்தும் வழி, அவற்றின் மூலகாரணத்தை "க்ருஷ"னும் நீக்குவதுதான்.

மூத்திரத்திலுள்ள அதிகப்படி அமிலங்களை க்ருஷன் இயற்கையாகவே மூத்திரக் காய்களின் மூலம் வெளித் தள்ளுகிறது. பின்னர் க்ருஷனிலுள்ள ஆறுவித இயற்கை உப்புக்கள் மேலும் வேலை செய்து மூத்திரக் காய்கள், குடல்கள், ஈரல்கள் இவற்றை நன்கு இயங்குமாறு தூண்டுகின்றன. சீக்கிரமே ஒரு புத்துணர்ச்சியைப் பெறுகிறீர்கள். ஆனந்தகரமான ஆரோக்கியம் மறுபடியும் உங்களுக்குக் கிடைக்கிறது. உங்களது கெமிஸ்டுகளிடமும் கடைக்காரர்களிடமும் கிடைக்கும். க்ருஷனின் விலை ரூ. 1-10-0. இன்றே க்ருஷன் வாங்குங்கள்.

"க்ருஷன்" ஈ. க்ரிபித்ஸ், ஹியூஸ், லிமிடெட்., (மான்செஸ்டர், இங்கிலாந்து) அவர்களால் தயாரிக்கப்பட்டு கார் & கம்பெனி, லிமிடெட். (பம்பாய், மதராஸ், கல்கத்தா.) அவர்களால் விநியோகிக்கப்படுகின்றன.




## நீங்களும் அந்த க்ருஷன் உணர்ச்சியைப் பெறலாம்

ஜுலை 29 முதல் சென்னை காஸினோ

மற்றும் தமிழ்நாடெங்கும்



THE CITADEL FILM CORPORATION LTD., MADRAS. 10.

EP

# ஆகஸ்ட் 11 வெளிவருகிறது



T.R. மஹாலிங்கம்
S. வரலக்ஷ்மி நடிக்கும்





ஸ்ரீ சுகுமாரின்

# மச்சரேகை (தமிழ்)



B.R. பந்துலு • P. சாந்தகுமாரி • குமாரி கமலா •
பேபி விமலா • நிர்மலா மற்றும் பலர்

டைரக்ஷன்:
P. புல்லையா B.A.

ஸ்டுடியோ:
நியூடோன்




விநியோகஸ்தர்கள்:

வட ஆர்க்காடு, தென் ஆர்க்காடு, செங்கற்பட்டு, சித்தூர் ஜில்லாக்களுக்கு: குமரவேல் பிக்சர்ஸ், மதராஸ்-7
மதுரை, திருநெல்வேலி, ராமநாதபுரம், புதுக்கோட்டை உள்பட: ராமனாதன் பிக்சர்ஸ், காரைக்குடி
கோவை, நீலகிரி: கோயமுத்தூர் பிக்சர்ஸ் லிமிட்., கோயமுத்தூர் சேலம்: தனலக்ஷ்மி பிலிம்ஸ், சேலம்
திருச்சி, தஞ்சாவூர்: மதராஸ் ஸினி டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ், தபால் பெட்டி நெ. 39, வேலூர்
கொழும்பு: சிலோன் என்டர்டைன்மெண்ட்ஸ் லிமிடெட், கொழும்பு, சிலோன்
எப். எம். எஸ்.: பஜாஜ் பிரதர்ஸ் லிமிடெட், பம்பாய்

# கடவுளின் கோவிலுக்கான பரிசுத்தம்




தெய்வீகத்திற்குப் பரிசுத்தம் இன்றியமையாதது. மிகவும் சுத்தமளிக்கும் சடங்காச்சார விஷயங்களுக்கு சமமான ஸோப்பை மட்டுமே நாம் உபயோகிக்க வேண்டும். ஸோப்பில் ஏது கலப்புமிருக்கலாம். ஆனால் கோத்ரெஜ் ஸாண்டலின் தன்மை தரும் கலப்பற்ற தாவர எண்ணெய்ச் சத்துக்களே. கோத்ரெஜ் சௌந்தர்யப் பொருட்களெல்லாம் உள்ளன போன்று, தனிமைப்பட உபயோகப் படுத்தப்பட்டுள்ளன. வெறுக்கத்தக்க மிருகக் கொழுப்புகள் யாதும் அவைகளில் இல்லை. சுய மைசூர் சந்தனத் தைலம் மிதந்தடமாய்ப் பொருத்தப்பெற்ற கோத்ரெஜ் சந்தன ஸோப்பானது இன்பமான குளிர்மை, இதம், மணம் இவைகளையுடைய சிறப்பை யளிக்கும். எனவே, சர்வ கடவுளின் கோவிலாயிருக்க, அதைத் தூய்மைப் படுத்த கோத்ரெஜ் தாவர வஸ்து ஸாண்டல் ஸோப் பல்லாது வேறெதுதான் ஏற்றதாகும்!



கோத்ரெஜ் லிம்டா—கிருமி கீனக் கொல்லவும் சௌந்த ரியமளிக்கவும் வல்ல வேம்பின் குணங்களுடைய ஸோப்.

**Godrej Sandal**

## கோத்ரெஜ் ஸாண்டல்
(மார்க்) (சந்தன)

## டாய்லெட் (ஸ்நான) ஸோப்

குறைந்த விலையில் மற்றைய ஸோப்புகளைவிட மிகவும் உயர்தரமான ஸோப்பு.

கோத்ரெஜ் சோபஸ் லிமிடெட், மதராஸ்: 164, பிராட்வே; கொச்சின்: 6/36, டக்வார்த்

## ஜுவல் பதித்த கைக் கடிகாரங்கள்




| | | | |
|---|---|---|---|
| 605 | ப்ரைன் | ~~35/-~~ | 12/- |
| 605 | சுபீரியர் | ~~36/-~~ | 16/8 |



| | | | |
|---|---|---|---|
| 606 | 15 ஜுவல் க்ரோம் | ~~78/-~~ | 38/- |
| 606 | 15 ,, ரோல்டுகோல்டு | ~~88/-~~ | 43/- |



| | | | |
|---|---|---|---|
| 607 | 5 ஜுவல் க்ரோம் | ~~60/-~~ | 29/8 |
| 607 | 5 ,, ரோல்டு கோல்டு | ~~70/-~~ | 34/8 |



| | | | |
|---|---|---|---|
| 608 | க்ரோம் கேஸ் | ~~28/-~~ | 13/- |
| 608 | உயர் ரகம் | ~~32/-~~ | 15/- |

○●○

தபால் செலவு தனி. இரண்டாக ஆர்டர் செய்வோருக்கு இலவசம்

**PIONEER WATCH Co**
POST BOX NO 11428 CALCUTTA

# கல்கி

# பொருளடக்கம்

மலர் 9 இதழ் 52 | ஜுலை 30 | விக்ருதி ஆடி 15

# கடை முதலாளிகள் மற்றும் வீட்டுக்காரர்கள்
# காஷியர்கள் மற்றும் நகை வியாபாரிகள்

கஷ்டப்பட்டுச் சம்பாதித்த உங்கள் பணம், மற்ற விலையுயர்ந்த சாமான்கள் முதலியவைகளைத் திருட்டு, தீ விபத்து, மூட்டுப்பூச்சி, எலி முதலியவைகளால் அழிவதற்கு முன் இந்த சுலபமாக உபயோகிக்கக்கூடிய நம்பிக்கை வாய்ந்த சேமிப்புப் பெட்டிகளில் வைத்துப் பூட்டிப் பத்திரப்படுத்துங்கள். இக்குறைந்த விலைகளில் இவ்வளவு அதிகமான சௌகரியங்கள். சிக்கனமான அதிக உற்பத்திக்கு வந்தனம்.



### கோத்ரெஜ்
### எக்ரு பண நகைப் பெட்டி

தனியாக எடுத்துக் கூடிய பெட்டியின் அடி பாகம், பெட்டியைப் பூட்டியபின் கவுன்டரிலோ அல்லது அலமாரிக்குள்ளோ பொருத்துவதை சாத்திய மாக்குகிறது.

பாதுகாப்பு மிக்க தயாரிப்பாளரிட மிருந்தே வாங்குங்கள்.

**ரூ. 70**

(டிரேயுடன்) 14" X 10" X 6"

## Godrej
Regd.

# கோத்ரெஜ்

### கோத்ரெஜ்
### பேடண்டு எக்ரு பணப் பெட்டி

அலமாரிக்குள்ளும் கவுன்டரின் மேலும் அசைக்க முடியாதபடி பொருத்தக் கூடியது.

**ரூ. 90**க்கு இப்பொழுதே உங்கள் வசமாகிவிடும்

(14" X 12" X 10")



**கோத்ரெஜ் அண்டு பாய்ஸ் மானுபாக்சரிங் கம்பெனி, லிமிடெட்.**

மதராஸ்: 164, பிராட்வே: பெங்களூர்: கமிஷன் & ஜெனரல் ஏஜன்ஸி, 180, நரசிம்மராஜா ரோடு: கோயமுத்தூர்: கமிஷன் & ஜெனரல் ஏஜன்ஸி, பெரிய கடைத் தெரு: திருச்சிராப்பள்ளி: ஸ்ரீ S. T. Rm. Ct. ஜம்புலிங்கம் செட்டியார், 2, சின்னக் கடைத் தெரு, தெப்பக்குளம்: மதுரை: S. R. S. பிரதர்ஸ், கிழக்கு சித்திரை வீதி; பெஜவாடா: P. ஓபுல் ரெட்டி & கோ., காந்திநகர்; ராஜமஹேந்திரபுரம்: ஸ்ரீ S.B.P.V. செல்லபதி ராவ், மெயின் ரோடு; கொச்சி: S. கோடார், போர்ட்: திருவனந்தபுரம்: S. கோடார், மெயின் ரோடு: கொழும்பு: சால் கௌல்ட்ஸன் லிட்., த. பெ. நெ. 217




தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

மலர் 9 இதழ் 52

# என்ன சேதி?

## காங்கிரஸ் தேர்தல்கள்

நாடெங்கும் காங்கிரஸ் தேர்தல்கள் நடந்து முடிந்தன. அங்கங்கே காங்கிரஸ் பஞ்சாயத்துக்களுக்கும், பிறகு மாகாண காங்கிரஸ் கமிட்டிகளுக்கும் தேர்தல்கள் முடிவடைந்தன. இனி மாகாண காரியக் கமிட்டித் தேர்தல், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டித் தேர்தல், காங்கிரஸ் அக்கிராசனர் தேர்தல்—இவை பாக்கியிருக்கின்றன. நடந்து முடிந்த தேர்தல்கள் காங்கிரஸ் ஸ்தாபனத்துக்கு நாட்டில் ஏற்பட்டிருந்த நற்பெயரை அநேகமாக முடித்து விட்டன என்று சொல்லலாம். எங்கெங்கும் காங்கிரஸ் பஞ்சாயத்து அங்கத்தினர் ஆவதற்கும் மாகாண கமிட்டி அங்கத்தினர் ஆவதற்கும் பலமான போட்டிகள் அருவருக்கத் தக்க தேர்தல் முறைகள் பல இடங்களில் கையாளப்பட்டன. பணம் புரண்டது என்றும், லஞ்சம் தாண்டவமாடிற்றென்றும் வதந்திகள் பரவின. பொய் வோட்டுகள், பலவந்த வோட்டுகள் முதலியவை பற்றிய புகார்களுக்கு அளவேயில்லை. கைகலப்புகள், அடிதடிகள் பல இடங்களில் நடந்தன. தேர்தல் முறைகளையும் தேர்தல் முடிவுகளையும் ஆட்சேபித்துச் சிலர் சர்க்கார் கோர்ட்டுகளுக்குப் போகவும் முன் வந்தார்கள். ஆனால் மேலேயுள்ள காரியக் கமிட்டி அதற்கு முற்றுப் புள்ளி வைத்தது. "கோர்ட்டுக்குப் போகிறவர்கள் காங்கிரஸிலிருந்து தள்ளப்படுவார்கள்!" என்று தீர்மானித்தது. உடனே கோர்ட்டில் தொடுத்திருந்த வழக்குகள் வாபஸ் வாங்கப்பட்டன!

## இத்தனை போட்டி ஏன்?

இந்த வருஷத்தைப் போல் காங்கிரஸ் ஸ்தாபன பதவிகளுக்கு இவ்வளவு பலமான போட்டி இதற்கு முன் எப்போதும் ஏற்பட்டதில்லை. இத்தகைய தீவிரப் போட்டிக்குக் காரணம் என்ன? தேசத்துக்குச் சேவை செய்வதே நோக்கமாயிருக்கும் பட்சத்தில் இவ்வளவு போட்டி ஏற்படக் காரணமேயில்லை. 1947-ம் ஆண்டில் பாரத நாடு சுதந்திரம் பெற்றது. அதற்கு முன்னால் காங்கிரஸ் ஸ்தாபனங்களுக்கு ஏற்பட்ட போட்டிகளைத் தேச சேவைக்காக ஏற்பட்ட போட்டிகள் என்று சொல்லலாம். ஆனால் 1947-ம் ஆண்டுக்கு முன்னால் ஒரு காலத்திலும் இப்படிப்பட்ட போட்டிகள் நடந்ததில்லை. சில சமயங்களில் அந்தந்த ஸ்தானங்களுக்குத் தகுந்தவர்களை அழைத்து வந்து அமர்த்தினார்கள்! முன்னெப்போதுமில்லாத போட்டி இப்போது ஏற்படக் காரணம் என்ன? அதிகார ஆசைதான்! காங்கிரஸ் பஞ்சாயத்துகளைப் பிடித்தால் மாகாணக் கமிட்டியைப் பிடிக்கலாம். மாகாணக் கமிட்டியிலிருந்து காரியக் கமிட்டிக்குத் தாவலாம். பிறகு மாகாண சட்டசபை ஸ்தானங்களைக் கைப்பற்றலாம். அதிலிருந்து மந்திரி பதவியையும் ஒரு கைபார்க்கலாம். தான் மந்திரியாகாவிட்டாலும் மந்திரிகளின் மீது செல்வாக்குச் சம்பாதித்து இஷ்டம்போல் அவர்களை ஆட்டி வைக்கலாம். இத்தகைய அதிகார ஆசையும் பதவிப் பித்தும் பேய் - பிசாசுகளின் உருவம் எடுத்துப் பலரையும் ஆட்டி வைத்திருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. இது இந்த மாகாணத்தில் மட்டுமல்ல;—இந்தியா தேசம் முழுவதிலுமே நடந்திருக்கிறது.

## மட்டப்பாறையின் குமுறல்

நாட்டின் விடுதலைக்காகச் சர்வ பரித்யாகம் செய்து பாடுபட்ட பழம் பெரும் தேசபக்தர்கள் பலரையும் காங்கிரஸின் இப்போதைய நிலைமை நெஞ்சைப் புண்ணாக்கிக் கண்ணீர் விடும்படி செய்திருக்கிறது. "மட்டப் பாறைச் சிங்கம்" என்று மக்களால் பரிந்து அழைக்கப்பட்ட ஸ்ரீ ஆர். எஸ். வெங்கட்

ராமய்யரின் தேசத் தொண்டையும் தீரத்தையும் தியாகத்தையும் அறியாதார் யார்? 1907-ம் ஆண்டிலிருந்து இன்று வரை தாய்நாட்டுக்கு உழைத்து வருகிறவர். இன்றைக்கும் தமிழ்நாடு காரியக் கமிட்டியில் அவர் அங்கத்தினர். அத்தகைய பழம்பெரும் தேசபக்தர் "நெல்லைச் செய்தி" ஆசிரியருக்கு எழுதியிருக்கும் கடிதத்தைக் கேளுங்கள் :—

"நாம் சர்வசங்கப் பரித்தியாகம் செய்து வளர்த்த கற்பக விருக்ஷம் நாம் உயிரோடிருக்கும் போதே வெட்டப்படுகிறது. இரவு பகல் கண்ணிமை மூட இயலவில்லை. திடீர் காங்கிரஸ்காரர்கள் என்ற பதத்தை, காலிகள், அயோக்கியர்கள், தேசத் துரோகிகள் அடங்கிய கூட்டம் என்றாலும் தகும். இவர்கள் செய்யும் தகிடுதத்தம் எந்த நாட்டு அரசியல் சரித்திரங்களிலும் கண்டதில்லை. இதுதான் ஜனநாயகம் என்றால் இது நம் நாட்டிற்கு ஒவ்வாதது. நாம் பண்ணியிருக்கும் ஆத்மார்த்திகமான பிரமாணங்கள் நாம் கடைப்பிடித்த சத்ய தத்துவங்கள் போதனைகள் யாவும் காற்றில் பறக்க வேண்டியது தான். ஸ்ரீ ராமராஜ்யம் போய் ராவண ராஜ்யம்தான் காண முடியும். சதி, மித்ர பேதம், அசத்யம் இவைகள் நிழல்போல் நிரம்பி சுற்றப்பட்டிருக்கும் கூட்டங்களால் எக்காலத்திலாவது, எந்நாடாவது சிறப்புடனிருந்ததாகத் தோன்றவில்லை."

## காரியக்கமிட்டியின் தவறு

மேட்டுப்பாறைச் சிங்கத்தைப் போலவே இன்னும் எத்தனையோ பழைய தேச பக்தர்கள் காங்கிரஸ் ஊழல்களைப் பற்றி வருந்தியிருக்கிறார்கள்; பேசியும் இருக்கிறார்கள். காங்கிரஸின் இப்போதைய அக்கிராசனர் டாக்டர் பட்டாபி சீதாராமய்யாவும் மற்றும் காரியக் கமிட்டி அங்கத்தினர் பலரும் பேசியிருக்கிறார்கள்; எச்சரிக்கையும் செய்திருக்கிறார்கள். பேச்சிலும் எச்சரிக்கையிலும் பயன் என்ன? காங்கிரஸில் ஊழல்களைக் களைவதற்கு ஏதாவது ஏற்பாடு செய்தார்களா? பஞ்சாயத்து அங்கத்தினர் தேர்தல் என்னும் அபத்த ஊழல் ஏற்பாட்டை ரத்து செய்து நல்ல முறையில் நேர்மையான தேர்தல்கள் நடைபெற ஏற்பாடுகள் செய்தார்களா? கிடையாது. ஆனால் ஒன்று செய்தார்கள். "காங்கிரஸ் தேர்தல் வழக்குகளைக் கோர்ட்டுகளுக்குக் கொண்டு போகக் கூடாது" என்று தீர்மானம் செய்தார்கள். ஏன்? கோர்ட்டுக்குப் போனால் என்ன? 1947-ம் ஆண்டுக்கு முன்னால் காங்கிரஸ் பிரிட்டிஷ் சர்க்காரோடு போராடியது. ஆகையால் காங்கிரஸ்காரர்கள் கோர்ட்டுக்குப் போகக் கூடாது என்ற விதி அப்போது பொருத்தம். இன்றைக்குத் தேசத்தில் சுதந்திர ஆட்சி—காங்கிரஸ் ஆட்சி—நடைபெறுகிறது. கோர்ட்டுகளும் சுதந்திர இந்தியாவின் கோர்ட்டுகள். இந்தக் கோர்ட்டுகளில் நியாயம் கிடைக்காது என்று சொல்ல முடியுமா? நியாயம் கிடைக்காது என்றால் அப்படிப் பட்ட கோர்ட்டுகளை வைத்துக் கொண்டிருக்கலாமா? மற்ற வழக்குகளை மட்டும் விசாரிக்கலாமா? அந்த வழக்குகளில் நியாயம் கிடைக்குமா? காங்கிரஸ் தேர்தல்களில் ஊழல்கள் நடந்தால் குறையுள்ளவர்கள் கோர்ட்டுக்குப் போவதை ஏன் தடுக்க வேண்டும்? காங்கிரஸ் ஊழல்களுக்கு மட்டும் ஒரு நியாயம், மற்ற ஊழல்களுக்கு வேறு நியாயமா? காரியக் கமிட்டியின் தீர்மானம் தவறானது என்பதில் சந்தேகமில்லை. காங்கிரஸ் தேர்தல்களில் ஊழல்கள் நடந்திருக்கின்றன என்றும், அவற்றை மூடி மறைக்கப் பார்க்கிறார்கள் என்றும் பொதுமக்கள் நினைப்பதற்கே மேற்படி தீர்மானம் ஏதுவாகும்.

## வெளியிலும் தொண்டு செய்யலாம்

காங்கிரஸ் ஸ்தாபன நிர்வாகத்தில் இத்தகைய ஊழல்கள் அதிகமாவது பற்றிப் பலரும் வருந்துவது இயல்புதான். ஸ்ரீ தாதாபாய் நௌரோஜி முதல் மகாத்மா காந்தி வரையில் மகான்கள் வளர்த்த புனித ஸ்தாபனத்தின் மதிப்புக் குறைந்து வருவது அனைவரும் வருந்தத்தக்க காரியந்தான். அதனால் பெரிய விபரீதம் ஒன்றும் தேசத்துக்கு நேர்ந்து விடாது என்பது ஆறுதல் தரும் விஷயம். ஏனெனில், இன்றைக்கு இப்பாரத தேசத்தை மத்திய ஆட்சி பீடங்களிலிருந்து ஆண்டு வருகிறவர்கள் ஒப்பற்ற மகா புருஷர்கள் என்பதை நாம் அறிந்திருக்கிறோம். அவர்கள் அங்கே இருக்கும் வரையில் தேசத்துக்குப் பெரிய தீங்கு எதுவும் நேரிடுவதை அனுமதிக்க மாட்டார்கள், பார்த்துக் கொண்டிருக்கவும் மாட்டார்கள். அந்தத் தலைவர்களுடைய தியாக பலமும் ஆத்ம சக்தியும் நுண்ணறிவும் பரந்த உள்ளமும் பொதுநல ஆர்வமும் சுதந்திர பாரத நாட்டைப் பாதுகாத்து முன்னேற்றப் பாதையில் கொண்டு போகும். ஆகவே காங்கிரஸ் ஊழல்களைப் பற்றி அதிகமான கவலையும் அவசியமில்லை. உண்மையான தேசபக்தர்கள்—பொதுஜனத் தொண்டு செய்ய விரும்புகிறவர்கள்—காங்கிரஸுக்கு வெளியிலிருந்தும் தொண்டு செய்யலாம்.




கொரியா யுத்தம் உலக மகா யுத்தமாகிவிடாமல் தடுப்பதற்காக பண்டித ஜவாஹர்லால் நேரு பகுத்தறிவையும் சமாதானத்தையும் அடிப்படையாகக் கொண்டு கூறிய யோசனையை அமெரிக்க சர்க்கார் நிராகரித்து விட்டார்கள்.

# அடுத்து முயல்வோம் ஆகுநாள் வரும்

அர்த்தமற்ற வீண் கௌரவம் இருக்கிறதே அது மனிதனின் சத்துரு, தேசங்களின் ஜன்ம சத்துரு, உலகத்தின் பரம விரோதி!

வீண் கௌரவம் பாராட்டுவதால் எவ்வளவு நல்ல காரியங்கள் கெட்டுக் குட்டிச்சுவராகி விடுகின்றன!

அர்த்தம் இல்லாத, யாதொரு பலனும் அற்ற அந்தக் கௌரவம் பல தேசங்களையும் அவற்றின் தலைவர்களையும் படாத பாடு படுத்தி வைத்திருப்பதற்குச் சரித்திரத்திலே எத்தனையோ உதாரணங்கள் கூறலாம்.

ஒரு தனி மனிதனின் அல்லது தேசத்தின் அர்த்தமற்ற கௌரவம் எத்தனையோ போர்களைத் தூண்டி விட்டிருக்கிறது; எத்தனையோ மக்களைப் பலி கொண்டிருக்கிறது; எத்தனையோ மன்னாதி மன்னர்களை மண்ணில் உருளும்படி செய்திருக்கிறது.

ஆயினும் என்ன? அதன் ஆதிக்கம் குறைந்து விடவில்லை; இன்றும் அந்தக் கௌரவம் மானிட வர்க்கத்தை ஆட்டி வைக்கத்தான் செய்கிறது!

"உலக மகா யுத்தமா அல்லது சமாதானமா என்ற மகத்தான பிரச்னையைத் தீர்க்க வேண்டிய விஷயத்தில் வீண் மதிப்பும் பெருமையும் வந்து குறுக்கிடக் கூடாது. எப்படியாவது நெருக்கடி தீர வேண்டும் என்ற உறுதியுடன் சமரசத்துக்கு முன் வர வேண்டும்" என்று பண்டித ஜவாஹர்லால் நேரு அமெரிக்காவையும் ருஷ்யாவையும் கேட்டுக் கொண்டிருந்தார்.

ஜவாஹர்லால்ஜியின் வேண்டுகோளுக்கு ஸ்டாலினும் ட்ருமனும் பதில் அளித்து விட்டார்கள்.

ஸ்டாலின் அளித்த பதில் உற்சாக மூட்டுவதாக இருக்கிறது என்று பண்டித நேரு குறிப்பிட்டிருக்கிறார்.

ஆனால் அமெரிக்க ஜனாதிபதி ட்ருமன் அளித்த பதிலோ, உலக சமாதானத்தில் நாட்டம் கொண்ட யாருக்கும் உற்சாகம் அளிப்பதாக இல்லை.

வீண் கௌரவமும் பெருமையும் குறுக்கிட்டு விட்டதே அமெரிக்காவின் அத்தகைய பதிலுக்குக் காரணம்.

• • •

ஐக்கிய நாடுகள் பாதுகாப்புச் சபையில் சீனப் பொது உடைமை சர்க்காரின் பிரதிநிதிக்கு ஸ்தானம் அளிக்கவில்லை என்பதற்காக ருஷ்யா மேற்படி சபையின் கூட்டங்களை யெல்லாம் பகிஷ்காரம் செய்து வருகிறது.

அதாவது நிரந்தரமான ஐந்து பிரதிநிதிகள் உள்ள அந்தச் சபையில் இரண்டு முக்கிய நாடுகளின் பிரதிநிதிகள் இராமலே காரியங்கள் நடைபெற்று வருகின்றன.

உலக சமாதான முயற்சியில் ஈடுபடுவதற்கு முன் மேற்படி சமாதானத்துக்காகப் பாடுபடும் அந்தச் சபையில் உள்ள ஊழலைத் தீர்க்க வேண்டியது அத்தியாவசியம் அல்லவா?

உலகத்திலேயே அதிக ஜனத்தொகையுள்ள தேசம் சீனாதான். நாற்பது கோடி ஜனங்களுக்குமேல் வாழும் சீனாவுக்கு ஐ. நா. பாதுகாப்புச் சபையில் வல்லரசுகளுக்குச் சமமாக நிரந்தரமான ஸ்தானம் அளிக்கப்பட்டிருக்கிறது. சீனாவில் சியாங்கை சர்க்கார் மறைந்து மா ஸே துங் சர்க்கார் ஏற்பட்டு விட்டது. சீன தேசம் முழுதும் அந்த ஒரே சர்க்காரின் நிர்வாகத்தில் இருந்து வருகிறது.

மா ஸே துங் சர்க்கார் ஒழுங்காக நடைபெறுகிறது என்றும், அது சர்வ தேசச் சட்டத்துக்கும் அரசியல் நியதிக்கும் முரணானது அல்ல என்றும் பிரிட்டன் உள்பட பல நாடுகளும் ஒத்துக்கொண்டிருக்கின்றன.

எனவே, அந்தச் சர்க்காரை அங்கீகரிக்க அமெரிக்கா மறுத்து வருவதற்குப் பாழும் கௌரவத்தைத் தவிர வேறு எதுவும் காரணமில்லை.

அவ்வளவு பிரம்மாண்டமான சீன தேசத்தில் ஏற்பட்டுள்ள சட்ட பூர்வமான சர்க்காருக்கு ஐ. நா. சபையில் இடமில்லை என்றால், அந்தச் சர்க்காரை அமெரிக்கா அங்கீகரிக்கப் போவதில்லை என்றால், மூன்றாவது உலக மகா யுத்தம் வந்தே தீரும். அத்தகைய கொடிய யுத்தத்தில் உலகமே அழிந்து போகும்.

மூன்றாவது உலக யுத்தத்தை யாரும் விரும்பவில்லை. அப்படி விரும்பி வரவேற்றவர்கள் உலகத்தின் மகா சத்துருக்கள் ஆவார்கள்.

அமெரிக்காவும் உலக மகா யுத்தத்தை விரும்பவில்லை. அதைத் தடுப்

பதற்காகவே ஐக்கிய நாடுகளின் சபையை ஆதரித்து நடத்தி வருகிறது.

சீனாவை ஐக்கிய நாடுகளின் சபையில் சேர்த்துக் கொள்ளாமல் உலக யுத்தத்தைத் தடுக்க முடியாது.

ஆகையால் என்றைக் கிருந்தாலும் ஒரு நாள் சீனப் பொது உடைமை சர்க்காரை அமெரிக்கா ஒப்புக் கொண்டுதான் தீர வேண்டும்.

அப்படியானால் உலக சமாதானத்தை முன்னிட்டு அமெரிக்கா இப்போதே சீன சர்க்காரை அங்கீகரிக்க ஏன் தயங்க வேண்டும்? அதை அங்கீகரிப்பதன் மூலம் உலக சமாதானத்துக்குத் தடையாக உள்ள முதல் முட்டுக் கட்டை தகர்ந்து விடும் அல்லவா?

உலக சமாதானத்துக்குப் பூர்வாங்கமாக சீன சர்க்காரை அங்கீகரிக்க அமெரிக்கா மறுப்பதால், அது உலக சமாதானத்தைக் காட்டிலும் தன் சொந்த கௌரவத்தையே பெரிதாகக் கருதுகிறது என்று தான் உலகம் நினைக்க வேண்டி யிருக்கிறது.

* * *

இந்த விஷயத்தில் அமெரிக்காவைக் காட்டிலும் ருஷ்யா ராஜதந்திரத்துடன் நடந்து கொண்டிருக்கிறது.

பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கு ஸ்டாலின் அளித்துள்ள பதில் ட்ருமனின் பதிலைக் காட்டிலும் திருப்திகரமாக இருக்கிறது. அந்தப் பதிலில் கொரியா சம்பந்தமாக ஸ்டாலின் கொஞ்சம் பொடி வைத்தே குறிப்பிட்டிருக்கிறார். ஆயினும் வெளிப் பார்வைக்கு அது முற்றும் இணக்கமான பதிலாகக் காண்கிறது.

அதாவது உலக சமாதானத்துக்கு விரோதமாக எந்த நாடு நடந்து கொண்டு வருகிறது என்று அமெரிக்கா குற்றம் சாட்டுகிறதோ, அந்த நாடு (ருஷ்யா) ஜவாஹர்லால்ஜியின் சமரச யோசனையை வரவேற்று இணக்கமாகப் பதில் அளித்திருக்கிறது; உலகிலே சமாதானத்தையும் ஜனநாயக தர்மத்தையும் நிலைநிறுத்துவதற்காகக் கோடி கோடியாய்ச் செலவு செய்து வரும் அமெரிக்கா சமாதான யோசனையை நிராகரித்திருக்கிறது!

"அமெரிக்காவுக்கு ராஜதந்திரம் அவ்வளவாகப் போதாது" என்று அந்த நாட்டில் சமீபத்தில் சுற்றுப் பிரயாணம் செய்து விட்டுத் திரும்பிய நமது "சுதேசமித்திரன்" ஆசிரியர், அகில இந்தியப் பத்திரிகாசிரியர்கள் மகாநாட்டின் தலைவர் ஸ்ரீ சி. ஆர். ஸ்ரீனிவாசன் கூறினார்.

அவர் அவ்வாறு சொன்னதைக் குறித்துப் பலரும் ஆச்சரியப்பட்டிருக்கலாம். ஆனால் அவர் கூறியது முற்றிலும் சரி என்பது அமெரிக்காவின் ராஜதந்திரமற்ற பதிலிலிருந்து இப்போது தெரிந்து விட்டது.

* * *

உலக சமாதானத்துக்காக ஜவாஹர்லால்ஜி செய்த முயற்சி தற்காலிகமாக வெற்றி பெறவில்லை.

எனினும் அதற்காக ருஷ்ய—அமெரிக்கா தகராறில் இந்தியா தலையிட்டது தவறு என்று கூற முடியாது.

"அடுத்து முயன்றாலும் ஆகுநாளன்றி எடுத்த கருமங்கள் ஆகா." விடா முயற்சி காலக்கிரமத்தில் வெற்றியைக் கொடுத்தே தீரும்.

"பலனை எதிர்பாராமல் கடமையைச் செய்க" என்ற கீதோபதேசத்தைப் பின்பற்றி இந்தியா தன் பெருமைக்கும் பண்பாட்டுக்கும் உகந்த வகையில் தனது மகத்தான கடமையைச் செய்யத் தவறவில்லை.

பாரதநாடு அடுத்து அடுத்து முயன்று சுதந்திர லட்சியத்தில் வெற்றி பெற்றதைப் போல, புனித லட்சியமான உலக சமாதானத்தை நிலைநிறுத்தவும் இடை விடாது முயற்சி செய்து வரும் பண்டித ஜவாஹர்லால் நேரு சமரச முயற்சியைக் கைவிடவில்லை என்பது மறுபடியும் அவர் அமெரிக்க உள் நாட்டு மந்திரிக்குக் கடிதம் எழுதியிருப்பதிலிருந்து நன்கு தெரிகிறது.

உலக மகா யுத்தம் ஏற்பட்டால் மானிட வர்க்கத்துக்கே ஆபத்தாக முடியும் என்பதுடன், பாரத நாட்டுக்கும் கஷ்ட நஷ்டங்கள் ஏற்படும்.

எனவே, இந்திய மக்களின் சொந்த க்ஷேமத்தை உத்தேசித்தும் ஜவாஹர்லால்ஜியின் உலக சமாதான முயற்சியை எல்லோரும் ஆதரிக்கவேண்டும்.

அந்த முயற்சியில் தற்காலிகமாக வெற்றி கிடைக்கவில்லை என்பதற்காக அதன் மகத்துவம் குறைந்து விடாது.

வெற்றி கிடைக்க வில்லையாயினும், உலகமே இருப்பதா அல்லது அழிவதா என்ற மகத்தான பிரச்னையை யொட்டி இந்தியா தன்னுடைய கடமையைச் செய்யத் தவறவில்லை என்று திருப்தி அடையலாம். ஆனால், அமெரிக்கா தேசத்துக்கு அத்தகைய திருப்தி ஏற்படுவதற்கு இடமில்லை.

# அக்கப் போர்

கம்யூனிஸத்தைப் பற்றிய "உண்மைகளை" உலகெங்கும் எடுத்துக்கூறிப் பிரசாரம் செய்வதற்காக 6 கோடி டாலர் செலவழிப்பதற்கு அமெரிக்கத் தலைவர் ட்ரூமன் காங்கிரஸின் அனுமதி கோரினார்.—செய்தி

அப்படியானால் இதுவரை அமெரிக்கர்கள் கம்யூனிஸத்தைக் கண்டித்துச் செய்து வந்த பிரசாரம் எல்லாம் பொய்களா?

★

"பசு மாடுகளுக்குத் தீனியாகக் கடலை அகப்படாததை ஆட்சேபித்து இருநூறு பால்காரர்கள் அம்பாலாவில் மூன்று தின திமர் ஸ்டிரைக்கில் இறங்கி விட்டார்கள்."

—செய்தி.

அம்பாலாவில் அந்த மூன்று தினங்களும் குடி தண்ணீருக்குப் பஞ்சம் இருந்திராது.

★

"பி. வி. சர்க்கார் என்ற இந்திய மந்திரவாதி தமது கண்கள் இரண்டையும் இறுகக் கட்டிக் கொண்டு, ஜன நடமாட்டமும் மோட்டார், டிராம் நடமாட்டமும் அதிகமுள்ள தெரு ஒன்றின் வழியாக ஆபத்தில்லாமல் ஸைக்கிளில் சென்றார்."

—பாரிஸ் செய்தி

கண்ணைத் திறந்து கொண்டு போயிருந்தால் அவர் அப்படி ஆபத்தில்லாமல் சென்றிருக்க முடியுமா என்பது கேள்வி.

★

"பால் பாத்திரங்களில் பாலோடு ஒளித்து வைக்கப்பட்டிருந்த சாராயத் தொட்டு கள் புட்டிகளைப் பம்பாய் ரயில்வே போலீஸார் மாலத் ஸ்டேஷனில் இரண்டு பால்காரர்களிடமிருந்து கைப்பற்றினர்."

—பம்பாய்ச் செய்தி

வெளுத்ததெல்லாம் பாலாகுமா?

★

"நம் நாட்டில் ஐந்து கோடிக் குரங்குகள் இருக்கின்றன. ஐம்பது வயதுக்கு அதிகமானவர்கள் ஐந்து கோடிப் பேர்கள் இருக்கிறார்கள். இந்த இரண்டு கோஷ்டியினராலும் உணவுப் பொருள்கள் நஷ்டமாகின்றன. ஆகையினால் உணவுப் பொருள்களின் நஷ்டம் ஏற்படாமல் பாதுகாக்க வேண்டுமானால் மேற்கூறிய ஏதாவது ஒரு கூட்டத்தினரை ஒழிக்க வேண்டும்."

—கே. எம். முன்ஷி

ஸ்ரீ முன்ஷி தமக்கு ஐம்பது வயதுக்கு மேல் ஆகவில்லை என்று நம்புகிறார் போலும்!

"எனக்கு மிகவும் பிடித்த முகம் என் முன்னால் இருக்கும்படி வைத்துக் கொள்வேன்" என்று பிரபல சினிமா நடிகை ஒருவர் பத்திரிகை நிருபருக்கு அளித்த பேட்டியில் கூறினார்.

"அதனால்தான் உங்கள் அறையில் அவ்வளவு பெரிய நிலைக் கண்ணாடியை மாட்டியிருக்கிறீர்களாக்கும்!" என்று அந்த நிருபர் கேட்டிருக்கலாம்.

★

லிவர்பூர் சர்வகலாசாலையில் சட்டப் பரீட்சையில் 21 வயதுள்ள பிறவிக் குருடர் பீடர் மாப்ளாஸ் என்பவர் முதன்மையில் தேறியிருக்கிறார். —செய்தி

இதிலிருந்து கண்ணை மூடிக் கொண்டு பரீட்சை எழுதினால் பாஸாகிவிடலாமென்று தெரிகிறதல்லவா?

★

"மக்களுக்கு நன்மை செய்வோம். ஸ்ரீ டி. டி. கே. வற்புறுத்தல்."

—பத்திரிகைத் தலைப்பு

"வேண்டாம், வேண்டாம் என்றால்கூட விடாமல் வற்புறுத்தி நன்மையைச் செய்து விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பார்கள் போலிருக்கிறதே!" என்கிறான் வற்புறுத்தலின்மீது விளக்கெண்ணெய் குடிக்கும் எங்கள் வீட்டு அம்பி!

★

"மத்திய பாரத் தலைவர் பிரச்னையால் எழுந்துள்ள தகராறைப் போக்கும் பொருட்டு சர்தார்பூர் மக்கள் அவர்களது சிவாலயத்தில் இன்று முதல் இடையறாது ராமாயண பாராயணம் நடத்தத் துவங்கியுள்ளனர்."

—செய்தி

தலைவர் எவரே ஸ்தாபனமானாலும், 'அரியும் சிவனும் ஒன்று' என்ற உண்மை மட்டும் ஸ்தாபனமாகி விட்டது.

★

"கொரியா போருக்குத் துருப்புக்கள் உதவும்படி ஐ. நா. காரியதரிசி ஜெனரல் ட்ரிக்வி லீ விடுத்த வேண்டுகோளுக்கு இருபது நாடுகளிலிருந்து துருப்புக்கள் அனுப்ப முடியாது என்று பதில் வந்துவிட்டது." —செய்தி

"அந்தப் பயல்கள் எக்கேடாவது கெட்டுப் போகட்டும், ஸார்! நீங்கள் உங்கள் துருப்பை உடனே இறக்குங்கள்!" என்கிறார் சீட்டாட்ட ரசிகர் ஒருவர்.

"நமது சிறைச் சாலைகளில் ஏன் இவ்வளவு பேர் அடைபட்டிருக்கிறார்கள்?" என்று கேட்கிறார் ஒரு சீர்திருத்தக்காரர்.

சிறைச்சாலைக் கதவுகளைப் பூட்டி வைத்திருப்பது ஒரு காரணமாயிருக்கலாம்!

★

"இந்தியாவிலுள்ள மந்திரிகள், உயர்தர அதிகாரிகள், வியாபாரத் துறையிலும் பொது வாழ்விலும் ஈடுபட்டுள்ள முக்கியஸ்தர்கள் வருஷத்தில் கட்டாயம் இரண்டு மாத காலமாவது லீவ் எடுத்துக் கொள்ள வேண்டும்."

—பம்பாய் மேயர் எஸ். கே. பட்டீல்

பன்னிரண்டு மாதங்களும் எடுத்துக் கொண்டால் மிகவும் சௌக்யமாயிருக்கும் என்று ஸ்ரீ பொதுஜனம் கூறுகிறார்.

★

"பருத்திக் கொட்டையில் உணவுச் சத்து நிறைய இருக்கிறது. ஆகையால், பருத்திக் கொட்டையை நாம் உணவுப் பொருளாகச் சாப்பிடலாம்" என்றார் உணவு மந்திரி ஸ்ரீ கே. எம். முன்ஷி.

"இதற்கும் போட்டிக்கு வந்துவிட்டீர்களா?" என்று மாடுகள் ஆட்சேபிக்கலாம்!

நிற்க. ஸ்ரீ முன்ஷியின் கூற்றைப் படித்ததும் ஒரு பழைய தமிழ்நாட்டுக் கதை ஞாபகத்துக்கு வருகிறது.

ஓர் ஊரில் ஒரு கிழவி இருந்தாள். அவளுக்கு ஒரே மகன் இருந்தான். மகனுக்குக் கலியாணம் ஆகி மருமகள் வீட்டுக்கு வந்தாள். கிழவி நல்லவள்தான். ஆனால் தன் மகன் அவனுடைய மனைவியுடன் அளவளாவிப் பேசுவதோ உல்லாசமாகப் பொழுது போக்குவதோ அவளுக்குப் பிடிக்காது. மகனுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளைக் கூட மருமகளைச் செய்ய விடமாட்டாள்; தானே செய்வாள். சாப்பாட்டைக்கூடத் தானே போட்டு வந்தாள்.

ஒரு நாள் மாலை கிழவி பக்கத்து கிராமத்துக்கு அவசரமாகப் போகவேண்டியதாக இருந்தது. அவள் தன் மருமகளைப் பார்த்து, "செங்கமலம்! நான் காலையில்தான் வருவேன். குதிர் இடுக்கில் ஒரு கற்சட்டியில் தண்ணீர் விட்ட பழைய சாதம் இருக்கிறது. அதை எடுத்து அவனுக்குப் போடு" என்று சொல்லிவிட்டுப் போனாள்.

அம்மா ஊருக்குப் போய்விட்டதை அறிந்த மகனுக்கு ஒரே ஆனந்தம். ஒரு நாளாவது பெண்டாட்டியின் கையால் சாப்பிடலாம் அல்லவா? விளக்கு வைத்ததுதான் தாமதம், சாதம் போடச் சொன்னான். அவள் குதிர் இடுக்கில் இருந்த ஒரு கற்சட்டியைக் கொண்டு வந்து, அதிலிருந்த சாதத்தைத் தன் அருமைப் புருஷனுக்குப் படைத்தாள். மனைவியாளுடன் பேசிக்கொண்டே ஒவ்வொரு கவளமாக எடுத்து, ரசித்து ரசித்து உண்டான் அவன். தேவாமிருதம் போல இருந்தது அது. அத்தகைய உணவை ஆயுளில் ஒருமுறை கூட உண்டதில்லை போலத் தோன்றியது அவனுக்கு.

அதிகாலையில் அவனுடைய தாய் கிராமத்திலிருந்து திரும்பி வந்ததும் மருமகளைப் பார்த்து, "ஏண்டி, நேற்றிரவு அவனுக்குச் சாதம் போட்டாயா? வயிறு நிறையச் சாப்பிட்டானா?" என்று கேட்டாள்.

"ஆமாம் மாமி, நீங்கள் சொன்னது போலவே செய்தேன். கற்சட்டியில் இருந்த பழைய சாதம் முழுவதையும் அவர் சாப்பிட்டு விட்டார்" என்றாள் அவள்.

கிழவி திருப்தியுடன் உள்ளே போய், வீட்டு வேலைகளைக் கவனிக்கத் தொடங்கினாள். திடீரென்று மாட்டுக்குப் பருத்திக் கொட்டை வைக்கவில்லை என்ற ஞாபகம் வந்தது அவளுக்கு. குதிர் இடுக்குக்குப் போய் அங்கேயிருந்த மற்றொரு கற்சட்டியை எடுத்தாள். அதில் பருத்திக் கொட்டை இல்லை; பழைய சாதம்தான் இருந்தது! சற்றுநேரம் திகைத்து நின்றாள்.

உடனே அவள் தன் மருமகளை அழைத்து "ஏண்டி பெண்ணே! சாதம் அப்படியே இருக்கிறதே! இங்கே இன்னொரு கற்சட்டியில் பருத்திக் கொட்டை வைத்திருந்தேனே, அது எங்கே?" என்று கேட்டாள்.

"பருத்திக் கொட்டையா? அதிலா இருந்தது?" என்று கேட்டாள் மருமகள்.

கிழவிக்கு விஷயம் விளங்கியது.

"அதைத்தான் அவனுக்குப் போட்டாயா?" என்றாள் அவள்.

மருமகள் பதிலே பேசவில்லை.

உள்ளே நடக்கும் சத்தத்தைக் கேட்டு அவளுடைய மகன் அங்கு ஓடி வந்தான். விஷயத்தை அறிந்ததும் அவனுக்கு வெட்கம் உண்டாகி விட்டது.

"ஏண்டாப்பா! பருத்திக் கொட்டைக்கும் சாதத்துக்கும் கூடவா வித்தியாசம் தெரியவில்லை?" என்றாள் கிழவி.

"நான் என்னம்மா செய்கிறது? பேசிக்கொண்டே சாப்பிட்டேன். ஆகையால் அதைக் கவனிக்கவில்லை!" என்றான்.

"பெண்டாட்டியின் பேச்சில் சொக்கிப் போய் விட்டாயாக்கும்!" என்றாள் கிழவி.

* * *

ஸ்ரீ முன்ஷி சொன்னது போல், பருத்திக் கொட்டையில் உணவுச் சத்து நிறைய இருக்கிறது என்பது உண்மை; அதைச் சாப்பிடலாம் என்பதும் உண்மை. ஆனால் வெறும் பருத்திக் கொட்டையை மட்டும் சாப்பிட்டுவிட முடியாது. பருத்திக் கொட்டையுடன் காதலும் சேர்த்தால் ஒருவேளை சாப்பிடுவது சாத்தியமாகலாம்!

# வான வெளியிலே...!

அர்த்த ராத்திரி வேளையில் ஈசான்ய மூலையிலிருந்து ஒரு லேசான குரல் எழுந்தது. அந்தக் குரல் கொரியாவில் உள்ள பூசான் மலையின் குரல்தான் என்பது ஹிமாசலத்துக்குத் தட்சணமே தெரிந்தது.

"தம்பி, பூசான்! என்ன விசேஷம்? முட்டாள்களின் யுத்தம் எப்படி நடக்கிறது? வடகொரியப் படைகள் உன் திக்கு நோக்கி வேகமாக முன்னேறிக் கொண்டிருக்கின்றன போலிருக்கிறதே?" என்றது இமயமலை.

பூசான் பேசாமல் இருந்தது.

"ஏன் மௌனம் சாதிக்கிறாய்? என்ன வருத்தம்?" என்று கேட்டது இமயம்.

"ஒன்றுமில்லை அண்ணா! எனக்கும் என் நிழலில் வாழும் நாட்டுக்கும் ஏதாவது கதி மோட்சம் உண்டா என்று யோசிக்கிறேன். இரண்டாயிரம் வருஷமாக இந்த நாட்டில் ஹான் நதி, கும்நதி இவற்றோடு இரத்த நதிகளும் ஓடிக் கொண்டுதானிருக்கின்றன. இன்னமும் நின்றபாடில்லை. எப்போது இந்தத் தொல்லை தீரும் என்று சொல்ல முடியுமா?" என்றது பூசான்.

"அதை என்னைக்கேட்டு என்ன பிரயோஜனம்? உன்னைக் காப்பாற்ற ஜெனரல் மக் ஆர்தர் இருக்கிறார். அமெரிக்க பிரஸிடெண்ட் ட்ருமன் இருக்கிறார். ஐ. நா. சபைக் காரியதரிசி ட்ரிக்வ் லீ இருக்கிறார். பிரிட்டிஷ் அம்பாஸிடர் டேவிட் கெல்லி இருக்கிறார். அமெரிக்க வெளிநாட்டு மந்திரி டீன் அக்கிஸன் இருக்கிறார். உனக்கென்ன குறைச்சல்?" என்றது ஹிமாசலம்.

"உலகத்தையும் உலக நடவடிக்கைகளையும் இருந்த இடத்திலிருந்து கண்ணோட்டமிட்டுக் கொண்டிருக்கும் இமய சிகரமே! நீ என்னைக் கேலி செய்கிறாய் போலும்! அமெரிக்கர்களும் அமெரிக்கப் படைகளும் கச்சை கட்டிக் கொண்டு எங்களைக் காப்பாற்றுவதாகத் தடபுடல் செய்கிறார்கள். வடக்கேயிருந்து வருகிறவர்களும் எங்களைக் காப்பாற்ற வருவதாகவே சொல்லுகிறார்கள். ஆனால் எங்கள் பாடு ஆபத்தாகவே இருந்து கொண்டிருக்கிறது. யுத்தம் தொடங்கி கிட்டத்தட்ட ஒரு மாத காலம் ஆகிறது. எப்போது முடியும் என்று சொல்வதற்கு அறிகுறி ஏதுவும் காணவில்லை......"

"மாபெரும் அமெரிக்கா தேசத்தினுடைய அனுதாபமும் ஒத்தாசையும் உனக்கிருக்கும்போது நீ ஏன் இப்படி அழுது புலம்புகிறாய்!" என்று அன்புடன் கேட்டது இமயமலை.

"கேளும் பர்வத ராஜனே! அமெரிக்காவின் அனுதாபமும் உதவியும் அதிகமாக ஆக எங்களுடைய பயமும் அதிகமாகிக் கொண்டே போகிறது. இவ்வளவு தடபுடல் படுத்தி அமெரிக்கா யுத்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டு கொரியப் போரில் ஈடுபட்டதின் பலன் என்ன தெரியுமல்லவா?"

"என்ன பலன்? நீதான் கொஞ்சம் சொல்லேன்."

"அமெரிக்கா போரில் ஈடுபட்ட உடனேயே தென் கொரியாவின் நிரந்தரத் தலை நகரமான ஸியோல் தலை குப்புறக் கவிழ்ந்தது. ஸியோல் நகரம் வட கொரியர்கள் கைக்குப் போனவுடன் அமெரிக்காவின் ஆத்திரம் அதிகமாயிற்று. 'விட்டேனா பார்!' என்று மேலும் மார் தட்டியது. தளபதி மக் ஆர்தரை ஜப்பானை விட்டுப் புறப்பட்டுத் தென் கொரியாவில் போய் கிரகப்பிரவேசம் செய்யச் சொல்லியது. ஜெனரல் மக் ஆர்தர் தென் கொரியாவுக்குள் பிரவேசம் செய்வதற்குள் தென் கொரியாவின் தலைமை ஸ்தலம் தெற்கு நோக்கிப் பிரவேசித்தது. வட கொரியர்கள் மேலும் முன்னேறிப் பாய்ந்தார்கள். யுத்தம் ஆரம்பித்த பத்து தினங்களுக்குள்ளாக தென் கொரியாவில் கிழக்கு மேற்காக 120-மைல் தூரமும் வடக்கு தெற்காக 60-மைல் தூரமும் வட கொரியா வசமாயிற்று."

"ஐயோ பாவம்! பிறகு ஐ. நா. தீர்மானத்துக்குச் சாதகமாகக் கைதூக்கிய அதன் அங்கத்தினர் நாடுகளும் உன் உதவிக்கு வந்திருக்க வேண்டுமே!" என்று சொன்னது இமயமலை.

"கதையைக் கடைசி வரையில் கேளும். கைதூக்கிய நாடுகள் யாவும் உடனே கையை விரித்தன. நான் கூட முதலில் சந்தோஷப் பட்டேன். 53 தேசங்கள் உதவிக்கு வந்தால் வட கொரியப் படைகளைப் பஸ்மீகரமாக்கி விடலாம் என்று தான் அற்ப சந்தோஷமடைந்தேன். ஆனால் கைதூக்கிய நாடுகள் யாவும் ஐ. நா. வின் தீர்மானம் தர்ம நியாயமானது என்பதற்காகத்தான் கைதூக்கி ஆமோதித்தனவாம். படைபலம் அனுப்பக் கூடிய வசதி பெரும்பாலான நாடுகளுக்கு இல்லை யென்று சொல்லிக் கையை அகலமாக விரித்து விட்டன. உதவி அனுப்புவதாகச் சொன்ன ஒரு சில தேசங்களும் என்ன உதவி செய்வது

என்பதைப் பற்றி இன்னமும் யோசித்துக் கொண்டிருக்கின்றன. பிரிட்டன் உதவி அனுப்புவதைப்பற்றிச் சபை கூடி யோசிக்கப் போகிறதாம். இப்படியாக ஒரு தேசத்திலிருந்தும் இன்னும் உருப்படியாக ஒருவித உதவியும் எங்களுக்கு வந்து சேரவில்லை. இந்த லட்சணத்தில் ஐ. நா. சபையும் அமெரிக்கா தேசமும் என்ன செய்தன தெரியுமா? அமெரிக்கத் தளபதி மக் ஆர்தரை ஐ. நா. தளபதியாக மாற்ற வேண்டும் என்று உத்தரவுபோட்டன. உடனே மக் ஆர்தர் துரை நீலக் கொடியைத் தாங்கிக்கொண்டு நீலத் திரைக் கடல்மீது பறந்து வந்து சேர்ந்தார்......"

"அப்புறம்?......"

"அப்புறம் என்ன?...தென் கொரியாவின் மற்றொரு பிரதான நகரமான சுவான் வீழ்ந்தது......"

"பரமசிவா! அமெரிக்காவின் யுத்த மூஸ்திபைக் கண்டு வடகொரியர்கள் பின் வாங்கிப் போயிருப்பார்கள் என்றல்லவா எண்ணினேன்! இருக்கட்டும்; இப்போது தென் கொரியா எந்த நிலைமையில் இருக்கிறது? இதற்குள் அமெரிக்காவிலிருந்தும் இதர நாடுகளிலிருந்தும் ஏராளமான படை பலம் வந்திருக்க வேண்டுமே?......" என்று கேட்டது.

"சென்ற வாரம் பிரஸிடெண்ட் ட்ருமன் யுத்த சன்னாகத்துக்காகவும் ராணுவ விஸ்தரிப்புக்காகவும் நூறு கோடி டாலர் ஒதுக்கும்படி காங்கிரஸைக் கேட்டுக் கொண்டாராம். கைவசம் நானூறு அணுகுண்டுகள் இருப்பதாகவும் ஒரு செய்தி வந்தது..."

"ஓஹோ! அப்படியா சேதி! இந்தச் செய்திகளெல்லாம் ருஷ்யர்கள் காதிலும் பட்டிருக்க வேண்டும். இதற்குள் வடகொரியர்கள் பயந்து ஓடிப் போயிருப்பார்களே?......"

"நன்றாய்ச் சொன்னீர், இமயமலையாரே! பயந்து ஓடுவதும், பின்வாங்கிச் செல்வதும் வடகொரியர் ஜாதகத்தில் இல்லைபோலிருக்கிறது. இத்தகைய பயங்கரச் செய்திகள் அமெரிக்காவிலிருந்து வந்து கொண்டிருக்கும் போதே வடகொரியர்கள் 'கும்' நதியை ஓம்மென்று கடந்துவந்து டேஜோனைப் பிடித்துக் கொண்டார்கள். கடைசியில் டேஜோனும் வீழ்ந்தது. இப்போது பூசான் பிரதேசமான எனக்கு ஆபத்து நெருங்கிக் கொண்டிருக்கிறது. ஒரு பக்கம் டேஜோன் நகரம் பற்றி எரிகிறது. ஒரு பக்கம் தென் கொரியர்கள் 'தப்பினேன் பிழைத்தேன்' என்று பயந்து ஓடி வருகிறார்கள். மற்றொரு பக்கம் வடகொரியர்கள் என்னை நோக்கி வேகமாக முன்னேறி வந்து கொண்டிருக்கிறார்கள். மக் ஆர்தரும் அவருடைய ஹெட் 'குவாட்டர்ஸு'ம்' இன்றைக்கு இருக்குமிடத்தில் நாளைக் கிருக்கும் என்று எண்ணவோ இடமில்லையே!...... அண்ணனே!" என்றது பூசான்.

"தம்பி, பூசான்! இப்போது நீ கலங்கி என்ன பிரயோஜனம்? நான் செய்வதற்கு இதில் என்ன இருக்கிறது?" என்று கேட்டது இமயமலை.

பூசான்:— என்ன அப்படிச் சொல்லி விட்டீர்கள்? உலக நாடுகள் யாவும் இந்தியாவின் சமரச முயற்சியை எதிர்பார்த்து ஏங்கிக் கொண்டிருப்பதாகச் சொல்லுகிறார்களே? உங்கள் பிரதமர் ஜவாஹர்லால் நேரு ருஷ்யத் தலைவர் ஸ்டாலினுக்கும் அமெரிக்கத் தலைவர் ட்ருமனுக்கும் பிரிட்டிஷ் பிரதமர் அட்லிக்கும் சளையாமல் கடிதப் பரிவர்த்தனை நடத்திக் கொண்டிருக்கிறாராமே? அதில் ஏதாவது பிரயோஜனம் ஏற்பட்டிருக்கிறதா என்றுதான் கேட்கிறேன்.

ஹிமாசலம்:—வல்லரசுகள் அவ்வளவு சுலபமாக வழிக்கு வந்து விடுமா! வந்துவிட்டால் அவை வல்லரசுகள் ஆகுமா? இன்னும் கொஞ்சம்நாள் போகவேண்டும்.

பூசான்:— சரி, போகட்டும். இந்தியாவில் காஷ்மீருக்குள் ஏதோ சண்டையாமே? அதன் விவரம் என்ன?

"என்னுடைய அடிவாரத்தில்தான் அந்த அழகிய காஷ்மீரம் இருக்கிறது. காஷ்மீர் விவகாரத்துக்குக் கூடிய சீக்கிரம் ஒரு முடிவு ஏற்படலாம். மத்தியஸ்தர் ஸர் டிக்ஸனும், பாகிஸ்தான் பிரதமர் ஜனாப் லியாகத் அலிகானும் டில்லிக்கு வந்து, இந்தியாவின் பிரதமர் ஜவாஹர்லால் நேருவுடன் சம்பாஷணை நடத்திக் கொண்டிருக்கிறார்கள். மூவரும் கூடிக் கூடிப் பேசி ஒரு நல்ல முடிவுக்கு வருவார்கள் என்பதற்குச் சூசகங்கள் காண்கின்றன. வெகு காலத் தொந்தமான காஷ்மீர் விவகாரம் சுபகரமாக முடியும் என்று பாரத மக்களும், பாகிஸ்தான் மக்களும் ஆவலுடன் எதிர்பார்க்கிறார்கள். ஆனாலும் தம்பி பூசான்! உனக்கு ஒன்று சொல்ல வேண்டும். உலகத்தில் யுத்தங்கள் நடப்பதும், சாம்ராஜ்யங்கள் அழிவதும், மாநகரங்கள் மண்ணோடு மண்ணாக மறைவதும் நாம் எத்தனையோ பார்த்திருக்கிறோம். இவற்றைக் கண்டு நாம் சலனம் அடையும் வழக்கமில்லை. ஆகையால்தானே 'மலைபோல் சலனமற்று இருக்கவேண்டும்' என்று மகாத்மாக்களும் சொல்லுகிறார்கள்! ஆகையால் எது எப்படி யானாலும் நீ சலனமற்று நில்!" என்று ஹிமாசலம் உபதேசித்தது.

# பொய்மான்




★ ★ ★ பொய்மான் கரடுக்குச் சற்றுத் தூரத்தில் செங்கோடன் என்னும் குடியான வாலிபனின் குடிசை இருந்தது. அந்தக் குடிசையைத் தங்கள் தீய காரியத்துக்குப் பயன்படுத்திக் கொள்ளவும் அவன் புதைத்து வைத்திருந்த பணத்தை அடித்துக் கொண்டு போகவும் சில துஷ்டர்கள் முயன்றார்கள். அவர்களுடைய முயற்சியில் செங்கோடனுடைய காதலி செம்பவள வல்லி குறுக்கிட்டாள். பின்னர் அந்தப் பயங்கர சம்பவம் நிகழ்ந்தது....

(2

செங்கோடனிடம் குமாரி பங்கஜா தன்னுடைய சோகக் கதையைச் சொல்ல ஆரம்பித்த அதே சமயத்தில் செம்பவளவல்லியின் தாயிடம் அவளுடைய தந்தை சொன்னார்:— "எனக் கென்னமோ, நம்பிக்கை இல்லை,—இந்தக் கலியாணம் நடக்கும் என்று. இன்று காலையில் இங்கே செங்கோடன் அப்படி யெல்லாம் சக்கரவட்டமாகப் பேசினானே? சாயங்காலம் அவன் பொய்மான்கரடுக்குச் சமீபமாகப் போய்க் கொண்டிருந்ததைப் பார்த்தேன்!" என்றார்.

"இது என்ன அபசகுனப் பேச்சு? அந்தப் பிள்ளை ஏதாவது மண்ணெண்ணெய், நெருப்புப் பெட்டி வாங்கக் கடைக்குப் போயிருப்பான். அதற்காகக் 'கலியாணம் நடக்காது' என்று ஏன் சொல்ல வேண்டும்?" என்று கேட்டாள் செம்பாவின் தாயார்.

"என்னமோ 'கோல்மால்' நடந்து கொண்டிருக்கிறது! இவன் அங்கே போவதை அந்தப் பட்டணத்துக் காலிகள் ஒரு மரத்தின் பின்னாலிருந்து பார்த்துக் கொண்டிருந்தார்கள். செங்கோடனைச் சுட்டிக் காட்டி ஏதோ பேசிக் கொண்டார்கள். அந்தப் போலீஸ்காரர் வேறே அங்கு வளைய வளைய வந்து கொண்டிருக்கிறார். அவர்களுடன் வசிக்கும் பெண் பிள்ளை பாறைக்குப் பின்னால் ஒளிந்து கொண்டிருக்கிறான். எனக்கு என்னமோ சந்தேகமாயிருக்கிறது; செங்கோடன் பெரும் சங்கடத்தில் மாட்டிக் கொள்ளப் போகிறான்!" என்றார் கவுண்டர்.

"செங்கோடன் எதற்காகச் சங்கடத்தில் மாட்டிக் கொள்கிறான்? அந்தப் பட்டணத்து மனுஷர்களுக்கும் இவனுக்கும் என்ன வந்தது!" என்று கவுண்டரின் மனைவி கேட்டாள்.

"போலீஸ்காரர் என்னிடம் சொன்னதைச் சொல்கிறேன். நீ வேறு யாரிடமும் சொல்லி வைக்காதே! இந்த ஜில்லாவில் ஐம்பது அறுபது வருஷத்துக்கு முன்னால் கூழைக் காலன் என்று ஒரு பக்காத் திருடன் இருந்தான். கேள்விப் பட்டிருக்கிறாயா...?"

"கேள்விப் படாமல் என்ன? நான் செம்பாவை விடச் சிறு பெண்ணாயிருந்த போது கூழைக் காலனைப் பற்றிக் கதை கதையாய்ச் சொல்லுவார்கள். அவன் ஒரு தடவை ராசிபுரத்திற்கு வந்து..."

"சரி, நிறுத்து! உன் கதையை இப்போது எடுத்து விடாதே! அந்தக் கூழைக் காலன் கொள்ளையடித்த பணத்தை எங்கேயோ ஒரு இடத்தில் புதைத்து வைத்திருந்தானாம். அது இந்தப் பட்டணத்து ஆட்களிடம் எப்படியோ அகப்பட்டு விட்டதாம்.

# க்ஷாகு

கிடைத்த புதையலைச் சர்க்கார் கண்ணில் காட்டாமல் ஒளித்து வைக்க முயற்சி செய்து வருகிறார்களாம். அதற்கு நம் செங்கோடனும் உடந்தையா யிருக்கிறானாம். எல்லாரும் ஒரு நாள் ஜெயிலுக்குப் போகப் போகிறார்கள் என்று சொல்கிறார் போலீஸ்காரர்!"

"வெறுங் கதையாக வல்லவா இருக்கிறது? கூழைக் காலன் பணத்தைப் புதைத்து வைத்திருந்தால் அது நம்ம கையிலே யெல்லாம் அகப்படாமல் நேற்றைக்கு வந்த இவர்களிடம் அகப்பட்டு விடுமா? அப்படி அகப்பட்டாலும் அவர்கள் போயும் போயும் செங்கோடனைத் தானா தேடிப் பிடிக்க வேண்டும்? அவன்தான் அப்படிப்பட்ட காரியங்களில் தலையிடுவானா? அப்படி ஏதாவது இருந்தாலும் 'இதிலெல்லாம் நீ சிக்கிக் கொள்ளாதே!' என்று செங்கோடனுக்கு நீங்கள் புத்தி சொல்ல வேண்டாமா? உலகக் தெரியாத பிள்ளையை இப்படி விட்டு வேடிக்கை பார்ப்பார்களா?" என்றாள் செம்பாவின் தாயார்.

"செங்கோடனுக்கு எச்சரிக்கை செய்யலாம் என்றுதான் நானும் பார்த்தேன். ஆனால் அந்தப் போலீஸ்காரர் உண்மையைக் கண்டு பிடிக்கும்வரையில் பொறுத்திருக்கச் சொல்கிறார்..."

"என்னத்திற்கு பொறுத்திருக்கிறது? அந்தப் பிள்ளையையும் சேர்த்து ஜெயிலுக்கு



அனுப்புவதற்கா? போலீஸ்காரர் சொல்வது நன்றாயிருக்கிறதே! அடுத்த வீட்டுப் பிள்ளையைக் கேணியில் போட்டு ஆழம் பார்க்கிற கதையா யிருக்கிறதே!"

"செங்கோடனை எப்படியாவது தப்பித்து விடுகிறதாகச் சத்தியம் செய்து கொடுத்திருக்கிறார்."

"அதை யெல்லாம் நீங்கள் நம்பாதீங்க! நாளைக்கே அந்தப் பிள்ளையைக் கூப்பிட்டுச் சொல்லிவிட்டு மறுகாரியம் பாருங்கள்!"

மேற்படி சம்பாஷணையைச் செம்பா ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்தாள். செங்கோடனைப் பற்றித் தன் பெற்றோர்கள் பேசுவதை அவள் எப்படி ஒட்டுக் கேட்காமல் இருக்க முடியும்? அதுவரையில் உற்சாகமாக இருந்தவளுடைய மனதில் இப்போது கவலையும் பயமும் தோன்றின. மறுநாள் வரையில் காத்திருக்க அவள் விரும்பவில்லை. உடனே அவரிடம் சொல்லியாக வேண்டும்! மேலும் முதல் நாள் சாயங்காலம் வைக்கோல் கட்டின்மேல் உட்கார்ந்து சல்லாபம் செய்ததெல்லாம் அவளுடைய ஞாபகத்தில் பதிந்திருந்தது. அந்த நினைவும் அவளுடைய ஆர்வத்தை அதிகப்படுத்தியது.

தாயும் தகப்பனும் கவனியாத சமயத்தில் வீட்டை விட்டுக் கிளம்பிச் செங்கோடனுடைய கேணியை நோக்கிப் புறப்பட்டாள். போகும்போது யோசித்துக் கொண்டே சென்றாள். அப்பா சொன்னவிஷயம் சரியாயிருக்கும் என்றே அவளுக்குத் தோன்றவில்லை. அந்தப் போலீஸ்காரர் அப்பாவை நன்றாய் ஏமாற்றி யிருக்கிறார். செங்கோடனை ஜெயிலுக்கு அனுப்பிவிட்டுத் தன்னைக் கலியாணம் செய்து கொள்ள எண்ணுகிறார்! ஓகோ! சிகப்புத்தலைப்பாக்காரரே! அப்படியா உன் உத்தேசம்? செம்பாவிடம் அதெல்லாம் நடக்குமா? ஒரு நாளும் இல்லை! செம்பா செத்தாலும் சாவாளே தவிர, செங்கோடனை யன்றி வேறு யாரையும் கலியாணம் செய்து கொள்ள மாட்டாள்!

ஒரு வேளை இப்படியும் இருக்கலாம்: அந்தப் பட்டணத்து ஆட்களும் அந்த வெட்கங்கெட்ட சூர்ப்பனகையும் அந்தப் போலீஸ்காரரும், — எல்லாரும் ஒரு கட்சியா யிருக்கலாம்! கூழைக் காலன் புதையலாவது? மண்ணாங்கட்டியாவது? — எல்லாருமாகச் சேர்ந்து கொண்டு செங்கோடன் கஷ்டப்பட்டுச் சேர்த்து வைத்திருக்கும் பணத்தைப் பறிக்கப் பார்க்கிறார்கள்! அதற்காகத்தான் ஏதோ பெரிய சூழ்ச்சி செய்கிறார்கள்! ......... பெண்ணே! செம்பா! உன்னுடைய சமர்த்தை நீ காட்ட வேண்டும். பணம் போய்விட்டால் செங்கோடனுக்குப் பிராணன் போய்விடும். அல்லது பைத்தியமே பிடித்தாலும் பிடித்துவிடும். பணத்தை நீ காப்பாற்றிக் கொடுத்தால் செங்கோடன் எவ்வளவோ சந்தோஷப்படுவான். என்றைக்கும் உன் அடிமையா யிருப்பான்! ஆகையால் செங்கோடனுடைய பணத்தைக் காப்பாற்றிக் கொடுப்பது உன்னுடைய பொறுப்பு! குடும்ப வாழ்க்கையில் நீ சந்தோஷமா யிருப்பதெல்லாம் இது விஷயத்தில் நீ செய்வதைப் பொறுத்திருக்கிறது!

செம்பாவுக்குச் சாதாரணமாகப் பயம் என்பதே கிடையாது. "பேயும் பிசாசும் என்னை என்ன செய்யும்? என் கிட்டப் பிசாசு வந்தால் கன்னத்தில் நாலு அறை அறைந்து அனுப்ப மாட்டேனா!" என்பாள். இருட்டு நேரங்களில் சிறிதும் பயமின்றி எங்கும் போவாள். ஆனால் இன்றைக்கு என்னமோ, அவளுடைய உள்ளத்தில் அடிக்கடி பயம் புகுந்து வேதனை செய்தது. இருட்டைக் கண்டே பயமா யிருந்தது. 'இருட்டில் திடீரென்று யாராவது திருடன் எதிர்ப்பட்டாலோ......' என்று எண்ணியபோது நெஞ்சு பட படவென்று அடித்துக் கொண்டது. கால்கள் தடுமாறின. வயற் காட்டில் அங்கங்கே தெரிந்த சிறிய மொட்டைப் பாறைகளுக்குப் பின்னால் திருடர்கள் ஒளிந்திருப்பார்கள் என்று தோன்றியது. கூழைக் காலன், செவிட்டுக் காதன், நொண்டிக் கையன், குருட்டுக் கண்ணன் முதலிய பயங்கரமான கொள்ளைக்காரர்கள் அவளைச் சுற்றிலும் சூழ்ந்து கொண்டதாகப் பிரமை உண்டாகி அடி வயிற்றில் திகில் ஏற்பட்டது. தொண்டை வறண்டது. நா உலர்ந்தது. ஆனால் அவளுடைய நடையின் வேகம் மட்டும் குறையவில்லை.

செம்பா! நீ இப்படி மென்ன நடந்து கொண்டிருக்கையில் செங்கோட னுக்கு என்ன ஆபத்தோ! அல்லது அவனுடைய பணத்துக்குத்தான் என்ன ஆபத்தோ?...... சின்னனுக் குக் கூடச் காய்ச்சல்; ஒரு வாரமாய் வேலைக்கு வருவதில்லை. ஆகையால் இவர் எங்கேயாவது போய்விட்டால் குடிசைக்குக் காவல் கிடையாது! ஆண்பிள்ளைகளின் அசட்டுத்தனத்தை என்னவென்று சொல்லுவது? நாலு வருஷம் கஷ்டப்பட்டுச் சேர்த்த பணத் தைத் தரையில் தோண்டி வைத்து விட்டுச் சாயங்கால நேரங்களில் வெளியிலே போகலாமா? இந்தக் காலத்திலும் கூழைக்காலனைப் போன்ற திருடர்கள் இல்லாமலா போகிறார்கள்? ஒரு வேளை இதே நிமிஷத்தில் — எந்தத் திருடனாவது தரையைத் தோண்டிப் புதைத்துவைத் திருந்த பணத்தை எடுத்துக் கொண் டிருக்கலாம்!...... இந்த எண்ணம் செம்பாவின் கால்களுக்கு அதிகமான துரிதத்தைக் கொடுத்தன!

குடிசைக்குக் கிட்டத் தட்ட அரு கில் வந்தபோது, நாய் குரைக்கும் சத்தம் கேட்டுத் திடுக்கிட்டு நின்றாள். குரைப்புச் சத்தம் இரண்டு தடவை தான் கேட்டது. அதற்குப் பிறகு, —அம்மம்மா! அந்தப் பயங்கரத்தை என்னவென்று சொல்வது? குரைத்த நாயின் நீண்ட ஊளைக் குரல் கேட் டது. அந்தச் சகிக்க முடியாத தீன மான சோகக்குரல் கொஞ்சம் கொஞ்ச மாக மௌனமாகிக் கடைசியில் மறைந் தது. நாய் ஊளையிடும் சத்தம் கிராமங் களில் அடிக்கடி கேட்கக் கூடியது தான். ஆயினும் இப்போது கேட்ட ஊளைச் சத்தம் செம்பாவைக் கலக்கி விட்டது. ஆடிக் காற்றில் சோளப் பயிர் ஆடுவது போல் அவளுடைய உடம்பு ஆடிற்று; கைகளும் கால் களும் நடுநடுங்கின. நாய் ஊளையிடு வது சாவுக்கு அடையாளம் என்று சொல்லக் கேட்டிருந்தாள். யாராவது மனித உயிரைக் கொண்டு போக யமராஜன் வரும்போது, நாயின் கண் களுக்கு அவனுடைய தோற்றம் புலப் பட்டு விடுமாம்! அதனால் நாய் ஊளை யிடுமாம்!...... இந்தப் பேச்சு உண் மையா? அப்படி யென்றால், இப் போது ஏதேனும் சாவு ஏற்படப் போகிறதா? ஐயோ! யமன் யாருக் காக வருகிறானோ தெரியவில்லையே?— இங்கே யார் இருக்கிறார்கள்! ஒரு வரையும் காணோமே? குடிசை நிச் சப்தமாய் இருக்கிறதே! நேற்று இங்கு வந்தபோது வைக்கோற் கட் டின் மேல் செங்கோடன் உற்சாக மாக உட்கார்ந்து தெம்மாங்கு பாடி னானே?—அந்த இடம் இப்போது காலியாய், வெறிச் சென்று இருக் கிறதே!—சுவாமி! முருகக்கடவுளே! காளியம்மா! தெய்வங்களே! ஒன் றும் நேராமல் காப்பாற்றுங்கள். செங்கோடனைக் காப்பாற்றுங்கள். என்னைக் காப்பாற்றுங்கள். எல்லா ரையும் காப்பாற்றுங்கள்!......

அது என்ன? சரசரவென்று கேட் கும் சத்தம் என்ன? அதோ பேச்சுக் குரல் கேட்கிறதே! சோளக் கொல்லை யில் புகுந்து யாரோ இரண்டு பேர் வருகிறார்களே!......இல்லை; வருகிறது செங்கோடன் இல்லை! அப்பா சொன்ன பட்டணத்து ஆசாமிகள்! எதற்காக இங்கே வருகிறார்கள்? ஒரு வன் தலைமீது ஏதோ சுமந்து வரு கிறானே, அது என்ன? இன்னொரு வனும் கையில் ஏதோ பெட்டிமாதிரி எடுத்துக் கொண்டு வருகிறான்!— ஒரு வேளை அப்பாவிடம் போலீஸ் காரர் சொன்னது உண்மைதானோ? கூழைக்காலன் புதையலை ஒளித்து வைக்க வருகிறார்களோ?......செங் கோடனை மாட்டி வைத்து ஜெயிலுக்கு அனுப்ப ஏற்பாடு செய்கிறார் களோ?......செங்கோடன் எங்கே? ஏன் இன்னும் வரவில்லை? இருட்டி இத்தனை நேரம் வெறிடத்தில் என்ன வேலை? இவர்கள் ஏதோ சூழ்ச்சி செய்து செங்கோடனை ஏமாற்றிவிட்டு வந்திருக்கிறார்கள் போலிருக்கிறது!

நாய் குரைத்ததே! — அது எந்த நாய்? — அது ஏன் அப்படி ஊளை யிட்டது?— அப்புறம் அதன் குரலைக் காணோமே, ஏன்? செத்துப் போய் விட்டதோ? ஒரு வேளை இவர்கள் தான் கொன்று விட்டார்களோ?

இதோ கேணி அருகில் வந்து விட் டார்கள்! அவர்கள் கண்ணில் படக் கூடாது. இந்தச் சோளத் தட்டைக் குவியலுக்குப் பின்னால் ஒளிந்து கொள்

ளலாம். ஒளிந்து கொண்டு இவர்கள் என்ன செய்கிறார்களோ, பார்க்கலாம்! தனியாக ஏன் வந்தேன்? அப்பாவையாவது, தம்பியையாவது அழைத்து வராமற் போனேனே? இந்தமாதிரி ஏதோ நடக்கப்போகிறது என்று யாருக்குத் தெரியும்? கூப்பிட்டாலுங்கூட அவர்கள் வந்திருக்க மாட்டார்கள். நான் வருவதைக்கூடத் தடுத்து நிறுத்தி யிருப்பார்கள்!......

ஆ! அது என்ன 'பொத்' என்ற சத்தம்! அப்புறம் சலசலப்புச் சத்தம்! கிணற்றில் பெரிய கல்லைத் தூக்கிப் போட்டதுபோல்!...... அந்த மனுசன் கேணிக் கரையில் நின்று குனிந்து பார்க்கிறான்! அவன் தலையில் தூக்கிக் கொண்டு வந்ததைக் கேணிக்குள்ளே போட்டிருக்க வேண்டும்! அதனால் தான் அந்தச் சத்தம் கேட்டிருக்கிறது! கேணியில் என்னத்தைப் போட்டான்! ரொம்ப கனமான சாமானாக இருக்க வேண்டும்! அதனாலேயே அவ்வளவு சத்தம் கேட்டது! என்ன சாமானைப் போட்டிருப்பான்? — செம்பாவின் உடம்பெல்லாம் சிலிர்த்தது! சொல்ல முடியாத பயங்கரம் அவனைப் பிடித்தது! ஆளைக் கொலை செய்து சாக்கில் போட்டுக் கட்டிக் கிணற்றில் போட்ட ஒரு பயங்கர சம்பவத்தைப் பற்றி அவன் சமீபத்தில் கேள்விப் பட்டிருந்தான்! ஒரு வேளை அப்படி யிருக்குமோ? யாரை அப்படிக் கொன்று சாக்கில் கட்டிக் கொண்டு வந்திருப்பார்கள்! ஐயோ! ஒரு வேளை செங்கோடனை! — செம்பாவைச் சுண்ணாம்புக் காளவாயில் போட்டு எரித்தது போல இருந்தது.

அவர்கள் ஏதோ பேசுகிறார்கள். ஒருவன் சொல்கிறான்:— "என்னடா, கேணிக்குள்ளே பார்த்துக் கொண்டு நிற்கிறாய்? தண்ணீரில் மிதக்கும் என்று பயமா? ஓ! சீக்கிரம் வா! அந்தப் பைத்தியக்கார செங்கோடக் கவுண்டன் — திடீரென்று எதையாவது நினைத்துக் கொண்டு ஓடி வந்து தொலைப்பான்! அதற்குள் காரியத்தை முடிக்க வேண்டும்!"

அதற்கு இன்னொருவன், "வந்தால் வரட்டும்! செங்கோடன்தான் வரட்டும், அவன் பாட்டன் வேணுமானாலும் வரட்டும்!" என்று சொல்கிறான்.

ஆகையால் அவருடைய உயிரைப் பற்றிக் கவலையில்லை. அவரை எங்கேயோ நிறுத்தி வைத்து விட்டு இவர்கள் வந்திருக்கிறார்கள். எதற்காக? கிணற்றில் என்ன போட்டார்கள்? இன்னும் என்ன செய்யப் போகிறார்கள்?

இதோ குடிசையை நோக்கி வருகிறார்கள். ஒருவனுடைய கையில் ஏதோ பெரிய மூட்டையைப்போல் இருக்கிறது. அவர்களுடைய கண்ணில் நான் படக் கூடாது!—சோளத் தட்டைக் குவியலுக்கு அடியில் செம்பா நன்றாக ஒளிந்து மறைந்து கொண்டான். அவனுடைய காதுகள் மட்டும் வெகு கூர்மையாகக் கவனித்துக் கேட்டுக் கொண்டிருந்தன. ஊசி விழும் சத்தம்கூட அவனுக்குக் கேட்டிருக்கும். குடிசையின் கதவைப் பலாத்காரமாகத் திறக்கும் சத்தம் கேட்காது போகுமா?

வந்த மனிதர்கள் பூட்டோடு காதாங்கியைக் கழற்றி விட்டுக் கதவைத் திறந்து உள்ளே போனார்கள். பிறகு செம்பாவும் எழுந்து நின்று குடிசைப் பக்கம் கவனித்துப் பார்க்கத் தொடங்கினான். அவன் நின்ற இடத்துக்கு நேரே, குடிசைச் சுவரில் காற்றோட்டத்துக்காக வைத்திருந்த துவாரப் பலகணி இருந்தது. ஆகையால் உள்ளே நடப்பதை யெல்லாம் அங்கிருந்தே பார்க்கலாம்.

இரண்டு மனிதர்களும் உள்ளே போனார்கள். ஏதோ பேசிக் கொண்டார்கள். இருட்டில் அவர்கள் தடுமாறும் சத்தம் கேட்டது. பிறகு தீக்குச்சி கிழிக்கும் சத்தமும் கேட்டது. சற்று நேரத்துக்கெல்லாம் விளக்கு வெளிச்சம் தெரிந்தது. இன்னும் சிறிது நேரத்துக்கெல்லாம் ஒரே பிரகாசமாய்த் தெரிந்தது. குடிசைக்குள்ளே தீப்பிடித்துப் பற்றி எரிவது போலத் தோன்றியது. செம்பா திகிலினால் வாயடைத்துப் போயிரா விட்டால் 'ஐயோ!' என்று அலறி யிருப்பான். அச்சமயம் பயத்தினால் அவனுடைய வாய் அடைத்துப் போயிருந்ததும் கால் செயலற்றுப் போயிருந்ததும் நல்லதாய்ப் போயிற்று. ஏனெனில் சிறிது நேரத்துக்கெல்லாம் குடி

சைக்குள் நெருப்பின் பிரகாசம் மெது வாகக் குறையத் தொடங்கியது.

"மடையா! இப்படி ஒரே அடியாகக் கொளுத்துகிறாயே? வெளியே தெரியுமே? கொஞ்சம் கொஞ்சமாகக் கொளுத்து! எல்லாவற்றையும் கொளுத்தி விடாமல் பாக்கி கொஞ்சம் வைத்திரு! கவுண்டனுடைய புதையல் உண்மையா யிருந்தால் அதற்குப் பதிலாக நம்முடைய சரக்கில் கொஞ்சம் வைத்து விட்டுப் போகலாம்!" என்றான் ஒருவன். "அதெல்லாம் என்னத்துக்கு அப்பா, வீண் வம்பு? நம் காரியம் ஆனதும் ஒரேயடியாய்க் குடிசைக்கு நெருப்பு வைத்து விட்டுப் போகலாம்!" என்றான் மற்றவன். அட சண்டாளப் பாவிகளா! இப்படியா மனதில் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? நான் ஒருத்தி இருக்கிறேன்! குடிசையில் நீங்கள் நெருப்பு வைப்பதற்கு முன்னால் உங்களை ......

என்ன செய்ய முடியும்? அவர்களை என்ன செய்ய முடியும்? தன்னந் தனியாக ஒரு பெண் இரண்டு ஆண் பிள்ளைகளை — கொலைகாரப் பாவிகளை — என்ன செய்ய முடியும்? — ஏன் முடியாது? ஏதாவது செய்து தான் ஆக வேண்டும்! ஒரு பெரிய கல்லைத் தூக்கி அவர்கள் தலையில் போட்டால் என்ன? எப்படிப் போடுகிறது? எங்கிருந்து போடுகிறது? கல் எங்கே இருக்கிறது? அவர்கள் பார்த்து விட்டால் ..... செங்கோடனிடம் ஜம்பமாக அன்று கத்தியை எடுத்துக் காட்டினேனே! அது இப்போது கையில் இல்லாமல் போய் விட்டதே?— இருந்தால்தான் என்ன? இரண்டு ஆண் பிள்ளைகளை எதிர்த்து ... சீச்சீ! அவர்கள் ஆண் பிள்ளைகளா? திருடர்கள்! பெண் பிள்ளைகளை விடக் கேடானவர்கள்!

குடிசைக்குள்ளே இப்போது சிறிய விளக்கின் ஒளி மட்டுமே தெரிந்தது. ஆனால் 'தங்' 'தங்' என்று சத்தம் கேட்கத் தொடங்கியது. அது என்ன சத்தம்? தரையை இடித்துத் தோண்டும் சத்தம்! எதற்காகத் தரையைத் தோண்டுகிறார்கள்? செங்கோடனுடைய பணத்தைக் கொள்ளையிடுவதற்குத்தான்! எங்கே புதைத்து வைத்திருக்கிறான் என்று இவர்களுக்குத் தெரியுமா? எனக்கே தெரியாதே? இவர்களுக்கு எப்படித் தெரிந்தது? கண்ட கண்ட இடத்தில் தோண்டிப் பார்க்கிறார்களா? — அல்லது ஏமாற்றித் தெரிந்து கொண்டார்களா?— ஐயையோ! நாலு வருஷம் உழைத்துப் பாடுபட்டுச் சேர்த்த பணத்தை — சேலம் முதலியாரின் நிலத்தை வாங்குவதற்காக வைத்திருக்கும் பணத்தை— இவர்கள் கொண்டு போகவிட்டு விடுவதா? — முடியாது! இந்தச் செம்பாவின் உடம்பில் உயிர் இருக்கும் வரையில் அது முடியாத காரியம்.

செம்பாவின் உடம்பில் தெம்பும் மனதில் ஊக்கமும் பிறந்தன. சோளத் தட்டைக் குவியலை விட்டு நகர்ந்து மெள்ள மெள்ள நடந்து குடிசையை நோக்கிச் சென்றாள். சுவர் ஓரமாக வந்து பலகணித் துவாரங்களின் வழியாக உள்ளே பார்த்தாள்.

அந்தக் குடிசைக்குள்ளே இரண்டு அடுப்புகள் உண்டு என்பது செம்பாவுக்குத் தெரியும். ஒரு அடுப்பில் எப்போதும் சாம்பல் குவிந்து கிடக்கும். அந்த அடுப்பைப் பெயர்த்து எடுத்துப் பக்கத்தில் வைத்திருந்தார்கள். அவர்களில் ஒருவன் சிறிய கடப்பாறையினால் அங்கே தோண்டிக் கொண்டிருந்தான். இன்னொருவன் தோண்டிய குழியிலிருந்து மண்ணை எடுத்து வெளியில் போட்டான். கடப்பாறை விழுந்த போது 'தங்' 'தங்' என்று கேட்ட சத்தம் ஒரு தடவை 'டங்' என்று கேட்டது.

"இருக்கிறது, அப்பா, புதையல் இருக்கிறது! கவுண்டன் கஞ்சா போதையில் சொன்னது பொய்யல்ல!" என்று ஒருவன் சொன்னான்.

"நீதானே சந்தேகப் பட்டாய்!" என்றான் இன்னொருவன்.

ஆகா! இந்தப் பாவிகள் இப்படியா செய்கிறார்கள்? நாலு வருஷம் பாடுபட்டுத் தேடிய பணத்தை அடித்துக் கொண்டு போகவா பார்க்கிறார்கள்? இதை எப்படித் தடுப்பது? கூக்குரல் போடலாமா? பிசாசுமாதிரி தலையை விரித்துப் போட்டுக் கொண்டு உள்ளே போய்ப் பயமுறுத்தலாமா? அல்லது...

எங்கேயோ தூரத்தில் பேச்சுக் குரல் கேட்கிறது போலிருக்கிறதே! ஆம்! தெய்வம் எனக்குத் துணை

அனுப்புகிறதா? யார் வந்தாலும் நல்ல சமயத்தில்தான் வருகிறார்கள்! அவர்கள் யாரா யிருக்கும்? ஒருவேளை இந்தத் திருடர்களைச் சேர்ந்தவர்களாகவே யிருந்தால்?.........தெய்வம் அப்படியும் என்னைச் சோதிக்குமா?

செம்பாவின் காதில் விழுந்த பேச்சுக் குரல் குடிசைக்குள் இருந்தவர்களின் காதிலும் கேட்டது. தோண்டிக் கொண்டிருந்தவன் சட்டென்று நிறுத்தினான். காது கொடுத்து இருவரும் கேட்டார்கள். ஏதோ மெல்லிய குரலில் பேசிக் கொண்டார்கள். கடைசியில், "நீ போ! யாராயிருந்தாலும் கொஞ்ச நேரம் தடுத்து நிறுத்து! அதற்குள் காரியத்தை முடித்து விடுகிறேன்!" என்று கூறியது கேட்டது. "விளக்கை அணைத்து விடு! எனக்கு விளக்கு வெளிச்சம் வேண்டாம்! நிலா வெளிச்சமே போதும்!" என்று அவன் சொல்லியதும் செம்பாவின் காதில்விழுந்தது.

ஒருவன் எழுந்து விளக்கை அணைத்து விட்டு வெளியில் விரைவாகச் சென்றான். இன்னொருவன் வேகமாகத் தோண்டினான். மறு நிமிஷம் குழியிலிருந்து ஒரு செப்புத் தோண்டியை எடுத்து வெளியில் வைத்தான். பெண்ணே! செம்பா! இதோ உன் சந்தர்ப்பம் வந்து விட்டது! போ! துணிச்சலாகப் போ! குடிசைக்குள் சென்று உன் காதலனுடைய பொருளைக் காப்பாற்று! தயங்காதே! போ! போ!...........



## 13

செங்கோடன் முதலில் கொஞ்ச நேரம் குடல் தெறிக்க ஓடினான். பிறகு அவனுக்கே "எதற்காக இப்படி ஓடுகிறோம்? என்ன பைத்தியக்காரத்தனம்?" என்று தோன்றியது. ஓட்டம் நடையாக மாறியது. குடிசையில் தான்பார்த்த வெளிச்சம் உண்மையாகப் பார்த்ததா அல்லது வீண் பிரமையா என்ற ஐயம் உதித்தது. திருடவந்தவர்கள் அவ்வளவு பெரிய வெளிச்சம் போட்டுக் கொண்டா திருடுவார்கள்? அவ்வளவு துணிச்சலுடன் திருடவரக் கூடியவர்கள்தான் யார்? அந்தப் பட்டணத்துச் சோம்பேறிகளுக்கு அவ்வளவு தைரியமா?—ஒருநாளும் இராது!—வீண் பயம்!—ஒருவேளை செம்பா வந்திருப்பாள். தன்னைக் காணுதபடியால் சிறிது நேரம் காத்திருக்கலாமென்று விளக்கேற்றி இருப்பாள்.... இருந்தாலும் குடிசை ஓலைக் குடிசை! பக்கத்தில் வைக்கோலும் சோளத்தட்டையும் போர் போட்டிருக்கிறது. விளக்கேற்றும் போதுகூட ஜாக்கிரதையாக ஏற்ற வேண்டும். ஆனால் செம்பா மிகக் கெட்டிக்காரி! அவளுக்கு ஜாக்கிரதை சொல்லித்தர வேண்டியதில்லை......

நடை கொஞ்சம் மெதுவானதும் "கவுண்டரே! கவுண்டரே!" என்று கூச்சல் போட்டுக் கொண்டு ஓடி வந்து குமாரி பங்கஜா செங்கோடனுடைய கையைப் பிடித்துக் கொண்டாள். "இப்படி என்னை விட்டுவிட்டு ஓடி வரலாமா!" என்று கேட்டாள்!

"சனியனே! நீ விடாமல் தொடர்ந்து வந்து விட்டாயா? நீ வருவது தெரிந்திருந்தால் ஓட்டத்தை நிறுத்தி யிருக்கமாட்டேனே?" என்றான்.

கையை உதறிக் குமாரி பங்கஜாவைத் தடுமாறிக் கீழே விழச் செய்து

விட்டுச் செங்கோடன் மறுபடியும் விரைவாக நடந்தான்.

"ஐயோ! நான் விழுந்து விட்டேன். கொஞ்சம் இரு! என்னைத் தூக்கி விடு!" என்று பங்கஜா கத்தினள்.

செங்கோடன் அவனைத் திரும்பியே பார்க்காமல் நடந்தான்.

குடிசைக்குச் சுமார் நூறு கஜ தூரத்தில் வந்தபோது, சோளக் கொல்லையில் ஏதோ வெள்ளையாய் விழுந்து கிடப்பது அவன் கண்ணில் பட்டது. ஒரு தீனமான, பரிதாப மான, இதயத்தைப் பிளக்கும் துன்ப ஒலியும் கேட்டது. அது என்ன வென்று பார்க்காமல் செங்கோடனால் மேலே போக முடியவில்லை. அருகில் போய்ப் பார்த்தான். அது ஒரு நாய். அது சாகும் தறுவாயில் கிடந்தது. அதன் வயிற்றிலிருந்து இரத்தம் சிந்திக் கொண்டிருந்தது.

ஐயோ! இந்த வாயில்லாப் பிராணி இங்கே எப்படி வந்தது? எந்த மகா பாவி இதை வயிற்றில் குத்திக் கொன்றான்?...ஆஹா! அந்தப் போலீஸ் காரருடைய உயர்ந்த ஜாதி நாய் அல்லவா இது? இங்கே எப்படி வந்தது? யார் இதைக் குத்தியிருப்பார்கள்?

நாயைப் பார்த்ததினால் செங்கோடனுடைய மனதில் திகில் அதிகமாயிற்று. அதோடு ஆத்திரமும் பரபரப்பும் மிகுந்தன. குடிசையை மேலும் அணுகிச் சென்றான். ஆனால் இப்போது சர்வ ஜாக்கிரதையுடன்—எந்த வித ஆபத்துக்கும் தயாராக நடந்தான். நாயைப் பார்ப்பதற்காக நின்ற நேரத்தில் குமாரி பங்கஜா அவனை வந்து பிடித்து விட்டாள். சள சள வென்று ஏதோ அவனைக் கேள்விகள் கேட்டுப் பேச வைக்க முயன்றாள். எதற்காக இவள் இவ்வளவு கூச்சல் போட்டுப் பேசுகிறாள்? செவிடனுடன் பேசுவதுபோலப் பேசுகிறாளே? ஏன்?

கேணிக்கரை மேடும் அதன் அருகில் தென்னைமரமும் குடிசை வாசற் புறத்தை மறைத்துக் கொண்டிருந்தன. ஆனால் அந்தப் பக்கத்திலிருந்து ஒரு



மனிதன் வெளிப்பட்டு வந்தது தெரிந்தது. அவன் யார் என்று சீக்கிரத்திலேயே தெரிந்துவிட்டது. எஸ்ராஜ் என்பவன்தான். இவன் ஏன் இங்கே வந்தான்? இன்னொருவன் எங்கே?—சந்தேகித்ததெல்லாம் உண்மைதான் போலிருக்கிறது. செங்கோடா! உன்னை இந்தப் பட்டணத்துச் சோம்பேறிகள் ஏமாற்றி விட்டார்களா? நல்ல வேளை! காரியம் மிஞ்சிப் போவதற்குள் வந்து விட்டாய்! பார் ஒரு கை!

செங்கோடன் ஒரு கை பார்க்க யத்தனிப்பதற்குள்ளே வேறு காரியங்கள் நடந்துவிட்டன.

"எஸ்ராஜ்! எஸ்ராஜ்! இந்தக் கவுண்டன் என் கன்னத்தில் அறைந்தான்! விடாதே இவனை! இங்கேயே கொன்று குழியை வெட்டிப் புதைத்து விடு!" என்று குமாரி பங்கஜா கத்தினாள்.

"அப்படியா! உன்னையா இந்தப் பட்டிக்காட்டான் தொட்டு அடித்தான்? அவ்வளவுக்கு ஆகிவிட்டதா! இதோ பார்! ஒரு பாடம் சொல்லிக் கொடுக்கிறேன்!" என்று எஸ்ராஜ் கர்ஜித்துக் கொண்டே செங்கோடனுடைய மார்பில் ஒரு குத்து விட்டான்.

அவ்வளவுதான்! செங்கோடனுடைய உள்ளத்தில் குமுறிக் கொண்டிருந்த எரிமலை பொங்கியது. எஸ்ராஜின் மார்பிலும் தலையிலும் முதுகிலும் முகவாய்க்கட்டையிலும்,—கண்ட கண்ட இடங்களிலெல்லாம் செங்கோடனுடைய இரும்புக் கைகள் சரமாரியாக அடிகளையும் குத்துக்களையும் பொழிந்தன.

"ஐயோ!" "அப்பா!" "போதும்" "வேண்டாம்!" என்னும் எஸ்ராஜின் அபயக் குரல்கள் செவிடன் காதில் ஊதின சங்காகவே முடிந்தன.

இவர்கள் இருவரும் இவ்விதம் முஷ்டி யுத்தம் செய்து கொண்டிருக்கையில் குமாரி பங்கஜா குடிசையை நோக்கிச் சென்றாள். கேணிக் கரையில் ஏறி அப்பாலும் இறங்கிவிட்டாள்.

அச்சமயம் குடிசைக்குள்ளேயிருந்து "ஐயோ ஓ ஓ ஓ!" என்ற ஒரு நீடித்த பரிதாப ஓலம் கேட்பவர்களின் உடம்பின் இரத்தத்தைச் சுண்டச் செய்யும் பயங்கரத்துடன் எழுந்தது. அதே குரல் ஒரு கணம் நின்று, மறுபடியும், "ஆ! செத்தேன்!" என்று அலறியது. பிறகு, ஒரு நீண்ட முக்கல், விம்மல், அப்புறம், நிச்சப்தம்.—சகிக்க முடியாத நிச்சப்தம்.

முதல் ஓலத்திலேயே எஸ்ராஜும் செங்கோடனும் சண்டையை நிறுத்தி விட்டார்கள். மறு ஓலத்திற்குப் பிறகு இருவரும் குடிசையை நோக்கி ஓடினார்கள். அவர்களுக்கு எதிர்ப்புறமாக வந்த குமாரி பங்கஜா கேணி மேட்டில் செங்கோடன்மேல் முட்டிக் கொண்டாள்.

"பங்கஜா! என்ன? என்ன?" என்று நடுங்கிய குரலில் எஸ்ராஜ் கேட்டான்.

"தெரியவில்லையே? ஐயோ! தெரியவில்லையே?" என்றாள் பங்கஜா.

"சத்தம் குடிசைக்குள்ளிருந்தா?"

"ஆமாம்"

"நீ அங்கே—குடிசைக்குள்ளே—போனாயா?"

"இல்லை; வாசலண்டை போனதும் சத்தம் கேட்டது. திரும்பிவிட்டேன்!"

"கவுண்டரே! தீக்குச்சிப் பெட்டி வைத்திருக்கிறீரா? உள்ளே போய்ப் பார்க்க வேண்டுமே?"

"பார்க்க வேண்டும்; பார்க்கத்தான் போகிறேன். முதலில் நிஜத்தைச் சொல்! எதற்காக இங்கே இந்த நேரத்தில் வந்தாய்? உன்னுடன் யார் வந்தது? குடிசைக்குள் யார்? என்ன செய்தீர்கள்?"

"அதெல்லாம் அப்புறம் சொல்கிறேன். கவுண்டரே! முதலில் உள்ளே போய்ப் பார்க்கலாம்."

"அப்படியானால் நீங்கள் இரண்டு பேரும் என்னுடன் வாருங்கள். ஓடிப் போய் விடாதீர்கள்!"

"சத்தியமாய் நாங்கள் ஓடவில்லை. எப்படி ஓட முடியும்? நடந்ததைத் தெரிந்து கொள்ளாமல்? ...... நீர் முதலில் தீக்குச்சிப் பெட்டியைக் கண்டு பிடித்து விளக்கைப் பொருத்தும்!"

நிலா வெளிச்சத்தில் எஸ்ராஜ், பங்கஜா இவர்களுடைய முகங்களைச் செங்கோடன் பார்த்தான். அந்த முகங்களில் பீதி குடி கொண்டிருந்தது. அவர்களுடைய கால்களும் கைகளும் வெடவெட வென்று நடுங்கின.

செங்கோடனுக்கும் திகிலாய்த்தான் இருந்தது. ஆயினும் மர்மம் இன்னதென்று தெரிந்து கொள்ள அவன் ஆவல் கொண்டிருந்தான். அதுமட்டுமா? சாம்பல் குவிந்த அடுப்பின் அடியில் யாருக்கும் தெரியாது என்று எண்ணிப் புதைத்து வைத்திருந்த பணம் என்ன ஆயிற்று? பரபரப்புடன் செங்கோடன் மேலே நடந்தான். தென்னை மரத்துக்குப் பின்னால் குடிசைச் சுவர் ஓரமாக ஒரு நிழல் ஒரு கணம் தெரிந்து உடனே மறைந்தது! சீச்சீ! செங்கோடா! உனக்குக்கூடவா இந்தப் பிரமை! பேய், பிசாசு, பூதம் எல்லாம் வெறும் பொய் என்று சொல்வாயே? அறிவு எங்கே போயிற்று?

குடிசையின் முன் கூரை முகப்பில் செங்கோடன் வழக்கமாகத் தீப்பெட்டி வைப்பது வழக்கம். ஹரிகேன் லாந்தரைச் சுவருக்கு வெளியே நீண்டிருந்த மூங்கில் கழியில் கட்டித் தொங்கவிடுவது வழக்கம். தீப்பெட்டியை வழக்கமான இடத்திலிருந்து எடுத்துக் கொண்டான். லாந்தரையும் எடுத்துப் பொருத்தினான்.

லாந்தர் வெளிச்சத்தில் குடிசையின் வாசற் கதவு திறந்து உட்புறமாகச் சுவரோடு சாத்தி யிருந்தது தெரிந்தது. திறந்திருந்த வாசற்படியின்மேல் சில இரத்தத் துளிகள் சிந்தி யிருந்தன. இன்னும், அதோ! இரத்தத்தைப் போலவே சிவப்பாகக் கிடந்து பளபளக்கும் பொருள் என்ன! செங்கோடன் குனிந்து அதைக் கையில் எடுத்துக் கொண்டான். பின்னால் வந்தவர்கள் அறியாதபடி அதை மடியில் சொருகிக் கொண்டான். பிறகு குடிசைக்குள்ளே சென்றான். (தொடரும்)

# வட்ட மேஜை

## ★ யார்மீது குற்றம்?

கொரியாவில் நடக்கும் யுத்தத்தைப் பற்றித் தாங்கள் எழுதிய தலையங்கத்தில், வட கொரியா தென் கொரியா மீது ஆக்கிரமிப்பு யுத்தம் தொடுத்திருக்கிறது என்று கூறியிருக்கிறீர்கள். அந்த விஷயம் உங்களுக்கு எந்த மூலத்திலிருந்து கிடைத்தது? அமெரிக்கா சொல்கிறது என்பதினாலா? ஆண்ட்ரூ ராத் (Andrew Roth) என்கிற பிரபல எழுத்தாளர் நேரடியாக விஷயங்களை ஆராய்ந்து பின் வருமாறு எழுதியிருக்கிறார். "வட கொரியாவும், தென் கொரியாவும் ஒரே தேசத்தைச் சேர்ந்த இரண்டு பகுதிகள் தான். வடக்கே உள்ள அரசாங்கம் ஜனங்களுக்கு அநேக நன்மைகளையும், புரட்சிகரமான மாறுதல்களையும் செய்திருக்கிறது. தென் கொரியாவில் உள்ள அரசாங்க நிர்வாகத்தில் பஞ்சமும், லஞ்சமும் தாண்டவமாடுகின்றன. அங்குள்ள ஜனங்களுக்கு அந்த அரசாங்கத்தின்மீது சிறிதும் நம்பிக்கையில்லை என்பது சமீபத்தில் நடந்த தேர்தல்களில் பிரத்யட்சமாயிற்று. அமெரிக்கர்கள் பல கோடி டாலர் மதிப்புள்ள ஏராளமான ஆயுதங்களை அங்கு விட்டுச்சென்றிருக்கின்றனர்."

மேற்படி விஷயத்திலிருந்து பின் வரும் விவரங்கள் தெளிவாகின்றன.

1. கொரியா என்பது ஒரு தேசம்.
2. அங்கு நடப்பது உள் நாட்டுச் சண்டை.
3. அந்தச் சண்டையில் வெளி நாட்டினர், முக்கியமாக அமெரிக்க நாட்டினர் தலையிடுவதுதான் ஆக்கிரமிப்பாகும்.
4. ரஷியா இன்று வரையில் இச் சண்டையில் நேரடியாகவோ, அல்லது மறைமுகமாகவோ ஈடுபட்டதாக அதிகார பூர்வமான தகவல் எதுவும் கிடையாது.
5. உலக சமாதானத்தில் மிகவும் அக்கறையுள்ள அமெரிக்கா மலேயாவுக்கும், இந்தோசைனாவுக்கும் சுதந்திரம் கிடைக்க ஏன் வழி செய்யக் கூடாது? மேற்படி இடங்களில் பிரிட்டிஷாருக்கும், பிரஞ்சுக்காரருக்கும் என்ன வேலை?
6. தென் ஆப்ரிக்காவில், இந்தியர்கள் மிருகங்கள் போலப் பாவிக்கப்படுகிறார்கள். அந்த விஷயத்தில் அமெரிக்கா தலையிடவில்லை. காரணம் அது உள்நாட்டு விஷயம். ஆனால் அமெரிக்காவுக்குப் பல ஆயிரக் கணக்கான மைல்களுக்கு அப்பால் ஆசியாக் கண்டத்திலுள்ள கொரியாவின் சுதந்திரத்தில் அவர்களுக்கு மிகவும் அக்கறை உண்டு.

ஐரோப்பியரையும், அமெரிக்கரையும் நம்பி நம்பித்தான் நம் ஆசியாக் கண்டம் தற்போதைய நிலைமையில் இருக்கிறது. நம் வசமுள்ள எல்லாவற்றையும் அவர்கள் சுரண்டி விட்டார்கள்.

சென்னை
14—7—50 எஸ். வேணுகோபாலன்

○●○

## அருள் புரியவேண்டும்

தங்களின் சிறந்த பத்திரிகையின் மூலமாக, பரிசுத்த இஸ்லாத்தின் ரம்ஜான் புனித தினத்தில் ஆண்டவனிடம் முறையிட்டுக் கோருவதென்னவென்றால், இன்

றைய உலகச் சூழ்நிலையைக் கவனிக்கும் மனித இதயம் படைத்த ஒவ்வொருவருடைய உள்ளமும் நிம்மதியற்று விளங்குகின்றது.

எத்திசையை நோக்கினும் பஞ்சம், பட்டினி, பற்றாக்குறை என்ற அபயக் குரல்கள் ஒலிக்கின்றன. இந்நிலையிலிருந்து விடுபட்டு மக்கள் ஒருவருக்கொருவர் அன்புடனும் நம்பிக்கையுடனும், நிம்மதியுடனும் வாழ்வதற்குரிய சூழ்நிலை ஏற்படவேண்டும்.

இந்தியா, பாகிஸ்தான் தனித்தனியே சுதந்திர ஆட்சி புரிந்தபோதிலும் ஒன்றையொன்று அன்பால் பிணைக்கப்பட்டு என்றென்றும் சகோதர நேசபாவத்துடன் திகழ, நேரு—லியாகத் உறவு அபிவிருத்தி அடைய ஆண்டவன் அருள்புரிய வேண்டுகிறேன்.

வீரவநல்லூர் எஸ். எம். மூகைதீன்
17—7—50 அப்துல்காதர்,

○●○

## ★ தண்ணீருக்கும் வரி!

ஜூலை 9-ந் தேதி "கல்கி" இதழில் "என்ன சேதி?" என்ற தலைப்பில் வெளியாகி யிருந்த அரசியல் குறிப்பைப் படித்து மகிழ்ந்தேன்.

தாங்கள் கூறியதுபோல, ஒரு சில ஹோட்டல்களைத் தவிர மற்ற ஹோட்டல்களெல்லாம் "ஏதோ நடந்தால் போதும்" என்ற நிலைமையிலேயே நடத்தப்பட்டு வருகின்றன. அகவிலை உயர்வு, வரிச் சுமை, ரேஷன், தொழிலாளர் தகராறுகள், கடை குமாஸ்தாக்கள் சட்டம்—முதலிய பல கஷ்டங்களையும் தொல்லைகளையும் ஹோட்டல் முதலாளிகள் சமாளித்தாகவேண்டி யிருக்கிறது.

மேல் நாடுகளில் ஹோட்டல் நடத்துவது ஒரு மாபெரும் தொழிலாகவே வளர்ந்து விட்டது. ஆனால் இங்கோ அது ஜீவனோபாயத்துக்காக நடத்தப்படும் ஒரு சிறு தொழிலாகவே இருக்கிறது. அங்கு ஹோட்டல் தொழில் கண்ணியமானதாகக் கருதப்படுகிறது. இங்கோ அது அலட்சியமானதாகக் கருதப்படுகிறது. பொதுஜனங்களாகட்டும் அதிகாரிகளாகட்டும்—ஹோட்டல் நடத்துபவர்களிடம் அனுதாபமே கிடையாது.

இதற்குக் காரணங்கள் பல. பெரும்பாலான ஹோட்டல் முதலாளிகளுக்குப் படிப்புக் கிடையாது. படித்தவர்களோ இந்தத் தொழிலில் புகுவதற்கு வெட்கப்படுகிறார்கள். ஹோட்டல் முதலாளிகளில் பலர் படிக்காதவர்களா யிருப்பதால், அவர்கள் அதிகாரிகளின் மிரட்டல்களுக்குப் பணிந்து விடுகிறார்கள். தங்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளை அதிகாரிகளுக்கு எடுத்துச் சொல்வதற்குக் கட்டுப்பாடான ஒரு ஸ்தாபனமும் அவர்களுக்குக் கிடையாது. ஹோட்டல் முதலாளிகள் கொள்ளை கொள்ளையாகச் சம்பாதிக்கிறார்கள் என்ற ஒரு தப்பான அபிப்பிராயம் பொது ஜனங்களுடைய மனதிலும் அதிகாரிகளின் மனதிலும் வெகு காலமாக இருந்து வருகிறது.

சமீபத்தில் விஜயநகரம் நகரசபை, ஹோட்டல்கள் உபயோகிக்கும் தண்ணீருக்கு விதிக்கப்படும் வரியை ஒன்றுக்கு ஐந்து மடங்காக உயர்த்தி யிருக்கிறது. முன்பெல்லாம் ஒரு ஹோட்டல் ஆயிரம் காலன் தண்ணீர் உபயோகித்தால், அதற்கு 12 அணாதான் வரியாக இருந்து வந்தது. இப்போதோ அது நான்கு ரூபாயாக உயர்த்தப்பட்டிருக்கிறது. முன்பெல்லாம் ஒவ்வொரு நாளும் ஏறக்குறைய 500 காலன் தண்ணீர் வரை இலவசமாக உபயோகித்துக்கொள்ளும் சலுகையும் ஹோட்டல்களுக்கு இருந்தது. இப்போது அதையும் ரத்து செய்துவிட்டார்கள். விஜயநகரத்தில் 24 மணி நேரமும் தண்ணீர் வந்த வண்ணமாகவே இருக்கும். தண்ணீர்ப் பஞ்சமே கிடையாது. அந்த ஜல விநியோகத் தொழிற்சாலை (Water Works) காலஞ்சென்ற விஜயநகரம் மகாராணி அம்மையாரால் நகர சபைக்கு இலவசமாக வழங்கப்பட்டதாகும். ஆகையால், அந்தத் தொழிற்சாலையை நடத்துவதற்கு எவ்வளவு பணம் தேவையோ அதை அடிப்படையாக வைத்துத்தான் நகரசபை வரி விதிக்க வேண்டும். அதைவிட்டு, ஒன்றுக்கு ஐந்தாக வரியை உயர்த்துவது நகரசபை அதிகாரிகளின் வரம்புக்கு மீறிய செய்கையாகும். இதைத் தவிர, வருஷா வருஷம் ஹோட்டல் லைசென்ஸ் தொகை உயர்த்தப்பட்டு வருகிறது. வரிச் சுமையைத் தாங்க மாட்டாமல் நாங்கள் தத்தளிக்கிறோம். இந்தச் சுமையைக் குறைக்க ஏதாவது செய்யாவிட்டால் இன்னும் கொஞ்ச காலத்துக்குள் பெரும்பாலான ஹோட்டல்களை கட்டாயமாக மூட வேண்டிய நிலைமை ஏற்படும்.

தாங்கள் எழுதிய அரசியல் குறிப்பு எங்கள் கஷ்டங்களை ஓரளவு தெளிவாக்கி யிருக்கிறது.

விஜயநகரம்
22—7—50 ஆர். ஜி. விசுவநாதன்

○●○

## அவகாசம் ஏது?

சென்ற இரண்டு வார 'கல்கி' இதழ்களில் வட்டமேஜையில், குடும்பப் பெண்கள் முக்கியமாக, பிராம்மண குடும்பப் பெண்கள் தங்களுடைய ஓய்வு நேர வேளைகளில் சம்பாதிக்கும்படி புத்தி கூறப்பட்டிருக்கிறது. இது மிகவும், நல்ல யோசனைதான். ஆனால், பிராம்மண குடும்பங்களில், பெண்களுக்குப் பதினைந்து வயதுக்கெல்லாம், கல்யாணமாகி, அவர்கள் வெகு சீக்கிரத்தில், சில குழந்தைகளுக்குத் தாயாராகி விடுகிறார்கள்.

குழந்தைகளைக் கவனித்து, வெளியில் போய் வேலைசெய்து சம்பாதிக்கும் புருஷர்களுக்கும், பள்ளிக்கூடம் போகும் குழந்தை

களுக்கும், துணி, மணி, சாப்பாடு முதலியவைகள் சித்தம் செய்வதிலேயே சாதாரண பெண்ணுக்கு, நாள் பூராவும் சரியாய்ப் போய்விடுகிறது. ஆகையால் அவர்களுக்கு வெளியே போய் சம்பாதிக்கவோ, வேறு வேலைகள் செய்யவோ, நேரமும் இருப்பதில்லை, சக்தியும் இருப்பதில்லை.

நான், என்னுடைய அனுபவத்திலிருந்து தெரிவிப்பது என்னவென்றால், வீட்டு வேலைக்காகப் பணம் செலவு செய்து, வேலையாட்களை வைத்துவிட்டுக் குடும்பப் பெண்கள் சம்பாதிக்க முயற்சி செய்ய வேண்டியது சரியான மார்க்கமல்ல. என் குடும்பத்தில் ஐந்து குழந்தைகளும் என் கணவரும் நானும் இருக்கிறோம். என் கணவருக்கு மாத வருமானம் ரூ. 350. இதில், நான் வீட்டில் செய்யும் வேலைக்காக ரூ. 100 பெறுமானம் வைத்துக்கொண்டால் கூட, அதே வேலைக்காக வேறு ஆட்களை வைத்தால், இதைவிட அதிகச் செலவு செய்ய வேண்டியிருக்கும். அவர்களுடைய வேலையும் சுத்தமாக இருக்காது.

குடும்பத்துக்கு வேண்டிய வேலைகளை எல்லாம் செய்த பிறகு, நேரமும் சக்தியும் கிடைக்கும் பெண்களே சம்பாதிக்க முடியும். நூறு மத்தியதரக் குடும்பங்களில் ஒரு குடும்பத்துப் பெண்ணுக்குக்கூட வேலை செய்து சம்பாதிக்க அவகாசமிராது.

காசி
20—7—50 சாவித்திரி விசுவநாதன்

○●○

## நமது பண்பாடு

**வ**ட்ட மேஜைப் பகுதியில் ஸ்ரீமதி காந்தமும், திரு நாராயணய்யர் அவர்களும் எழுதிய கடிதங்களைப் பார்த்தேன்.

தற்கால வாழ்க்கைப் போக்கில் பல காரியங்களை முன்னிட்டுப் பெண்கள் தனியே வெளியில் செல்ல வேண்டியிருக்கின்றது. தொழிலை முன்னிட்டு ஆண்கள் காலையில் சென்று மாலையில் வீடு திரும்புகிறார்கள். வீட்டில் குழந்தைக்குச் சற்று அசௌகரியமானால், டாக்டர் வீட்டிற்குச் செல்ல வேண்டியது பெண்ணின் முதல் வேலையாகி விடுகிறது. இப்படித் தவிர்க்க முடியாத சில காரியங்களுக்குப் பெண்கள் வெளியில் போகாமலிருப்பது எப்படி? ஆனால் அவசியமில்லாமலும் சில பெண்கள் நடந்து கொள்கிறார்களென்பது உண்மையே!

இன்று சில பெண்கள் செய்துகொள்ளும் விசித்திரமான அலங்கோலப் போக்கைக் கவனிக்கையில் உள்ளம் குமுறுவதோடு அவர்களைப் பெண்கள் என்று சொல்லவே வாய் கூசுகிறது. உரிமையும், சுதந்திரமும் இந்த நிலைக்குத்தான் கொண்டுவிடும் என்றால் 'அம்மம்மா! அது வேண்டவே வேண்டா' மென்று நிச்சயமாகச் சொல்லி விடுகிறேன். உரிமையின் லட்சணத்தைத் தவறான வழியில் செலவிட்டு மானம் அழிவதைவிட அடிமைகளாய் இருப்பது ஆயிரம் பங்கு மேல். தொன்று தொட்டுப் பெண்மணிகள் மிகவும் மதிப்போடு நடந்து மதிப்பைப் பெற்று இருக்கிறார்கள்.

நாகரிகத்தின் பெயரால் ஆண்களோ பெண்களோ யாராயினும் சரி, கண்ணியமற்ற பழக்கங்களை மேற்கொண்டால் வீட்டில் உள்ள பெற்றோர்கள், பெரியவர்கள் அதைக் கண்டித்துத் திருத்தவேண்டும். பிறரிடம் உள்ள நல்ல விஷயங்களை மட்டும் கைக்கொள்ளுமாறு போதிக்கவேண்டும். காலப் போக்கை ஒட்டிப் படித்துப் பல வேலையில் ஈடுபட்ட பெண்களைப்பற்றிப் பெண்களே குறைவாகப் பேசுவதைக் கேட்டிருக்கிறேன். அன்புடன் பேசினால் அதைத் தவறான வழி என்று எண்ணுவது எவ்வளவு கேவலம்? சகோதர அன்பிற்கும் சிநேக, முறை அன்பிற்கும் ஈடு வேறு உண்டா? இது ஆண்களுக்குத்தான் சொந்தசொத்தா? நமது காவியங்களில் காணாததா? ராமன் குகனைத் தோழனாக்கி, சீதையை குகனுக்குக் கொழுந்தியாக்கியதாகக் கவிச் சக்கரவர்த்தி கம்பர் சித்தரிக்கவில்லையா?

பொதுவாக, ஆண் பெண் இருபாலாரும் அவர்கள் மாணவர்களாயினும் சரி, மற்றவர்களாயினும் சரி, பிறரைக் குற்றக் கண்ணோடு பார்க்கும் தன்மையையும், குறைவாகப் பேசும் மனப்பான்மையையும் விட்டுவிடவேண்டும். உள்ளம் கள்ளமின்றி இருக்குமானால், பேச்சிலும் நடத்தையிலும் தூய்மை துலங்கும். மரியாதை, ஒழுக்கு, கண்ணியம், பண்பாடு இவைகள்தான் மனித சமூகத்தின் ஜீவநாடிகள்.

மேல்நாட்டு நாகரிகம், சினிமா நாகரிகம் எல்லாம் நம் பெண்களைக் கேவலமாக எண்ணுவதற்குத் துணை செய்து விட்டது. பஸ்களிலும், மற்ற இடங்களிலும், சிலர் பெண்களைப் பற்றிப் பேசுவதைக் கேட்கவே முடியவில்லை. உரிமையின் பெயரால் உயிரினும் அரிய ஒழுக்கத்தைச் சிதைப்பது பெரும் பாவம். மனைவியல்லாத மற்றப் பெண்களைத் தாய்த் தன்மையில் காணுவதுதான் நமது பண்பாடு. அதற்கு இழுக்கைத் தேடப் படித்தவர்களா முன் வருவது! ஆகவே கல்வி கற்கும் ஆண் பெண், இருவரும், பண்பாடுடைய வாழ்வை மேற்கொள்வார்களாக!

சென்னை
28—7—50 நீலாவதி ராமசுப்பிரமணியம்

---

✱ வட்ட மேஜைப் பரிசுத் தொகை ரூ. 25ஐ "யார்மீது குற்றம்!" என்ற கடிதம் எழுதிய ஸ்ரீ என். வேணுகோபாலுக்கும், "தன்னிடத்தும் வா!" என்ற கடிதம் எழுதிய ஸ்ரீ ஆர். ஜி. விசுவநாதனுக்கும் ரூ. 12—8—0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.

# புது டில்லியில் குறவஞ்சி



★ ★ ★ கொரியா யுத்தம், பாகிஸ்தான் ஒப்பந்தம் முதலிய பெரிய பெரிய அரசியல் பிரச்னைகள் அனைவருடைய மனங்களையும் குழப்பிக் கொண்டிருக்கும் புது டில்லியில் ஜூலை மாதம் 16-ம் தேதி இனிய கலை நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றது. பரத நாட்டிய ஆசிரியர் ஸ்ரீ கே. என். தண்டபாணிப் பிள்ளை அவர்களின் அரிய சிருஷ்டியான "சிற்றம்பலக் குறவஞ்சி" என்னும் நாட்டிய நாடகத்தை அவருடைய சகோதரர் ஸ்ரீ கே. என். பக்கிரிசாமி அவர்கள் புதுடில்லியிலுள்ள தென்னிந்திய ரசிகர்களின் மகாசபையில் அரங்கேற்றினார். இந்தக் கலை அரங்கேற்ற நிகழ்ச்சிக்கு ரயில்வே மந்திரி கனம் கோபாலசாமி ஐயங்கார் அவர்கள் தலைமை வகித்துச் சிறப்பித்தார்.

★ ★ ★ குறத்தியாக நடித்த ஹேமலதாவும், ராஜகுமாரி வசந்த வல்லியாக நடித்த சுசீலாவும் எவ்வளவு நன்றாகத் தங்களுடைய பாத்திரங்களை நடித்து நடனமாடினார்கள் என்பது சபையில் அடிக்கடி ஏற்பட்ட கரகோஷங்களினால் தெரியவந்தது.

★ ★ ★ குமாரிகள் கோமளாவும் கமலாவும் பின்னணியில் தகுந்த மெட்டுக்களுடன் அமைக்கப்பட்ட பாட்டுக்களை வாக்கு சுத்தத்துடன் கணீர் என்று பாடி நாட்டிய நாடகத்தைச் சோபிக்கச் செய்தார்கள்.

★ ★ ★ "ஹிந்துஸ்தான் டைம்ஸ்," "ஸ்டேட்ஸ்மென்," "டைம்ஸ் ஆப் இந்தியா" முதலிய வடநாட்டுப் பத்திரிகைகள், மேற்படி கலை நிகழ்ச்சியைக் குறித்து "இதுவரை கண்டிராதது" என்றும் "அற்புதம்" என்றும் "அபாரம்" என்றும் பாராட்டி எழுதியிருக்கின்றன.

★ ★ ★ மேற்கூறிய நாட்டிய நிகழ்ச்சியின் மூலம் வசூலான தொகை சென்னைக் கடற்கரையில் கட்டப் போகும் மகாத்மா காந்தி ஸ்தூபி நிதியில் சேர்க்கப்படும்.

★ ★ ★ இந்த அருமையான கலை நிகழ்ச்சி இவ்வளவு சிறப்பாக வெற்றியுடன் நடப்பதற்குக் காரணமாயிருந்த ஸ்ரீ வி. வி. நரசிம்மன் ஐ. சி. எஸ். ஸ்ரீ கே. நாராயணசாமி முதலிய நிர்வாகஸ்தர்களுக்கும், பின்னணி சங்கீதத்தை நல்ல முறையில் நடத்தி உதவிய ஸ்ரீ எஸ். கோபாலகிருஷ்ணன் முதலியவர்களுக்கும் புதுடில்லியிலுள்ள தென்னிந்திய ரசிகர்கள் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

# ராமகிருஷ்ண உபநிஷதம்



சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

## 20. "ஒன்னரையணா பெறும்!"

நியமனம், யோகம் முதலிய அப்பியாசங்களின் பயனாகச் சில சித்திகளை அடையலாம். 'சித்தி' என்றால் சாதாரண மக்கள் செய்ய முடியாத காரியங்களைச் செய்யும் வல்லமை, பிரகிருதிக்கு மாறான அற்புத சக்திகள். இத்தகைய சித்திகளைக் கொண்டு பார்ப்பவர்கள் வியக்கும்படியான காரியங்களைச் சில யோகிகள் செய்து காட்டுவது உண்டு. அதைப்பற்றி அவர்களுடைய சீடர்கள் பெரும் பிரசாரம் செய்வது வழக்கம்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பகவான் இத்தகைய சித்திகளை அடையப் பார்ப்பதும் அவற்றைக் கொண்டு ஜனங்களை வியக்கும்படி செய்வதும் கூடாது என்பார்.

"அந்த ஊரில் ஒரு யோகி அற்புத சக்தி அடைந்திருக்கிறார், வந்து பாருங்கள் என்று யாராவது ஒருவரைப் பற்றிச் சொன்னால் அங்கே போகாதீர்கள். அற்புதம் செய்து காட்டும் யோகிகளைத் தரிசனம் செய்து நன்மை யடையலாம் என்று எண்ணி அவர்களைப் பார்க்கப் போகவேண்டாம்!" என்பார் ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

யோகிகள் காட்டும் அற்புதங்கள் மோசம் என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்லவில்லை. ஆனால் அது கடவுளைக் காணும் வழியல்ல. அற்புத சக்திகளை அடைவது கடவுளை வழிபடும் முறையல்ல என்பது அவர் உபதேசம்.

"இந்த சக்திகள் பிரம்மத்தை அடையச் செல்ல வேண்டிய நேர் மார்க்கத்தில் இருக்கும் முட்புதர்களாகும். அவற்றில் சிக்கிக் கொள்ள வேண்டாம். மந்திரத்தால் வியாதியைச் சொஸ்தப்படுத்துபவர்கள், யோக சக்தியால் கோர்ட்டு வழக்குகளில் வெற்றி சம்பாதிப்பவர்கள் இத்தகைய மாந்திரிகர்கள் கிட்ட நெருங்க வேண்டாம். உண்மையான பக்தர்கள் ஆண்டவன் பாத கமலங்களைத் தவிர வேறு எதையும் அடைய விரும்ப மாட்டார்கள். பக்தியினாலும் யோகப் பயிற்சியாலும் நியமனம் காப்பதினாலும் சில சக்திகள் உண்டாகும். ஆனால் அவை தம்பாட்டுக்கு உண்டாகும். அவற்றைச் சம்பாதிக்க வேண்டும் என்று உண்மை பக்தர்கள் விரும்பி வருந்த மாட்டார்கள்.

"சாப்பிட்டோமானால் மலம், மூத்திரம், வியர்வை உண்டாகிக் கழிப்போம். ஆனால் மலத்தை நோக்கமாக வைத்துக் கொண்டு யாரும் உண்பதில்லை. சித்திகள் அடையலாம் என்று உண்மை பக்தர்கள் பக்தியாவது யோகமாவது செய்ய மாட்டார்கள். சித்திகள் மலத்துக்குச் சமம்."

சித்திகள் பெறுவதினால் ஆணவம் வளரும். அதனால் பக்திக்குத் தடையே யொழிய அது பகவானை அடைய சாதனமாகாது. ஆகையால் சித்திகளை யோகத்தின் மலமாக ஸ்ரீ ராமகிருஷ்ணர் பாவித்துச் சொன்னார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொன்ன ஒரு கதை: ஒரு யோகி தன் குருவிடம் சென்று, "நான் பதினான்கு வருஷங்கள் காட்டில் தனியாக இருந்து தவம் செய்து நீரின் மேல் நடக்கும் சித்தியை அடைந்திருக்கிறேன்" என்றானாம். அதைக் கேட்ட குருவானவர் அவனைப் பார்த்து, "மகனே! ஏன் இவ்வளவு வருத்தப் பட்டாய்? பதினான்கு வருஷங்களையும் வீணாக்கினாயே, ஒன்னரையணா கொடுத்தால் ஓடக்காரன் உன்னை நீரின்மேல் கொண்டு போய் அக்கரை சேர்ப்பானே? நீ அடைந்த சித்தி ஒன்னரையணா மதிப்புத்தான்" என்றார்.

"சித்திகளை அடையும் ஆசையைக் கொண்டு யாரும் காலத்தைக் கழிக்கக் கூடாது. பகவான் பாதத்தை அடைய வேண்டும் என்று உண்மையான பக்தி செய்யுங்கள். அற்புதங்களைக் காட்டி மக்களை வசீகரிக்கும் யோகிகளிடம் சேர வேண்டாம்" என்பது பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசம்.

# அகில உலகச் சிறுகதைப் போட்டி

- இருபத்தோரு தேசங்களைச் சேர்ந்த பிரசித்தமான பத்திரிகைகள் ஒத்துழைத்து அகில உலகச் சிறு கதைப் போட்டி ஒன்று நடத்துகிறார்கள்.
- இந்த முயற்சியை ஆரம்பித்த பத்திரிகை நியூயார்க் ஹெரால்டு டிரிப்யூன்.
- இந்திய தேசத்தில் மேற்படி சிறு கதைப் போட்டியை நடத்தும் பொறுப்பைப் புதுடெல்லி "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை ஏற்றுக்கொண்டிருக்கிறது.
- இந்தியாவின் முக்கியமான பதினோரு பாஷைகளிலாவது ஆங்கிலத்திலாவது மேற்படி போட்டிக்குச் சிறுகதை எழுதலாம்.
- இந்தியாவின் முக்கிய பாஷைகளில் தமிழ் மொழி ஒன்று என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. ஆகையால் தமிழ் எழுத்தாளர்கள் இந்த உலகச் சிறு கதைப் போட்டியில் கலந்து கொள்ளலாம்.
- இந்திய தேசத்தில் எழுதப்படும் கதைகளில் சிறந்த எட்டு கதைகளுக்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை மொத்தம் ரூ. 5,250 பரிசு அளிக்கிறது. இதில் முதல் பரிசு ரூ. 1,500.
- அகில உலகப் போட்டிக்கு ஒவ்வொரு நாட்டிலிருந்தும் இரண்டு அல்லது மூன்று கதைகள் பொறுக்கி அனுப்பப்படும். இப்படி மொத்தம் சேரும் 52 கதைகளில் எல்லாவற்றிலும் சிறந்த கதைக்கு "நியூயார்க் ஹெரால்டு டிரிப்யூன்" பத்திரிகை ஐயாயிரம் டாலர் (ரூ. 22,250) பரிசு அளிக்கும்.
- மேற்படி அகில உலகச் சிறு கதைப் போட்டிக்குத் தமிழ் நாட்டிலிருந்து கதைகளைச் சேகரிக்கும் பொறுப்பைக் "கல்கி" பத்திரிகை ஏற்றுக் கொண்டிருக்கிறது.
- சிறு கதைகள் சுமார் மூவாயிரம் வார்த்தைகள் அடங்கியதாக இருப்பது நலம். நாலாயிரம் வார்த்தைகளுக்கு மேலே போகக் கூடாது.
- 1950–ம் வருஷம் செப்டம்பர் மாதம் 30-ந் தேதிக்குள் மேற்படி சிறுகதைப் போட்டிக்குக் கதைகள் அனுப்பப்பட வேண்டும்.
- தமிழ்க் கதைகளை அனுப்ப வேண்டிய விலாசம்:– ஆசிரியர், "கல்கி" கீழ்ப்பாக்கம், சென்னை.
- தயவு செய்து உறையின் மேல் "அகில உலகச் சிறுகதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டுகிறோம்.
- பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுப்பதற்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி தகுந்த நீதிபதிகளை நியமனம் செய்வார்.
- மேற்படி போட்டிக்காக வரும் தமிழ்க் கதைகளை ஸ்ரீ தேவதாஸ் காந்தி நியமிக்கும் நீதிபதிகள் பரிசீலனை செய்து அவற்றில் சிறந்த நான்கு கதைகளைத் தேர்ந்தெடுத்து மத்திய பரிசீலனைக் கமிட்டிக்கு அனுப்பி வைப்பார்கள். இந்த நான்கு கதைகளுக்கும் "கல்கி" நிர்வாகிகள் ஒவ்வொன்றுக்கு ரூ. 250 வீதம் பரிசு அளிப்பார்கள்.
- பரிசுக்காகத் தெரிந்தெடுக்கப்படும் கதைகளைத் தவிர மற்றக் கதைகளில் பிரசுரிப்பதற்குத் தகுதியான கதைகள் "கல்கி"யில் பிரசுரிக்கப்படும். அப்படிப் பிரசுரிக்கப்படும் ஒவ்வொரு கதைக்கும் ரூ. 50 வீதம் சன்மானம் அளிக்கப்படும்.
- பரிசு பெறாத, பிரசுரிக்கப்படாத கதைகளைத் திரும்பிப் பெற விரும்புவோர் கையெழுத்துப் பிரதியுடன் போதிய தபால் தலைகள் அனுப்பவேண்டும். திருப்பி அனுப்புவதாக உத்தரவாதம் செய்ய முடியாது.
- இந்தப் போட்டி சம்பந்தமாக ஏற்படும் சந்தேகங்களில் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி கூறும் தீர்ப்பே முடிவானது.

# பிரதுஷாவின் காதல்

ஆசிரியர்: சுதர்சன்

மொழிபெயர்ப்பு: ரா.வி

## 3. இது என்ன விபரீதம்?



ளவரசியின் கன்னங்கள் கர்வத்தில் பூரித்துச் செக்கச் சிவந்த ரோஜாக் கன்னங்களாக மாறின என்று சொன்னோம்? இல்லை, இல்லை! அவளுடைய கன்னங்கள் அன்று பழுத்த நாவற் பழங்களைப்போல 'பளபள' வென்று பிரகாசித்தன. அவளுடைய அகன்ற நீண்ட விழிகள் இன்ப வாழ்க்கையை எண்ணி இறுமாப்புற்று இளநகையாடின; கொஞ்சிப் பேசின. தன் பக்கத்தில் பருன் வந்து நின்றுகொண்டிருப்பது போன்ற பிரமை அவளுக்கு உண்டாயிற்று. அவள் மெய்ம் மறந்து 'களுக்'கென்று சிரித்துக் கொண்டாள். அவள் வாய் அவளை யறியாமலே, "ஆகா! மண்ணுலக வாசிகளான நமக்குக் கிட்டும் இந்த மாபெரும் பாக்கியம் விண்ணுலக வாசிகளுக்குக் கூடக் கிட்டுவது மகா துர்லபம்தான்!" என்று முணுமுணுத்துக் கொண்டது.

ஷம்லார்க்கின் இளவரசி இம்மாதிரித் தன்னை மறந்து இன்பக் கற்பனையிலே மூழ்கி யிருந்தபொழுது அவளுடைய ஒரு பணிப்பெண் அங்கே வந்தாள். அவள் நேரே இளவரசியின் அருகில் சென்று, "ராஜகுமாரி! கடவுள் தங்களுக்குச் சகல வித சுகபோகங்களும் சௌபாக்கியங்களும் அளிப்பாராக. தங்கள் வாழ்க்கையிலே துயரமோ, துக்கமோ, இவற்றின் சாயைகூடப் படாதபடி காத்து அருள்புரிவாராக!" என்று வாழ்த்தி வணங்கினாள்.

இளவரசி கனவிலிருந்து விழித்தெழுந்தவள்போல, "என்ன?" என்று அதிகாரம் தொனிக்கும் குரலில் கேட்டாள்.

"அம்மணி! நீரூனம் தங்களுக்காக நீல நதிக்கரைக்குத் தண்ணீர் எடுத்து வரச் சென்றிருந்தாள் அல்லவா? அவள்

அங்கே சென்று எகிப்து நாட்டுச் சிப்பாய் ஒருவனுடன் காதல்மொழி பேசிக்கொண்டிருக்கிறாள். தாங்கள் இங்கே அவளை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறீர்கள் என்ற அச்சமோ, பயமோ அவளுக்குத் துளிக்கூட இருப்பதாகத் தெரியவில்லை!'' என்றாள் அந்தப் பணிப்பெண்.

அதைக் கேட்டதும் இளவரசி திடுக்குற்றாள். ஏனெனில் இம்மாதிரி இதுவரை யாருமே அவளுடைய கட்டளைக்குக் கீழ்ப்படியாமல் அலட்சியம் செய்ததில்லை. இளவரசி ஒன்று சொல்லுவது; அதைக் கேட்காமல் இருப்பது என்றால் யாருக்குத்தான் துணிவு ஏற்படும்? தான் சொல்லி ஒருத்தி கேட்காமல் இருந்தது அவளுக்கு இதுவரை ஏற்படாத ஒரு புதிய அநுபவம். ஷம்லாக்கின் இளவரசியான தன்னுடைய உத்தரவை ஒருத்தி மீறிவிட்டாள்; அதுவும் கேவலம் ஒரு அடிமைப் பெண் மீறிவிட்டாள் என்பதை நினைத்துப் பார்த்தபொழுது அவளுக்கு ரெளத்திராகாரமாகக் கோபம் பொங்கி வந்தது. அவளுடைய கண்களில் தீப்பொறி பறந்தது. அடுத்த கணமே அவள் தன் ஆயுதம் தாங்கிய சிப்பாய் ஒருவனைக் கூப்பிட்டனுப்பினாள். சிப்பாய் வந்து அவளுக்கு வணக்கம் செலுத்தி நின்றான். அவனைப் பார்த்து, ''உடனே போய் அசட்டுத் துணிச்சல் வாய்ந்த அந்த அடிமைப் பெண்ணின் தலைமயிரைப் பிடித்துக் 'கரகர' வென்று இழுத்துக் கொண்டுவந்து என் முன்னே நிறுத்து. அவள் என்னை மிகவும் அவமானப் படுத்தி விட்டாள். நான் அவளுக்குத் தக்க தண்டனை அளிக்க விரும்புகிறேன். அவளுக்குத் தண்டனை யளித்து முடியாதவரை என் கோபம் குறையாது'' என்று மிக மிகக் கடுமையான குரலில் உத்தரவிட்டாள் இளவரசி.



அங்கே நீல நதிக் கரையிலோ நியூனஸ் என்னும் பெயர் கொண்ட அந்த அடிமைப் பெண் பால் போலக் காய்ந்து கொண்டிருந்த நிலவொளியிலே, நீல நதியின் மணற் பரப்பிலே மிக்க ஒயிலாக அமர்ந்து எகிப்து நாட்டு இளைஞன் ஒருவனுடன் ஆனந்தமாக இன்சொல் லாடிக் கொண்டிருந்தாள். அப்பொழுது அவர்களிருவருக்கும் இந்த உலக நினைவே இல்லை. இளவரசியின் கட்டளையைத் தாங்கி வந்த ஆயுதம் தாங்கிய சிப்பாயோ ஒரு காட்டுமிராண்டி; நீக்ரோ ஜாதியைச் சேர்ந்தவன். அவன் அதுவரை காவியம், கலை, காதல் போன்ற சொற்களைக் காதால்கூடக் கேட்டதில்லை. அவனுக்கும் கலாரசனைக்கும் வெகு தூரம்.

அப்படிப்பட்ட அவனுக்கே கூட அன்றைக்கு, இளந்தென்றல் வீசி இன்ப உணர்ச்சிகளைக் கிளர்ச்சி கொள்ளச் செய்யும் எகிப்து நாட்டின் அந்த நிலவொளியிலே, சந்திரனின் சௌந்தர்யத்தைப் பழிக்கும் எகிப்து நாட்டு இரு சந்திரன்கள், எகிப்து நாட்டுக்கே எழிலையும் வனப்பையும் அளிக்கும் நீல நதிக்கரையின் மணற் பரப்பிலே உட்கார்ந்து, அன்பு — யௌவனம் இவற்றின் தீராப் பிரச்னையைத் தீர்த்து வைக்கத் தீவிர முயற்சி எடுத்துக் கொண்டிருப்பது போலத் தோன்றியது. கனவு போன்ற மனோரம்யமான அந்தக் கண் கொள்ளாக் காட்சியைப் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும்; கணநேரம் கூடக் கண் கொட்டாமல் அதைப் பார்த்துப் பார்த்து அதன் எழிலைப் பருகிக் கொண்டே யிருக்க வேண்டும் என்று அவன் விழிகள் விரும்பின.

ஆனால் அவனோ காட்டுமிராண்டி; போதாக் குறைக்கு ஒரு நீக்ரோ அடிமை வேறு. இவற்றுக்கெல்லாம் மேலாக அவனுடைய எஜமானியான இளவரசி, தலைமயிரைப் பிடித்துத் நியூனஸை 'கரகர'வென்று இழுத்து வந்து தன்னெதிரே நிறுத்தவேண்டும் என்று அவனுக்குக் கடுமையான உத்தரவு வேறு போட்டிருந்தாள். ஆகவே, அவன் தான் எதற்காக இங்கேவந்தோம் என்னும் விஷய




நினைவு வந்ததும் அந்த மனமோகனக் காட்சியின் எழிலைப் பருகிக் கொண்டிருந்த தன் கண்களுக்குக் கருந்திரையிட்டு, அந்தக் காட்சிகள் தென்படாதவாறு மறைத்துவிட்டான். இதயத்திலே மலர்ந்து இன்ப உணர்ச்சிகளை ஊட்டிக் கொண்டிருந்த அபிலாஷை என்னும் மென் மலர்களைத் தன் கனம் மிகுந்த பாதங்களால் மிதித்து நசுக்கி நாசப் படுத்தி விட்டான். அடுத்தகணம் அவன் நெஞ்சில் சிறிதும் ஈரமற்ற அசல் சிப்பாயாகவே மாறிவிட்டான். இளவரசி தனக்குக் கொடுத்திருந்த கட்டளையை நிறைவேற்றத் திடமான சங்கற்பம் செய்து கொண்டு முன்னேறினான்.

ஆயுதம் தாங்கிய அந்தச் சிப்பாயைக் கண்டதும் நியூனஸ் கடுகடுங்கிப் போய் விட்டான். அவன் கண்களுக்கெதிரே மரண தேவதை ஊழிக்கூத்து ஆடத் தொடங்கி விட்டது. அவனுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. கண்கள் பூச்சி பறந்தன. தலைசுற்றியது. அவனுடைய முகத்திலே பதட்டத்தின் அறிகுறிகள் தென்பட்டன. ஆனால் அந்த எகிப்து நாட்டு இளைஞன் ஏதும் அறியாப் பாலகனைப் போலச் சிரித்துக் கொண்டிருந்தான். அவன் அந்த அடிமைப் பெண்ணின் பதட்டத்தையோ, அடிமைச் சிப்பாயின் கோபத்தையோ கடுகளவாவது பொருட்படுத்தினதாகத் தெரிய

வில்லை. அந்த அலட்சிய பாவத்தைக் காண நீக்ரோ சிப்பாய்க்குப் பொறுக்க முடியாத கோபம் வந்துவிட்டது.

ஆகவே, அவன் எகிப்து நாட்டு இளைஞனை நெருங்கி, "நீ யாரடா? என் சக்கரவர்த்தியின் அடிமையான இவனை வேலை செய்ய வொட்டாமல் தடுக்க உனக்கு எங்கிருந்தடா வந்தது இவ்வளவு துணிச்சல்?" என்று மிகவும் மிடுக்காகவும் ஏளனமாகவும் கேட்டான்.

எகிப்து நாட்டு இளைஞன் முதலில் ஒருமுறை அந்தச் சிப்பாயை ஏற இறங்கப் பார்த்தான். பிறகு கொஞ்சமும் அச்சமின்றித் தன் இரு கைகளையும் மார்பின் மீது வைத்து, மிகவும் ஏளனமாக எள்ளி நகையாடும் பாவனையில், "நானா? நான் எகிப்து நாட்டு மண்ணிலே பிறந்து வளர்ந்த மிக மிகச் சாதாரணமான ஒரு




ஜீவன். ஆனால் இந்தப் புனிதமான நீல நதியிலே 'சல சல' வென்று சப்தித்துக்கொண்டு துள்ளி ஓடும் பரிசுத்தமான தண்ணீரின் மீது ஆணை வைத்துச் சொல்லுகிறேன். காட்டுமிராண்டியான உன் நீக்ரோ பாதுஷா என் கால் தூசிகூடப் பெறமாட்டான். அவனையும் அவனுடைய வீரதீர பராக்கிரமத்தையும் பற்றி எனக்குச் சிறிதும் அக்கறையில்லை. மிகமிக ஆழமான இந்த நீலநதியின் தண்ணீர் அடியில் கிடக்கும் சிறு மணலைச் சிறிதளவாவது பொருட்படுத்துமா? அதற்கு அந்த மணல் எம்மாத்திரம்? ஆழமான நீல நதி எங்கே? ஒரு சிறு மணல் எங்கே? அம்மாதிரித்தான் எனக்கு நீயும் உன்னுடைய பாதுஷாவும்! புரிந்ததா?" என்று தாக்கி எறிந்தாற்போலப் பேசினான்.

அதைச் சொல்லி முடித்ததும் எகிப்து நாட்டு இளைஞன் வெகு அலட்சியமாகத் திரும்பி நீல நதியின் மணற் பரப்பிலே இங்கும் அங்கும் நடைபோடலானான். சில சமயம் ஒரு இடத்தில் நின்று தன் கால்களினாலும் கால் விரல்களினாலும் மணலுடன் விளையாடவும் செய்தான்.

அடிமைச் சிப்பாய் அதுவரை தன் எஜமானியின் பெருமைக்குப் பங்கம் விளைவிக்கும் வகையில் யாரும் அவ்வளவு தாறுமாறான வார்த்தைகளைப் பேசிக் கேட்டதேயில்லை. எகிப்து நாட்டு இளைஞன் சொன்ன சொற்கள் அவனுக்கு எல்லை மீறிய கோபத்தை உண்டு பண்ணி விட்டன. பல்லை 'நறநற' வென்று கடித்துக் கொண்டு எகிப்து நாட்டு இளைஞனுக்குப் பாடம் கற்பிக்கும் நோக்கத்துடன் வில்லில் நாணைப் பூட்டி அம்பை ஏற்றினான். ஆனால் எகிப்து நாட்டு இளைஞன் அதற்குமேல் அவனுக்கு அம்பு எய்யும் சிரமத்தை வைக்க வில்லை. வெ... வேகமாக முன்னே வந்து அவன் கை... யிருந்து அம்பையும் வி... லையும் 'வெடுக்' கென்... பிடுங்கி நீல நதியி... ஆழமான பிரவாக... துக்கு அர்ப்பண... செய்துவிட்டான். அவை நீல நதியின் நீர்ப் பர... பிலே மிதந்து சென்... விட்டன.

அந்தக் காரியத்தை முடித்தபின் அவ... நீக்ரோ சிப்பாயை வெ... அலட்சியமாக நோக்... "டேய்! என் எதிரே ஆயுதங்களை எடுக்காதே. இங்கே உ... ஜம்பம் சாயாது. எனக்கு எதிராக ஆ... தம் எடுத்துப் போர் புரிய இனித்தா... இன்னொருவன் பிறந்து வரவேண்டு... தெரிந்ததா? ஜாக்கிரதை! போய் வா..." என்று சொல்லி ஏளனம் தொனிக்க 'கடகட' வென்று நகைத்தான்.

அதைக் கேட்டதுதான் தாமதம்... நீக்ரோ சிப்பாய் கோப வெறி கொண்... எகிப்து நாட்டு இளைஞனைக் குத்... ஓடினான். சிறிது நேரத்துக்கெல்லா... இருவருக்குமிடையே சிறிதாக ஆ... பித்த அந்தச் சண்டை பெரும் போரா... மூண்டது. கருப்பு அடிமையும் எகிப்... நாட்டு வெள்ளையனும் வெகுண்டு போ... புரிந்த அந்தக் காட்சி ஒரு கருப்புமேகமு... ஒரு வெளுப்பு மேகமும் ஒன்றுக்கொன்... மூட்டிக் கொண்டது போலிருந்த... பார்ப்பதற்கு அந்தக் காட்சி கண்கொ... ளாக் காட்சியாக இருந்தது.

'இந்தப் பயல் என்னை எதிர்த்து எத்தனை நேரம்தான் நின்றுவிடப் போகிறான், பார்ப்போமே!' என்று எண்ணித்தான் போரில் இறங்கியிருந்தான் அடிமை நீக்ரோ. ஆனால் வெகு சீக்கிரமே, தான் அப்படி நினைத்தது மிகவும் தவறு என்பது அவனுக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளங்கி விட்டது.

'எகிப்து நாட்டைச் சேர்ந்த இந்த இளைஞன் பருமனாகவோ கொழுத்தவனாகவோ இல்லைதான். இருந்தாலும் இவனைப் பலம் அற்றவன் என்று சொல்ல முடியாது. இவன் மிகவும் நல்ல பலசாலிதான். இவனுடைய கைகளும் கால்களும் இரும்பைக் காட்டிலும் கடினமாக இருக்கின்றன. நான் அவற்றை எவ்வளவோ அமுக்க முயன்றும் அமுக்க முடியவில்லை. ஆழம் தெரியாமல் இவனுடன் மல்யுத்தம் செய்யத் துணிந்து இறங்கி விட்டேனே, இவனிடமிருந்து இனி எப்படித் தப்புவது? முன்பே தெரிந்திருந்தால், இப்படியெல்லாம் அசட்டுத்தனமான காரியத்தில் இறங்கியிருக்கவே மாட்டேன். இப்படி முன்பின் யோசனையின்றி முன்னேறியும் இருக்க மாட்டேன். இப்படி அவமானப்படவும் நேர்ந்திராது. போரில் இறங்கியது என்னவோ இறங்கியாகி விட்டது. இனி இவ்விதம் சிந்தித்தெல்லாம் என்ன பயன்? ஆண்டவன் விட்ட வழி விடட்டும்' என்று மனதைத் திடம் செய்து கொண்டான் அந்தச் சிப்பாய். இருந்தாலும் வெளியில் இருவருக்கும் போர் மூண்டிருந்தது போலவே அவனுடைய உள்ளத்திலும் பலத்த போர் மூண்டிருந்தது.

எகிப்து நாட்டு இளைஞனோ அவனுடன் சண்டையே போடவில்லை. வெறுமனே விளையாடிக் கொண்டிருந்தான். நீக்ரோ சிப்பாய் தன்மீது செய்து பார்த்துக் கொண்டிருந்த பலப் பரீட்சையை எள்ளி நகையாடிக் கொண்டிருந்தான். இந்த நீக்ரோ சிப்பாய் தனக்கு ஏதாவது தீங்கு இழைத்து விடுவானோ என்ற கவலையே அவனுக்குச் சிறிதும் இல்லை. அவனால் தனக்கு எந்த விதமான தீங்கும் இழைக்க முடியாது என்பதை எகிப்து நாட்டு இளைஞன் நன்கு உணர்ந்திருந்தான். ஆகவே அவன் வெகு லாகவமாக எதிரியின் அடிகளையெல்லாம் தடுத்து எதிரிக்கு இன்னும் அதிகமான எரிச்சலை மூட்டிக் கொண்டிருந்தான்.

ஆனால் பொழுதோ போய்க்கொண்டேயிருந்தது. பொழுது அதிகரிக்க அதிகரிக்கத் தியூனஸின் பதட்டமும் அதிகரித்துக் கொண்டே போயிற்று. எகிப்து நாட்டு இளைஞனுக்கும் நீக்ரோ சிப்பாய்க்கும் மூண்டிருந்த கடும்போரைக் கண்ட தியூனஸ், 'இந்தச் சண்டை சீக்கிரமாக முடிந்துவிடக் கூடாதா, பகவானே!' என்று கடவுளை வேண்டிக் கொண்டான்.

இரண்டு மணி நேரத்துக்கு மேல் ஆகிவிட்டது. நீக்ரோ இளவரசியின் கோபம் எள்ளளவும் குறையவில்லை. நேரம் ஆக ஆக அவளுக்கும் கோபம் அதிகரித்துக் கொண்டேயிருந்தது. கடைசியில் அவள் பொறுமை இழந்து இருபது குதிரை வீரர்களைத் தன்னுடன் கூட வருமாறு உத்தரவிட்டுவிட்டு நீல நதிக் கரையை நோக்கிப் புறப்பட்டாள். அங்கே சென்று அவள் கண்ட காட்சி அவளுடைய கோபத்தைத் தணிப்பதாயில்லை. 'ஜில்'லென்று குளிர்ந்து வீசிக் கொண்டிருந்த நீர்க் காற்றுக்கும் கூட கொதிப்பேறியிருந்த அவளுடைய உள்ளத்தைக் குளிர வைக்கும் சக்தியில்லை. ஏனெனில், அவளுடைய கட்டளைக்குக் கீழ்ப்படிந்து தியூனஸைப் பிடித்து இழுத்து வருவதற்காக வந்திருந்த சிப்பாய் நீல நதியின் மணற்பரப்பிலே குப்புற விழுந்து செத்துக் கிடந்தான். தியூனஸ் தண்ணீர்க் குடத்தைத் தலையில் தூக்கி வைத்துக்கொண்டு கரையேறி வந்து கொண்டிருந்தான். எகிப்து நாட்டு இளைஞன் அவள் காலடிகளில் முழங்கால்களை மண்டியிட்டு உட்கார்ந்து கொண்டு அவள் முகத்தையே அண்ணாந்து பார்த்தவாறு அவளை ஏதோ யாசித்துக் கொண்டிருந்தான். ஏதோ யாசித்துக் கொண்டிருந்தான் என்று சொல்லுவானேன்? "அதற்குள் என்ன அவசரம்? இன்னும் சற்றுப் பொறுத்துப் போகக் கூடாதா?" என்று தியூனஸைப் பார்த்துக் கேட்டுக் கொண்டிருந்தான்.

அந்தக் காட்சியைக் கண்ணுற்ற இளவரசிக்குத் தனக்கும் தன் அரசாங்கத்துக்கும் மாபெரும் அவமானம் ஏற்பட்டு விட்டதாகவே தோன்றியது. அவள் திடீரென்று தன் கையை உயர்த்தினாள். அதைக் கண்டதும் தியூனஸ் நடுநடுங்கிப் போய்விட்டான். அந்த நடுக்கத்திலே அவனுடைய தலையிலிருந்த குடம் சரிந்து கீழே விழுந்து உடைந்து விட்டது. அதிலிருந்து கொட்டிய நீரைக் 'கட கட'வென்று மணல் குடித்துவிட்டது. அந்த மணலுக்கு ஏன்தான் அவ்வளவு தாகமோ? மணலில் 'குப்குப்' பென்று எழும் இரண்டொரு குமிழிகள் மட்டும்தான் எஞ்சியிருந்தன. நம்பிக்கை நசித்துவிட்டது. ஆயினும் ஆசை விட்டபாடில்லை. ஆனால் அந்த ஆசை வாழ்க்கை இன்னும் எத்தனை கண நேரந்தான் நீடித்திருக்கப் போகிறதோ. யார் கண்டார்கள்?

(தொடரும்)




## 4. இளவரசியின் வெற்றி

**ப**ஹ்மான் மலைமீது ஏறிச் செல்கையில் இரு புறமும் கருங்கற்கள் ஏராளமாக இருந்ததைப் பார்த்தான். அவனுக்கு உண்மையில் பயம் ஏற்பட்டது. அந்தக் கற்கள் மனிதர்கள் உருவத்திலும் குதிரைகள் உருவத்திலும் இருந்தது கண்டு அவன் நடுநடுங்கிப் போனான். சற்று தூரம் போனவுடன் மனிதர்கள் யாரையும் காணோம். ஆனால் அவனைத் திட்டும் குரல்கள் மாத்திரம் கடுமையாகக் கேட்டன. 'திருடா' 'கொலைகாரா' என்பன போன்ற சொற்களை உபயோகித்துப் பல அசரீரிகள் அவனைத் திட்டின. இன்னும் சில குரல்கள் அவன் காதருகில் வந்து உறுமுவது போலிருந்தன. அவனை எப்படியாவது பயப்படுத்தித் திருப்பி யனுப்ப முயற்சித்தன அந்தக் கண்காணா உருவங்கள்.

சிறிது நேரம் பஹ்மான் மனம் தளராமலும், தைரியத்தைக் கைவிடாமலும், பின்னால் திரும்பிப் பார்க்காமலும் மேலே மேலே சென்றான். ஆனால் மேலே செல்லச் செல்ல அந்தக் குரல்கள் இன்னும் பயங்கரமாக இருந்தன. பஹ்மான் துறவியின் எச்சரிக்கையை மறந்து திரும்பி ஓடிவிடலாம் என்று பின்னால் திரும்பினான். அந்த நிமிஷமே அவனும் அவன் குதிரையும் கருங் கற்களாக மாறி விட்டனர்.

பஹ்மானுக்கு இந்த கதி நேர்ந்த சமயம் இளவரசி பாரிஜாதமும் இளவரசன் பர்விஸும் தங்களுடைய அண்ணன் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். பஹ்மான் புறப்பட்டதிலிருந்து அவன் அடையாளமாகக் கொடுத்து விட்டுப் போன கத்தியை அவள் தினமும் எடுத்துப் பார்த்துக்கொண்டிருந்தாள். கத்தி பளபளப்பாக இருக்கும் வரையில் அவன் சௌக்கியமாக இருப்பதாக எண்ணிச் சந்தோஷமடைவாள். ஆனால் பஹ்மான் கருங்கல்லாக மாறிய தினத்தன்று அவள் கத்தியைப் பார்த்தாள். அதில் ரத்தக் கறை படிந்திருந்தது. பாரிஜாதமும் பர்விஸும் அதைக் கண்டு திடுக்கிட்டார்கள். கத்தியில் ரத்தக் கறை பட்டிருப்பதால் தங்கள் சகோதரன் இறந்திருக்க வேண்டும் என்பதை அறிந்து அவர்கள் அளவில்லாத் துக்கமடைந்தனர். ரொம்ப நேரம் வரையில் அவர்களுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. பிறகு பர்விஸ் தன் துக்கத்தை ஒருவாறு சமாளித்துக் கொண்டு தன் தங்கையைப் பார்த்துக் கூறினான்: "பாரிஜாதம், இனி அழுது பிரயோசனம் இல்லை. நான் சென்று அந்த அதிசயப்பொருள்களைக் கொண்டு வருகிறேன். மேலும் அண்ணாவுக்கு என்ன நேர்ந்தது என்பதையும்தெரிந்துகொண்டுவருகிறேன்."

ஆனால் பாரிஜாதத்திற்கு பர்விஸ் செல்வது பிடிக்கவில்லை. ஆகையால் அவள் தன் தமையனைப் பார்த்து, "அண்ணா, நீயும் சென்று, உனக்கும் பெரிய அண்ணாவுக்கு நேர்ந்த கதி ஏற்பட்டால் அப்புறம் இங்கே தனியாக நான் என்ன செய்வது? நீயாவது எனக்குத் துணையாயிரு. நீ போக வேண்டாம், அண்ணா!" என்றாள்.

ஆனால் பர்விஸ் தன் தங்கையின் பேச்சைக் கேட்கவில்லை. "பாரிஜாதம்! வீணாகக் கவலைப் படாதே. அண்ணா தோல்வியுற்றால் நானும் தோல்வியடைவேன் என்று ஏன் நினைக்கிறாய்? நான் வெற்றியுடன் திரும்பி வருவேன். நான் நூறு முத்துக்களடங்கிய ஒரு மாலை தருகிறேன். அவற்றை ஒவ்வொன்றாக உருட்டிக் கொண்டு வா. முத்துக்கள் உருளாமல் நின்று விட்டால் நான் இறந்து விட்டதாக நினைத்துக்கொள்" என்று தங்கையிடம் கூறி ஒரு முத்து மாலையைக் கொடுத்து விட்டு பர்விஸ் மறுநாட் காலையில் புறப்பட்டு விட்டான். பஹ்மான் சென்ற அதே ரஸ்தாவில் பர்விஸும்

சென்றான். இவ்வாறு பிரயாணம் தொடங்கிய இருபதாம் நாள் பஹ்மான் சந்தித்த அதே துறவியின் இருப்பிடத்திற்கு அவனும் வந்தான். துறவியைப் பார்த்து, பேசும் பறவை, பாடும் மரம், மஞ்சள் நீர் — இருக்குமிடத்திற்கு வழி சொல்லும்படி கேட்டான்.

அந்த அதிசய வஸ்துக்களை அடைவதில் உள்ள அபாயங்களைத் துறவி பர்விஸுக்கு எடுத்துச் சொல்லி அவன் மேற் செல்லாதபடி தடுக்க முயன்றான். மேலும், "உனக்கு முன் வந்த இளைஞன் நான் கூறிய எச்சரிக்கைகளைக் கவனிக்காததால் கருங்கல்லாகச் சமைந்து விட்டான். நீயும் அதே துர்க் கதிக்கு ஆளாகாதே" என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தான். ஆனால் பர்விஸ் பிடிவாதமாகவும் உறுதியாகவும் இருந்தான்.

அவன் பிடிவாதமாயிருப்பதைக் கண்டு துறவி கடைசியில் அவனுக்கு வழி சொல்லியனுப்பினான். பஹ்மானுக்குக் கொடுத்ததைப் போலவே ஒரு கிண்ணத்தை அவனுக்கும் கொடுத்து அது உருண்டோடும் வழியே போகச் சொன்னான்.

பர்விஸ் குதிரை மீது ஏறிக்கொண்டு கிண்ணம் உருண்டோடும் வழியே சென்றான். கடைசியில் துறவி கூறிய மலையடிவாரத்திற்கு வந்து சேர்ந்தான். கருங்கற்களைப் பார்த்துக் கலங்காமல் மலைமீது வெகு விரைவாக ஏறிச் சென்றான். அச்சமயம் கோபமும் ஆத்திரமும் நிறைந்த ஒரு குரல் பின்புறம் கேட்டது. "முட்டாள் பையா, நில்! மேலே போகாதே. போனால் உன்னைத் தண்டிப்பேன்" என்றது அக் குரல். தன்னை அதட்டுவதற்கு யார் இருக்கிறார்கள் எனக் கோபம் கொண்டு பர்விஸ் தன் வாளை உறையிலிருந்து உருவிக்கொண்டு பின்னால் திரும்பிப் பார்த்தான். திரும்பியவுடன் பர்விஸும் அவனுடைய குதிரையும் கல்லாய்ச் சமைந்தனர். பர்விஸ் கல்லாக மாறிய சமயத்தில் இளவரசி பாரிஜாதம் தனது சகோதரன் கொடுத்து விட்டுப்போன முத்து மாலையை உருட்டிக் கொண்டிருந்தாள். திடீரென முத்து நகராமல் இருந்துவிடவே அவள் திடுக்கிட்டாள். பர்விஸும் இறந்து விட்டான் என்று அவளுக்குத் தெரிந்து விட்டது. துணையாயிருந்த இரு சகோதரர்களும் இறந்துவிட்டார்கள். இனி என்ன செய்வது என்று பாரிஜாதம் யோசனை செய்தாள். அழுது கொண்டிருந்து பயனில்லை என்பதை அறிந்தாள். தானே சென்று சகோதரர்கள் கதி என்ன ஆயிற்று என்பதைத் தெரிந்து கொண்டு அதிசய வஸ்துக்களையும் கொண்டு வருவது என்று முடிவு செய்தாள்.

அடுத்த நாள் காலையில் ஆண் உடை அணிந்து கொண்டு குதிரை மீது ஏறிப் புறப்பட்டாள். சில நாட்களில் திரும்பி வந்து விடுவதாக வீட்டு



வேலைக்காரர்களிடம் சொல்லிவிட்டு சகோதரர்கள் சென்ற பாதையிலேயே பிரயாணம் செய்தாள்.

இருபதாவது நாள் பிரயாணத்தில், இளவரசர்கள் சந்தித்த அதே துறவியைப் பாரிஜாதமும் சந்தித்தாள். உடனே குதிரையை விட்டிறங்கி துறவியின் அருகில் உட்கார்ந்து கொண்டு அவனைக் கேட்டாள்: "பெரியவரே, தங்கள் அருகில் சிறிது நேரம் இளைப்பாற அனுமதி யளிக்க வேண்டும். முடியுமானால் பேசும் பறவை, பாடும் மரம், மஞ்சள் நீர் முதலிய மூன்று அதிசயப் பொருள்களும் இருக்குமிடத்தைத் தயவு செய்து எனக்குத் தாங்கள் தெரிவிப்பீர்களா?"

துறவி இது கேட்டு நெடுநேரம் யோசனை செய்தான். தன்னுடன் பேசுவது ஆண் உடை தரித்த ஒரு பெண் என்பது அவனுக்குத் தெரியும். அவள் கேட்கும் அதிசயப் பொருள்கள் உள்ள இடத்தைச் சொல்ல அவன் விரும்பவில்லை. இந்த ஆபத்தான காரியத்தில் ஈடுபட வேண்டாம் என எவ்வளவோ அவளிடம் சொல்லிப் பார்த்தான். ஆனால் அவள் துறவியின் எச்சரிக்கைகளை லட்சியம் செய்பவளாயில்லை. துறவி பேசி முடித்ததும் நிதானமாகப் பாரிஜாதம் அவனைப் பார்த்துக் கூறினாள்: "ஐயா, இம்மாதிரி பயப்படுத்திவிட உம்மால் முடியாது. எனக்கு நீர் வழி சொன்னால் நான் கட்டாயம் வெற்றி பெறுவேன். என்ன பயங்கர சப்தம் கேட்டாலும் நான் திரும்பிப் பார்க்க மாட்டேன். மலை ஏறும் பொழுது கேட்கும் பயங்கரக் குரல்கள் என் காதில் விழாமலிருப்பதற்கு ஒரு ஏற்பாடு செய்திருக்கிறேன். என் காதுகள் இரண்டையும் பஞ்சு வைத்து அடைத்துக் கொண்டால் யார் கத்தினால் எனக்கு என்ன? இந்த யுக்தியினால் என் மனம் கலவரப்படாமல் நான் மலையுச்சியை அடைந்து விடுவேன்."




இதற்கு முன் தன் உதவியை நாடியவர்கள் இம்மாதிரி முன் யோசனையுடன் சென்றதைத் துறவி பார்த்ததில்லை. பாரிஜாதம் இவ்வளவு புத்திசாலித்தனமா யிருப்பது கண்டு துறவி ஆச்சரியமடைந்தான். எனினும் இந்த முயிற்சியில் ஈடுபட வேண்டாம் என அந்தப்பெண்ணுக்கு எவ்வளவோ சொல்லிப் பார்த்தான். அவள் பிடிவாதமாயிருக்கவே, அவள் கையில் ஒரு கிண்ணத்தைக் கொடுத்து அவளுடைய சகோதரர்களுக்குச் சொன்ன யோசனைகளை அவளுக்கும் கூறினான்.

துறவிக்கு நன்றி செலுத்தி விட்டுப் பாரிஜாதம் உடனே குதிரை மீது ஏறிக் கொண்டு புறப்பட்டாள். கிண்ணத்தை தன் முன்னால் எறிந்து விட்டு அதைத் தொடர்ந்து சென்றாள். மலையடிவாரத்திற்குச் சென்று கிண்ணம் நின்றது. அந்த இடத்தில் குதிரையை விட்டிறங்கியதும் ஏராளமான கருப்புக் கற்கள் தென்பட்டன. அவை யெல்லாம் முன்பு மனிதர்களாயிருந்து கற்களாக மாறியவை என்

பதை நினைத்துப் பாரிஜாதம் வருந்தினாள். சற்று நேரம் சிந்தனை செய்த பிறகு காதுகளில் பஞ்சை அடைத்துக்கொண்டு மலைமீது ஏறினாள். காதில் ஏதேதோ சப்தங்கள் கேட்டனவே யொழிய, அவை என்ன சொல்கின்றன என்பது விளங்கவில்லை. எங்கேயோ வெகு தூரத்திலிருந்து யாரோ கூவுவது போலிருந்தது. மேலே ஏற ஏற சப்தங்கள் பலமாக இருந்தாலும் அவள் காதுகளில் பஞ்சை நன்றாக அடைத்திருந்ததினால் எதுவும் தெளிவாகக் கேட்கவில்லை. இவ்வாறாக எதையும் லட்சியம் செய்யாமல், தைரியமாக மலையுச்சியில் ஏறி, பேசும் பறவை இருந்த கூண்டைப் பிடித்துக் கொண்டு, "உன் தந்திரம் என்னிடம் பலிக்கவில்லை. உன்னால் இனி தப்பியோடவும் முடியாது" என்று உரக்கக் கூறினாள்.

இதற்குள் பயங்கரக் குரல்கள் அடங்கிவிட்டன. பாரிஜாதம் உடனே தன்னுடைய காதுகளில் அடைத்திருந்த பஞ்சை எடுத்தாள். இந்த சமயத்தில் பேசும் பறவை அவளைப் பார்த்துப் பேசியது. "தைரியம் மிக்க பெண்மணியே, உன்னை பயமுறுத்தியதற்காக என் மீது கோபம் கொள்ளாதே. என்னை நீ பிடித்துக் கொண்டுவிட்டதால் இனி நான் உன் அடிமை. நீ யார் என்பதை நீ அறியாவிட்டாலும் நான் அறிவேன். சமயம் வரும்பொழுது உனக்கு அளவிலா ஆனந்தம் கிடைப்பதற்கு நான் உதவி புரிவேன். நான் சொல்வது உண்மை என்பதை நிரூபிக்க வேண்டுமானால் நீ இப்போது ஏதாவது உத்தரவிடு. அதை உடனே நிறைவேற்றி வைக்கிறேனா இல்லையா என்று பார்."

இதைக் கேட்டுப் பாரிஜாதம் பரவசமடைந்தாள். உடனே பேசும்பறவையிடம், "பட்சியே, நீ என்னிடம் இவ்வளவு அன்பு காட்டியதற்கு சந்தோஷம்" என்றாள். (தொடரும்)



இந்தக் கட்டத்துக்குள் ஆறே ஆறு நேர் கோடுகள் இழுத்து, ஒவ்வொரு புள்ளியையும் தனித் தனியாகக் கட்ட வேண்டும். முடியுமா உங்களால்?

சென்ற வார விடுகதைக்கு விடை: சீட்டுக்கட்டு

## அதுவும் வராது!

கோபு சரித்திரப் பாடத்தில் ஒரு கேள்விக்குத் தப்பாக விடை எழுதியிருந்தான். அவனுடைய ஆசிரியர் விடையைத் திருத்தி எழுதிக்கொடுத்து, அதைப் போல இருபது முறை 'இம்போஸிஷன்' எழுதிக் கொண்டு வரும்படியாகச் சொன்னார்.

விடை மிகவும் பெரிதாக இருந்தது. ஏறக் குறைய இரண்டு பக்கம் வரும். கோபு எழுதி எழுதிப் பார்த்தான். கை வலித்தது. முதுகும் வலித்தது. கடைசியில் அவனால் எழுதவே முடியவில்லை. எழுதியதை எண்ணிப் பார்த்தான். மொத்தம் பதினேழு முறை எழுதியிருந்தான். அவன் எழுந்து, எழுதியதை ஆசிரியரிடம் கொண்டு போய்க் காட்டினான். வாத்தியார் எண்ணிப் பார்க்க மாட்டார் என்று அவன் நினைத்தான். ஆனால் சரித்திர ஆசிரியர் சாம்பாஜிராவையா ஏமாற்ற முடியும்? எமகண்டர் ஆச்சே அவர்! எல்லாவற்றையும் அவர் வரிக்கு வரி படித்துப் பார்த்து விட்டு எத்தனை முறை எழுதியிருக்கிறான் என்று கூட்டிப்பார்த்தார். மொத்தம் பதினேழு முறை. உடனே முகத்தில் கோபம் தாண்டவமாட, மூக்குக் கண்ணாடியை நெற்றிக்கு மேல் உயர்த்தி விட்டுக் கொண்டு, "ஏண்டா பயலே, இருபது தடவை உன்னை எழுதச் சொன்னேன் நீ பதினேழு தடவைதானே எழுதியிருக்கிறாய்? என்னை ஏமாற்றப் பார்க்கிறாயா?" என்றார்.

கோபுவுக்குச் சிரிப்பு வந்தது. ஆனால் அதை அடக்கிக் கொண்டு, "ஸார், நான் என்ன செய்வது? எனக்குக் கணக்கும் சரியாக வராதே!" என்றான்.

# படித்துப் பாருங்கள்!

## தன்னம்பிக்கை

அமெரிக்கப் பேரறிஞரும் வேதாந்தியுமான ரால்ப் வால்டோ எமர்ஸன் எழுதிய நூல்களில் தன்னம்பிக்கை உலகப் புகழ் பெற்றதாகும். இதிலுள்ள கருத்துக்களை அடிக்கடி மேற்கோளாக எடுத்துக் காட்டாத எழுத்தாளர்களோ, பண்டிதர்களோ இல்லையென்று கூறலாம். மதிப்பிற்குரிய நம் அருமைத் தலைவர் காந்தி மகாத்மாகூட இந்த நூலிலிருந்து மேற்கோள்கள் எடுத்துக் காட்டுவதுண்டு. எமர்ஸன் தன் வாழ்நாள் முழுவதும் செய்து வந்த உபதேசத்தின் சாராம்சம் முழுவதும் இதில் அடங்கியிருக்கிறது. தன்னம்பிக்கை மூலம் வாழ்க்கையில் நாம் எப்படி முன்னேற முடியும் என்பதை எமர்ஸன் இதில் தெளிவாக்கியிருக்கிறார். சிறப்பு மிக்க இந்நூலை, நாற்பது வருஷங்களுக்கு முன், பிரபல தேசபக்தரும் தமிழறிஞருமான ஸ்ரீ வ. வெ. சு. ஐயர் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டார். இப்போது அது இரண்டாம் பதிப்பாக வெளிவந்திருக்கிறது. மூல ஆசிரியருடைய எழுத்தில் உள்ள வேகமும் காம்பீர்யமும் மொழிபெயர்ப்பில் அப்படியே வந்திருக்கிறது. விலை அணா 8. பிரசுரம்: சர்வோதயப் பிரசுராலயம், அகில பாரத சர்க்கா சங்கம், வீரபாண்டி, திருப்பூர்.

## வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்

தமிழ்நாடு ஆங்கில மோகத்தில் ஆழ்ந்திருந்த காலத்தில் அருந் தமிழ்ப் புலவர் சிலர் தோன்றித் தமிழைப் போற்றி வளர்த்தனர். அவர்களில் ஸ்ரீ வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியாரும் ஒருவர். மதுரை நகரத்தில் பிறந்து, ஆங்கிலமும் தமிழும் ஆர்வத்துடன் பயின்று, பல்கலைக் கழகப் பட்டம் பெற்ற இப்பேரறிஞர் சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரியிலே தமிழாசிரியராக அமர்ந்தார். செந்தமிழால் மாணவர் சிந்தையைக் கவர்ந்தார். புத்தப் புதிய பல நூல்கள் எழுதித் தமிழன்னைக்குத் தொண்டு புரிந்தார். முப்பத்திரண்டாம் வயதில் கொடிய காசநோய்க் குள்ளாகி உலக வாழ்வைத் துறந்தார். புகழ்பெற்ற இத்தமிழ்ப் பேரறிஞருடைய வாழ்க்கை வரலாற்றை வித்வான் ஸ்ரீ கா. சுப்ரமண்யம் எழுதியுள்ளார். தமிழில் ஸ்ரீ சூரியநாராயண சாஸ்திரியாரின் வாழ்க்கையைப் பற்றி முதலாவதாக வெளிவந்திருக்கும் நூல் இதுவேயாகும். அழகாகவும் ரசமாகவும் எழுதப் பட்டிருக்கிறது. ஸ்ரீ சாஸ்திரியாருடைய வாழ்க்கையைப் பற்றி அறிந்து கொள்ள விரும்புபவர்களுக்கு மிக்க உதவியாக இருக்கும். விலை. ரூ. 2; பிரசுரம்: வி.ரூ. சுவாமிநாதன், பிரசுரகர்த்தர், மதுரை.

## 1. பிரார்த்தனை கீதம்
## 2: பரத கீதம்

மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றையும் முறைப்படி வணங்கி வழிபடும் பக்த கோடிகளுக்கு, பக்திச் சுவை ததும்பும் கீர்த்தனங்கள் கிடைத்தால் அது சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்தது போலாகும். அத்தகைய பிரார்த்தனைக் கீர்த்தனைகள் ஸ்வர அமைப்புடன் இந்நூலில் அடங்கியிருக்கின்றன.

பரத கீதத்தில் அலாரிப்பு முதல் பதவர்ணம் தில்லானா, நாடோடி நடனம் வரையில் ஸ்வரப்பிரஸ்தாரங்களுடன் பதினாறு கீதங்கள் இருக்கின்றன. இவ்விரண்டு புத்தகங்களையும் தயாரித்தவர்: ஸ்ரீமதி கே. லலிதா, ஸ்ரீ சரஸ்வதி கான நிலையம், திருவல்லிக்கேணி, சென்னை. விலை: பிரார்த்தனை கீதம் அணா: 0—12—0; பரத கீதம் ரூ. 1.

## Monthly Digest of Economics and Statistics-Madras State-April 1950.

சென்னை சர்க்கார் புதிதாக ஆரம்பித்திருக்கும் ஒரு மாத வெளியீடு இது. விவசாயம், கைத்தொழில், சுகாதாரம் இறக்குமதி—ஏற்றுமதி, மின்சாரம் முதலியவை பற்றிய புள்ளி விவரங்களை இம்மாகாண மக்களுக்குக் கொடுப்பதுதான் இதன் நோக்கம். கைத்தொழில் வளர்ச்சிக்குப் புள்ளி விவரங்கள் எவ்வளவு இன்றியமையாதவை என்பதை விளக்கி சென்னை சர்க்கார் பொருளாதார ஆலோசகர் ஸ்ரீ நடராஜன் எழுதிய கட்டுரை ஒன்றும் இதில் அடங்கியிருக்கிறது. விலை ரூ. 1—2—0; கிடைக்குமிடம்: The Economic Adviser, Government of Madras.

# குழந்தை வேண்டாம்!

ர. வே.

கல்யாணம் நடந்து இரண்டரை வருஷங்களுக்குமேல் ஆகிவிட்டன இன்னும் தன் நாட்டுப் பெண் பூக்காமல் அத்திமரம்போல நின்று கொண்டிருந்ததில் பொன்னம்மாளுக்குச் சொல்ல முடியாத அளவு வருத்தம். 'பாட்டி' என்று வாய் நிறைய அழைப்பதற்குத் தனக்கு ஒரு பேரனோ பேத்தியோ பிறக்கவில்லையே என்ற கவலை அவளுக்கு அதிகமாக இருந்தது.

வாஸ்தவம்தானே? பொன்னம்மாளின் ஒரே புதல்வன் நடராஜன். அவனுக்குப் பிறக்காவிட்டால், 'பரவாயில்லை' என்பதற்கு. அவனைத் தவிர இன்னும் இரண்டொரு பெண் பிள்ளைகள் இருந்தால், தேவலை. அவனோ அம்மாவின் ஏக புத்திரன். அவளுக்குப் பேரக் குழந்தைகள் வேண்டுமென்றால், அவனுக்குத்தானே பிறந்தாக வேண்டும்? அக்கம் பக்கத்தில் உள்ள கிழவிகள் எத்தனையோ பேர் ஏழெட்டுப் பேரன் பேத்திகளை வைத்துக் கொண்டு ஆனந்தமாகப் பொழுது போக்கிக் கொண்டிருப்பதைப் பார்க்கும்போதெல்லாம் அவளுக்கு மனம் மிக்க வேதனைப்படும்.

இதற்காகப் பொன்னம்மாள் ஒரு முறையாவது சிவகாமியைக் கடுமையாகப் பேசியிருக்க மாட்டாள். 'மலடு' 'ஜடம்' 'மரம்' போன்ற சொற்களினால் அர்ச்சனை செய்யும் மாமியார் வர்க்கத்தைச் சேர்ந்தவள் அல்ல அவள். "என்னவோ அம்மா, சிவகாமி, நீங்கள் இரண்டுபேரும் சீரும் சிறப்புமாய்க் குடித்தனம் நடத்துவது எனக்குப் பெருமையாகத்தான் இருக்கிறது. உங்கள் அன்புக்கும் அபிமானத்துக்கும் சாட்சி சொல்கிறாப்போல, ஒரு குழந்தையை மட்டும் பெற்றுக் காண்பித்துவிடு"—இவ்வளவுதான் மாமியார் சொல்லுவாள்.

குழந்தையைப் பற்றி நடராஜனோ அல்லது சிவகாமியோ அவ்வளவாக வருத்தப்பட்டதில்லை. அவர்களையும் சேர்த்து வைத்துத்தான் பொன்னம்மாள் வருத்தப்படுகிறாளே! 'ஒரு மண்டலம் சுற்றுவதாக வேண்டிக்கொள்' என்று மாமியார் மலடு நிவர்த்தி யோசனை சொல்லுவாள். உடனே சிவகாமி அன்றிருந்தே மண்டலத்தைத் தொடங்கி விடுவாள். அது முடிந்தால், இன்னொன்று! அம்மனுக்கு தினமும் விளக்கேற்றுவதாக வேண்டிக் கொள்வாள். இவ்வாறு சிவகாமி செய்த பிரார்த்தனைகள் கணக்கிலடங்கா. அவள் தொட்டில் கட்டி மாட்டிய கோயில்கள் அனந்தம். "நடராஜா, உன் பெண்டாட்டியை எத்தனை நாள்தான் இப்படியே வைத்துக் கொண்டிருக்கப் போகிறாய்? யாராவது ஒரு லேடி டாக்டரிடம் கொண்டுபோய்க் காண்பியேன்!" என்று அம்மா சொல்வதற்காக, நடராஜன் பொழுது விடிந்தால் சிவகாமியை யாராவது ஒரு டாக்டரம்மாளிடம் அழைத்துச் சென்று விடுவான். அவனுக்கு இதற்கே நேரம் சரியாக இருந்தது.

"உடம்பில் ஒன்றும் கோளாறு இல்லை. இப்படித்தான் கொஞ்ச நாள் வரை ஒன்றுமே இருக்காது. அப்புறம் திடீரென்று வயிற்றில் குழந்தை உருவாகும்" என்று சிவகாமியின் உடம்பைப் பரீட்சித்து விட்டுச் சொன்னார் ஒரு பிரபல டாக்டர். ஆகவே அச்சொற்கள் அவர்களுக்குச் சற்று ஆறுதலாக இருந்தன.

## 2

சிவகாமி வாசலிலேயே நின்றவண்ணம் கவனித்துக் கொண்டிருந்தாள். கொஞ்ச நாட்களாகப் பூட்டிக் கிடந்த எதிர்வீட்டு வாசலில் ஒரு ஜட்காவண்டி வந்து நின்றது. வண்டியிலிருந்து முதலில் இறங்கியவன் நல்ல வாலிபன். இருபத்தைந்து வயதிருக்கும். பார்ப்பதற்கு லட்சணமாய் இருந்தான். அவன் கை கொடுத்து வண்டியிலிருந்து இறக்கிவிட்ட சிறுவனுக்கு மூன்று வயதிருக்கலாம். அவனுக்குப் பின்னால் இறங்கிய யுவதியின் கையில் இரண்டு வயது மதிக்கத்தக்க குழந்தை ஒன்று இருந்தது. அந்தப் பெண் சற்றுச் சிரமப்பட்டுக் கொண்டு இறங்கியதிலிருந்து, அவள் கருவுற்றிருக்கிறாள் என்று சிவகாமி ஊகித்துக் கொண்டாள்.

சிவகாமியின் மனம் கணக்குப் போடுவதில் சிறிது நேரம் லயித்திருந்தது. அந்தப் பெண்ணுக்கு ஏறக்குறைய இருபத்தொரு வயது இருக்கும். இந்தக்

காலத்து நாகரீகப்படி அவளுக்குப் பதினேழு அல்லது பதினெட்டு வயதில் கலியாணம் நடந்ததென்று கணக்குப் போட்டால்,—தேவலையே! மூன்று வருஷத்திற்கு மூன்று குழந்தைகள்; அதாவது, வருஷத்திற்கு ஒரு குழந்தை!

அக்குழந்தைகள் இரண்டையும் கட்டித் தூக்கி அணைத்துக் கொள்ளலாம் போலத் தோன்றியது சிவகாமிக்கு. செக்கச் செவேல் என்று கண்ணைப் பறிக்கும் சிவப்பான—அதாவது, வெண்மையான மேனி. குறு குறுப்புப் பாய்ந்தோடும் முகம். 'க்ளாக்ஸோ' டப்பாவில் உள்ள குழந்தையைப்போல உருண்டு திரண்ட உடல். போய், அந்தக் குழந்தையைப் பிடுங்கிக் கொண்டு வந்து விடலாமா என்று கூட சிவகாமி எண்ணினாள்.

தன் புருஷன் இந்த எதிர் வீட்டுக் குடும்பத்தைக் கவனித்தானோ, இல்லையோ என்று நினைத்துக் கொண்டு அவள் காமிரா உள்ளுக்குச் சென்றாள். "இப்போது எதிர் வீட்டில் புதிதாக யாரோ வந்திருக்கிறார்களே. பார்த்தாயா?" என்று நடராஜன் தான் அவளை முதலில் விசாரித்தான். அவன் ஜன்னலுக்கு நேரே நாற்காலியைப் போட்டுக் கொண்டு எதிர் வீட்டையேதான் கவனித்துக் கொண்டிருக்கிறான்.

"அதுதான் நானும் உங்களைக் கேட்கலாம் என்று வந்தேன்" என்றாள் சிவகாமி. இருவரும் எதிர் வீட்டுப் புதுக் குடும்பத்தைப் பற்றி வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தனர்.

"அந்தப் பெண் இருக்கிறாளே, அவளுக்கு எவ்வளவு வயதிருக்கும் என்று நினைக்கிறீர்கள்?"

"இருபது இருபத்தொரு வயது இருக்கும்."

"அதற்குள்ளேயே மூன்று வயதுக் குழந்தை ஒன்று. அதற்கு அடுத்தபடியாக இரண்டு வயதுக் குழந்தை ஒன்று. வயிற்றில் மூன்றாவது குழந்தை இருக்கும் போல் இருக்கிறது!"

"ஏன், உனக்குப் பிறக்கா விட்டால் மற்றவர்களுக்குப் பிறக்கக் கூடாதா?"

"அதற்குச் சொல்ல வில்லை. வெறுமனே கேட்டேன்."

"சரி, நீ எதற்குக் கேட்டாலும் சரி,—அது போகட்டும். அந்தப் பெண்ணின் புருஷனுக்கு எவ்வளவு வயதிருக்கும் என்று நினைக்கிறாய்?"



"இருபத்து நாலு அல்லது இருபத்தைந்து இருக்கும். ஏன்? — இருபத்தைந்து வயதிற்குள் மூன்று குழந்தைகளுக்குத் தகப்பனாவதா என்று ஆச்சரியப்படுகிறீர்களா?"

இப்படி நடராஜனும் சிவகாமியும் என்னென்னவோ பேசிக் கொண்டிருந்தனர். "இந்தக் காலத்தில் பெண்களுக்குப் பதினேழு வயதிலும் பதினெட்டு வயதிலும் கலியாணம் பண்ணுவதென்று வைத்துக் கொண்டிருக்கிறார்களே, அது நல்லதுதான். இல்லாவிட்டால், அந்தக் காலத்தைப் போல் இந்த எதிர் வீட்டுப் பெண்ணுக்குப் பத்துப் பன்னிரண்டு வயதில் கலியாணம் பண்ணி வைத்திருந்தால் இத்தனை நாளைக்குள் பத்துக் குழந்தைகள் பெற்று, இவள் கிழவியாகி யிருப்பாள்" என்று அவர்கள் கூறிக் கொண்டனர்.

## 3

ராமனும் வாசந்தியும் சிவகாமியின் உற்ற நண்பர்கள். 'மாமி', 'மாமி' என்று ராமன் சிவகாமியைச் சுற்றிச் சுற்றி வருவான். வாசந்தி பாதி நேரத்திற்குமேல் நடராஜனின் அறையிலுள்தான் இருப்பாள். அவளுக்கு அங்கு பூரண சுவாதீனம்

உண்டு. கொட்டாமல், கலைக்காமல் எதை வேண்டுமானாலும் எடுக்கலாம்; தொடலாம்; ஆராயலாம்; பழையபடி அந்தந்தச் சாமான்களை அவை ஒவ்வொன்றும் இருந்த இடத்தில் வைத்து விட்டால் சரி. ராமனைக் கண்டால், பொன்னம்மாளுக்குக் கூட மிகவும் பிடித்திருந்தது. மடியாக இருக்கும்போது மட்டும் அவள் கிட்டே நெருங்கக் கூடாது. மற்றப்படி என்ன வேண்டுமானாலும் செய்யலாம்.

எதிர்வீட்டுப் பெண்ணையோ அல்லது அவள் புருஷனையோ—அதாவது ராமன்-வாசந்தியின் பெற்றோர்களுக்கும் அவர்களுக்கும் அவ்வளவாகப் பரிச்சயம் போதாது. குழந்தைகள் சகவாசத்தோடு சரி. அவர்கள்தான் எதிர்வீடுகள் இரண்டிற்கும் இடையில் பாலமாக அமைந்திருந்தனர். "எங்கம்மா இந்த உழக்கு நிறையப் பால் வாங்கிக்கொண்டு வரச் சொன்னாள்" "எதிர்வீட்டு மாமிக்கு இந்தக் கரண்டியிலே சர்க்கரை வேணுமாம், அம்மா!" என்பது போன்ற செய்திகளை ராமன்தான் அங்கே கொண்டு போய்ச் சேர்க்கும் தபால்காரன்.

பொன்னம்மாள் ராமனைத் தன்னோடு அழைத்துக் கொண்டு கோயிலுக்குச் செல்வதும் உண்டு. "ஏண்டா, உனக்கு எப்போது தம்பிப் பாப்பா பிறக்கப் போகிறது?" என்று அவள் ஒருநாள் ராமனிடம் விசாரித்தாள். அவன் "இன்னும் இரண்டு மூன்று மாதமாகும்" என்று தன் வீட்டில் பேசிக்கொண்டதை அவளிடம் சொன்னான். ராமன் வீட்டிற்குச் சென்றதும், அவள் சிவகாமியிடம் "சிவகாமி, நீயும் அவளைப் போல ஒரு குழந்தையைப் பெற்றுவிடு, அம்மா! நான் கேட்பது இவ்வளவுதான். அவளைப் போல மூன்று குழந்தை பெற வேண்டும் என்று சொல்லவில்லை. ராமன் அல்லது வாசந்தியைப் போல, ஒரே ஒரு குழந்தையை மட்டும் பெற்றுக் காண்பித்து விடு. என்னவோ சொல்கிறேன் என்று நினைத்துக் கொள்ளாதே. உனக்கும் ஒன்று பிறக்கும். பார்த்துக் கொண்டேயிரு" என்று சொன்னாள்.

திடீரென்று ஒருநாள் ஆபீசிலிருந்து வந்த நடராஜன் தூக்கி வாரிப் போடுகிறாற்போல, மாற்றல் உத்திரவைக் கொண்டு வந்தான். முன்பின் தெரியாத ஆந்திர தேசத்தில் ஏதோ ஒரு ஊருக்கு அவனை மாற்றியிருந்தார்கள். ஆனந்தமாகச் சொந்த வீடும் வாசலுமாக இருந்தது யார் கண்ணை உறுத்தியதோ? நடராஜன் சிவகாமியை மாத்திரம் தன்னோடு கூட்டிக்கொண்டு செல்வதென்று நிச்சயித்தான். தெலுங்கு தெரியாத அந்தப் பிரதேசத்தில் அம்மாவை அழைத்துக் கொண்டு போய் என்ன செய்வது? தவிர, மூன்று பேராய்ப் போவது ஆகாது. அதனால், கொஞ்சநாள் அங்கே இருந்து பார்த்துவிட்டு, என்னென்ன சௌகரியங்கள் உள்ளன என்பதைத் தெரிந்துகொண்டு வந்து அம்மாவை அழைத்துக்கொண்டு போகலாம். அதற்குள், முடியுமானால் இந்த ஊருக்கே



மாற்றல் வாங்கிக்கொண்டு வந்துவிட்டால் தீர்ந்தது.

மகனையும் நாட்டுப் பெண்ணையும் வண்டியேற்றி அனுப்பும்போது கூட, பொன்னம்மாள் சிவகாமியினிடம் "நான் சொன்ன ஜபதபங்களையெல்லாம் மறந்து விடாதே. விடாமல் பண்ணிக் கொண்டு வா. நிச்சயமாகக் குழந்தை பிறக்கும். நீ கவலைப்படாதே" எனக் கூறிவிட்டுத் தான் உள்ளே சென்றாள்.

4

எதிர் வீட்டுப் பெண்ணின் புருஷன் பொன்னம்மாளிடம் வந்து சொன்னான்: "பாட்டி, இந்தத் தடவை பிரசவத்துக்கு அவளைப் பிறந்தகத்திற்கு அனுப்ப அங்கு சௌகரியம் இல்லை. அதனால் இங்கேயே தான் வைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. பெரியவர்களான நீங்கள்தான் கவனித்துக்கொள்ள வேண்டும். எனக்கு ஒன்றுமே தெரியாது. அவளும் சிறிசு."

ராமனின் தகப்பன் வந்து இவ்வாறு சொல்லிவிட்டுச் சென்றதிலிருந்தே, பொன்னம்மாள் அடிக்கடி எதிர் வீட்டிற்குச் சென்று வந்தாள். பிள்ளைக்கு மாற்றலானதிலிருந்து பொழுது போகாமல் இருந்தது. இப்போது அவளுக்கு இது சற்று மாறுதலாக இருந்தது.

திடீரென்று ஒரு நாள் இரவு ஏழு மணிக்கு எதிர் வீட்டுப் பெண்ணுக்கு வேதனை உண்டாயிற்று. அவள் புருஷன் ஓடிச்சென்று லேடி டாக்டரை அழைத்து வந்தான். நிலைமை அப்படியாகி விடும் என்று யாருமே அப்போது எண்ணியிருக்க மாட்டார்கள்.

கர்ப்பிணி துடியாய்த் துடித்துக்கொண்டிருந்தாள். புருஷன் பிரமை பிடித்தவன் போல் நின்று கொண்டிருந்தான். பயத்தில் ராமனும் வாசந்தியும் வாசலுக்கு ஓடி விட்டனர். பொன்னம்மாளுக்குப் படபடப்பில் மேல் மூச்சு வாங்கியது. டாக்டரம்மாளே ஒரு நிமிஷம் திணறிப் போய் விட்டாள். கடைசியில் மலையைக் கல்லி எலியைப் பிடிப்பது போல, எப்படியோ குழந்தையைக் காப்பாற்றியாகி விட்டது. ஆனால், பெற்றவளைத்தான் காப்பாற்ற முடியவில்லை. அவளுடைய உயிர் பறந்தோடிப் போய்விட்டது.

பொன்னம்மாள் ராமனின் தகப்பனுக்கு மிகவும் ஒத்தாசையாக இருந்தாள். சடங்குகள் எல்லாம் முடிந்து பழையபடி வீடு வீடாக, பதினைந்து நாட்களாகியது. அந்தத் தாயில்லாக் குழந்தைகளைப் பார்க்கும்போதெல்லாம் பொன்னம்மாளுக்குப் பரிதாபமாய் இருந்தது. மனைவியைப் பறி கொடுத்து விட்டுத் தவிக்கும் புருஷனைப் பார்க்கப் பார்க்க அவளுக்கு அழுகை உண்டாயிற்று. குழந்தைகள் இருந்து என்ன பிரயோஜனம்? அவற்றைக் கவனிப்பவள் இல்லையே!

5

நடராஜனும் சிவகாமியும் ஊருக்குப் போய் இரண்டு மாதங்களாகி விட்டன. ஒரு நாள் பொன்னம்மாளுக்கு அவர்களிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. பொன்னம்மாள் அதை ஆவலாக உடைத்துப் பார்த்தாள். கீழ்க்கண்டவாறு அதில் எழுதியிருந்தது:

அம்மாவுக்கு நடராஜன் அநேக நமஸ்காரம்.

இங்கு வந்து மூன்று மாதமாக உன் நாட்டுப் பெண் ஸ்நானம் செய்யவில்லை. போன கடிதாசில் அவள் அதைப் பற்றிக் குறிப்பிட மறந்து விட்டாள். இந்தச் செய்தி உனக்குச் சந்தோஷம் உண்டாக்குமென்று நம்புகிறேன். மற்ற விவரங்கள் பின்பு.

இப்படிக்கு,

நடராஜன்.

இக் கடிதத்தை இரண்டு மூன்றுமுறை படித்தாள் பொன்னம்மாள். தன் நாட்டுப் பெண் அபாயம் எதுவும் இல்லாமல் பிரசவித்தாக வேண்டுமே என்ற கிலி அவளைப் பிடித்துக் கொண்டது. முன்பெல்லாம் அவள் கோயிலுக்குச் சென்றால், தன் பிள்ளைக்கு ஒரு குழந்தை பிறக்க வேண்டுமென்று வேண்டிக் கொள்வாள். ஆனால் இப்போதோ தன் நாட்டுப் பெண்ணுக்குக் குழந்தையே பிறக்காவிட்டாலும் கூட பாதகம் இல்லை என்று அவளுக்குத் தோன்றியது!

# தீமையில் நன்மை

டி. எஸ். சங்கரன்

சமீபத்தில் ஆந்திராவில் இரு பெரும் புயல்கள் வந்து பலத்த சேதத்தை விளைவித்தன அல்லவா? அப்பொழுது நான் அங்கிருந்தேன்.

எட்ரகுண்டா என்பது அழகிய கிராமம். குண்டூர் ஜில்லாவைச் சேர்ந்தது. ஆற்றங்கரையருகில் அமைந்திருந்த அந்தக் கிராமத்துக்கு ரயில்வே ஸ்டேஷன் இல்லாமலிருந்தாலும், ரயில்வே பாதை செல்லும் வழியில் அது இருந்தது. முதல் புயல் அடித்து ஓய்ந்திருந்த சமயம். ஒரு நாள் காலை நான் ஆற்றங்கரைக்குச் சென்றிருந்தேன்.

வானம் அன்று மேகமே இல்லாமல் நிர்மலமாக இருந்தது. எங்கு திரும்பினாலும் அந்த நீல நிறம்தான். ஒளியை இழந்த சந்திரனும் ஒரு சிறிய மேகம்போலிருந்தான். அங்கங்கே புயலால் ஏற்பட்ட சேதங்கள் சிறிது சிறிதாகக் காணப்பட்டன. வெள்ளமும் புயலும் ஏற்பட்ட காரணத்தினால் ஆறு நீர் நிறைந்து கொப்பும் நுரையுமாக ஓடிக் கொண்டிருந்தது.

கரையை அடுத்து ஒரு கோவில். அதற்கு அருகிலிருந்த மரங்களின் இலைகளினிடையே 'சல சல' என்ற சத்தம்; நதியின் 'ஓ' என்ற இரைச்சல்; அத்துடன் ஏற்றம் இறைப்பவர்கள் பாடும் பாட்டு; அடுத்திருந்த நீரோடையில் நீர் விழுவதால் ஏற்படும் இனிய ஓசை. இவைகளையெல்லாம் பக்க ஒலிகளாகக் கொண்டு கோவில் மணியோசை 'ஓம், ஓம்' என்று ஒலித்துக் கொண்டிருந்தது.

இக் காட்சிகளுக்கு இடையே கம்பீரமாக நின்ற இரு அரச மரங்களைப் பார்த்தேன். கோவிலின் அருகில் இருந்தது பெரியது; நதியைத் தொட்டுக் கொண்டிருந்தது சிறியது.

அந்தச் சிறிய மரத்திற்கு அடியில் தான் கிருஷ்ணய்யா உட்கார்ந்திருந்தார். ஆம், அவர் பெயர் கிருஷ்ணய்யாதான். அவர் உள்ளத்தில் எழுந்த கொந்தளிப்பை, வெளியே இருந்த அமைதி அடக்கிக் கொண்டிருந்ததாகப் பட்டது எனக்கு. ஆற்றையே பார்த்துக் கொண்டிருந்தன அவர் கண்கள். அருகில் சென்று பேச்சுக் கொடுக்க ஆரம்பித்தேன்.

"நான் இந்த ஊருக்கு வந்ததிலிருந்து பார்க்கிறேன்; நீங்கள் எப்பொழுதும் வருத்தமாகவே இருக்கிறீர்கள். இப்படி இருப்பதற்கு ஏதோ ஒரு அசாதாரணமான சம்பவம் தங்கள் வாழ்க்கையில் நிகழ்ந்திருக்க வேண்டும்! என்று எனக்குத் தோன்றுகிறது. தங்கள் வருத்தத்தின் காரணத்தை நான் அறியலாமோ?"

"அறியலாம். ஆனால் வாழ்க்கையில் எனக்கு இனி எதுவும் மகிழ்ச்சி அளிக்காது. என் வாழ்நாட்களின் முற் பகுதியைப் பற்றி மட்டும் நீங்கள் தயவு செய்து



கேட்கிறீர்கள். நான் செய்த மன்னிக்க முடியாத குற்றம், என் உள்ள மறிய நான் செய்த அந்தப் படுபாதகமான செயல், என் மனதை ஓயாமல் ஒழியாமல் வாட்டிக் கொண்டிருக்கும்பொழுது, வாழ்க்கையில் எதுதான் எனக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கும்?”

“உண்மைதான்; அது என்ன அப்படிப் பட்ட குற்றம்?”

“அதைத்தான் கேட்க வேண்டாமென்று சொன்னேனே!” என்று சொல்லிவிட்டு, அவர் தம் முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டார்.

ஆனாலும் மனது கேட்கிறதா? — பன்முறை வற்புறுத்திய பிறகு அவர் ஒருவாறு தம் கதையைச் சொல்ல ஆரம்பித்தார்:

* * *

இரண்டு வருடங்களுக்கு முன்பு நான் சென்னைக் கல்லூரி ஒன்றில் படித்துக் கொண்டிருந்தேன். அப்போது நாலைந்து வருஷங்களாக என் கிராமத்தின் பக்கமே நான் வரவில்லை. என் தாயாரைப் பார்க்காமல் வெகு நாட்கள் இருந்துவிட்டதாலும், என் கல்லூரிப் படிப்பும் முடிந்து விட்டதாலும் நான் கிராமத்திற்குச் சென்றேன்.

ஒரு நாள் பொழுது போகவில்லை. எங்களூர் ஆற்றங்கரைப் பக்கம் சென்றிருந்தேன். நதிக் கரையில் அழகே உருவான ஒரு பெண்ணைச் சந்திக்கும்படி நேர்ந்தது. என்னுடைய கண்களை அத்திசையிலிருந்து திருப்ப முடியாமற் செய்து விட்டன அந்த ஒரு ஜோடிக் கண்கள். என்னுடன் சிறு வயதில் விளையாடிய சாந்தாவா இப்படி வளர்ந்து விட்டாள்!

அவள் அந்த ஊரிலேயே பெரிய பணக்காரரான வீரய்ய சௌத்ரியின் புதல்வி. ஒரே பெண்; வேறு புத்திர பாக்கியம் எதுவும் இல்லை. அவர் பணக்காரர் மட்டுமல்ல; எதையும் எந்தச் சமயத்திலும் அஞ்சாது எதிர்த்து நிற்கும் முரடரும்கூட.

நான் தந்தையற்றவன். சாதாரணமான குடும்பத்தில் பிறந்தவன். அவளை நான் மணப்பது என்பது அவ்வளவு எளிதில் முடியக்கூடிய காரியமா?

இதைத் தவிர அவர் தம் செலவில் தம்முடைய சகோதரியின் மகனை சாமிநாதனை மேற்படிப்பிற்காக அமெரிக்காவுக்கு அனுப்பியிருந்தார். அவனை அவர் மறந்து விடுவாரா?

இப்படியெல்லாம் இருந்தாலும் நான் சாந்தாவை அடிக்கடி நதிக்கரையில் சந்தித்து வந்தேன். அதுவும் இந்தச் சிறிய அரச மரத்திற்கு அடியில்தான்!

“நீ என்னை மனப்பூர்வமாகக் காதலிக்கிறாயா? என்ன துன்பம் நேர்ந்தாலும் அதை எதிர்த்து நிற்பாயா?” என்று நான் ஒரு நாள் அவளைத் தனித்து கேட்டேன்.

“உங்களைத் தவிர வேறு எவரையும் மணக்க நான் சம்மதிக்க மாட்டேன்” என்று உறுதி யளித்தாள் அவள்.

இந்தச் சமயத்தில், “உங்கள் உறுதி மொழி எத்தனை நிமிஷங்கள் நிலைத்து நிற்கிறது என்று பார்க்கலாம்!” என்று ஒரு சிம்ம கர்ஜனை எங்களுக்குப் பின்னிருந்து கேட்டது. எதிரில் வந்து நின்றது சாக்ஷாத் வீரய்ய சௌத்ரிதான்!

அன்று அவர் என்னைப் பேசிய பேச்சு இருக்கிறதே, அதை நான் உயிர் உள்ளளவும் மறக்க முடியாது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!



இந்த லட்சணத்தில் பல நாட்கள் கழிந்தன. ஒரு நாள் வீரய்ய சௌந்தரியும், சாந்தாவும் ஆற்றங்கரைக் கோவிலுக்கு வந்திருந்தனர். கோவிலுக்குள் செல்வதற்கு முன்னால் காலைக் கழுவிக் கொள்வதற்காக ஆற்றில் இறங்கினாள் சாந்தா.

அடுத்த நிமிஷம், "ஐயோ!" என்ற அலறல் கேட்டுத் திரும்பினேன். நதியின் பெரிய சுழல் ஒன்றில் சாந்தா தத்தளித்துக் கொண்டிருந்தாள். அங்கே சௌந்தரியையும் என்னையும் தவிர வேறு எவரும் இல்லை. சௌந்தரிக்கோ நீந்தத் தெரியாது. "சாந்தா, சாந்தா!" என்று அலறியபடியே, அவர் என்னைப் பரிதாபத்துடன் பார்த்தார்.

அவ்வளவுதான்; உடனே நான் ஆற்றில் பாய்ந்து அவளைக் கரைக்குக் கொண்டு வந்து சேர்த்தேன். சீக்கிரத்தில் மூச்சும் வந்தது அவளுக்கு. நன்றி ததும்பும் கண்களுடன் சௌந்தரி என்னைப் பார்த்தார். அவருடைய மகளைக் காப்பாற்றி அவர் குல விளக்கை அணையாமல் செய்ததற்காக என்னைக் கட்டித் தழுவிக் கொண்டார். அதற்குப் பிறகு எங்கள் திருமணத்திற்குத் தடை ஏது?

சில நாட்களுக்கெல்லாம் ஒரு நல்ல வேலையும் இந்த ஊரிலேயே எனக்குக் கிடைத்தது. சாந்தாவும் நானும் தனியாக வாழ்க்கை நடத்த ஆரம்பித்தோம். வீட்டில் நிலவிய ஒழுங்கிற்கு இணையே கிடையாது. வாழ்க்கை இன்பமெனும் நதியில் மிதந்து சென்றது.

அன்றொரு நாள் ஆபீஸிலிருந்து நான் சீக்கிரம் வீடு திரும்பி விட்டேன். வீட்டில் நான் கண்ட காட்சியை என்னவென்று சொல்ல?—நவநாகரிக உடையணிந்திருந்த ஒரு வாலிபனுடன் குழைந்து குழைந்து பேசிக் கொண்டிருந்தாள் சாந்தா. சந்தேகம் என் தேகத்தை உலுக்கியது. அவன் யாராய் இருக்க முடியும்? ஒருவேளை அவளுடைய அத்தான் சாமிநாதனாக இருக்குமோ!

சந்தேகம் என்னும் விஷம் புகுந்த என் உள்ளத்தில் நல்லெண்ணம் புகுவதற்கு அஞ்சியது. அதற்கேற்றாற்போல் சாந்தாவும் அவனை எனக்கு அன்று அறிமுகப்படுத்தி வைக்கவில்லை.

அவன் இரண்டு நாட்கள் அங்கு அடிக்கடி வந்தான். மூன்றாம் நாள்தான் முதல் புயல் அடித்தது. மரங்களும், கூரைகளும் விழுந்த வண்ணமாக இருந்தன. எங்கும் கோரக் காட்சி; கூச்சல்; பயங்கரம்—ஆறு கரை புரண்டு ஓடியது.

வெள்ளமும் புயலும் ஓய்ந்து இரண்டு நாட்களாயின. என் மனைவியை அழைத்துக் கொண்டு நான் புயல் செய்த கொடுமைகளைப் பார்ப்பதற்காக ஆற்றங் கரைக்கு வந்தேன்.

திடீரென்று ஒரு மரத்தின் வேரில் கால் தடுக்கி நதியில் விழுந்தாள் சாந்தா. மறுபடியும் அதே சுழல்; அதே கதறல். நான் உடனே மனம் வைத்திருந்தால் அவளை அன்று காப்பாற்றியிருக்கலாம். அதுதான் இல்லை; அவள் அந்த வாலிபனுடன் அன்று சிரித்துப் பேசிய காட்சி என் மனக்கண் முன் நின்றது. 'நமக்குத் துரோகம் செய்த அவள் ஆற்றோடு தான் போகட்டுமே!'' என்றது என்னை அப்போது ஆட்கொண்டிருந்த சந்தேகம். ஒரு கணம் யோசித்தேன்; மனச்சாட்சி அவளைக் காப்பாற்ற வேண்டுமென்று சொல்லியது. உடனே நதியில் குதித்தேன். கடைசி முறையாக என்னை ஒரு பரிதாபகரமான பார்வை பார்த்து விட்டு அந்தச் சுழலில் மறைந்தாள் சாந்தா. பிறகு, ஆறு என்னிடமிருந்து அவளைப் பிரித்து எடுத்துக்கொண்டு போய் விட்டது.

பின்னால், அன்று அவளுடன் பேசிக் கொண்டிருந்த வாலிபன் அவளுடைய ஒன்று விட்ட சகோதரன் என்று அறிந்ததும் என் உள்ளம் உடைந்து விட்டது. அதிலிருந்து என்னையும் இந்த உலகத்தையும் நான் மறந்தே போனேன். உன்மத்தம் பிடித்தவன்போல் இந்த ஊரைச் சுற்றி அலைய ஆரம்பித்தேன். அடிக்கடி இந்த ஆற்றங் கரைக்கு வந்து அவள் மறைந்த இடத்தைக் கொஞ்ச நேரமாவது பார்த்துக் கொண்டிருந்தால்தான் ஒரு சிறிது அமைதியாவது எனக்குக் கிடைக்கிறது.

பார்க்கப்போனால் இந்த நதி எங்கள் வாழ்க்கையோடு இணைந்திருக்கிறது என்று சொல்லவேண்டும். எங்களைச் சேர்த்ததும் இதுதான்; பிரித்ததும் இதுதான் அல்லவா?

இன்று, இந்த நதிக்கரையில் இருக்கும் சிறிய அரசமரத்தைப் போன்றவன் நான். அரசமரம் இந்த நதியில் செல்வனவற்றைப் பார்த்துக் கொண்டிருக்கிறது. ஆனால் இதை மட்டும் ஜலம் இன்னும் அடித்துக் கொண்டு போகவில்லை. அது போல என் வாழ்க்கை வெறும் நதிக்கரையில் நான் நிற்கிறேன். இது வரை எவ்வளவோ சம்பவங்கள் என் வாழ்க்கையில்

நடந்து விட்டன. ஆயினும் நான் இன்னும் உயிரோடிருந்து அவைகளை யெல்லாம் அனுபவித்துக் கொண்டிருக்கிறேன்.

* * *

இவ்வாறு சொல்லி, அவர் தம் கதையை முடித்ததும் நான் அவரிடமிருந்து விடை பெற்றுக் கொண்டேன்.

சில நாட்கள் கழித்து மீண்டும் ஒரு புயல் வருவதற்கு அறிகுறிகள் தோன்றின. அப்பொழுது அடித்த புயல் முந்தியதை விட மிகப் பெரியது.

மூன்று நாட்கள் சேர்ந்தாற்போல் அடித்தது புயல். கூரைகளும், மரங்களும் போட்டி போட்டுக் கொண்டு விழுந்தன. மனிதர்களின் உடல்கள் புரண்டோடும் வெள்ளத்தில் மிதந்து சென்றன.

நதியில் பிரவாகம் அதிகமாகியது. அது வேறு உடைத்துக் கொண்டு ஊரை வெள்ள மயமாக்கியது. வீடிழந்தனர் பலர்; தானியங்களை இழந்தனர் சிலர்; மனைவியை இழந்த கணவன்மார், கணவனை இழந்த மனைவியர், பெற்றோரை இழந்த குழந்தைகள்—இன்னும் எத்தனை எத்தனையோ!

புயல் முடிந்த பிறகு நிவாரணம் பெறும் பொருட்டு மக்கள் கூட்டம் கூட்டமாக நகரத்தை நோக்கிச் சென்றனர்.

என் நண்பர் கிருஷ்ணய்யாவைப் பார்ப்பதற்காக நான் விரைந்து சென்றேன். ஓடுகள் சரிந்து விழுந்த வீட்டில் அவரை உயிரற்ற பிணமாகக் கண்டேன்.

புயல் எவ்வளவோ தீமைகள் செய்திருந்தாலும் அவர் விஷயத்தில் நன்மையையே செய்திருப்பதாக எனக்குத் தோன்றிற்று. ஏனெனில், அவருடைய துன்பத்திற்கு அது ஒரு முற்றுப் புள்ளி வைத்து விட்டதல்லவா?

அவருடைய ஆத்மா சாந்தி அடைய வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொண்டே ஆற்றங்கரையோரம் சென்றேன். 'ஓம், ஓம்' என்று கோவில் மணி ஒலித்துக் கொண்டிருந்தது.

கரையருகில் இருந்த சிறிய அரச மரத்தின் மீது என் கவனம் சென்றது. அதைக் காணவில்லை. புயலிலே அது வெள்ளத்தில் விழுந்திருக்க வேண்டும். கிருஷ்ணய்யா வாழ்வெனும் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டாற் போன்று, அதுவும் நதியின் வெள்ளத்தில் அடித்துச் செல்லப் பட்டுவிட்டது போலும்!

ரூ. 3—0—0 : சில்லறை நன்கொடைகள்.

விட்டலபுரம் தேசத் தொண்டர்கள் மூலமாக ரூ. 317—0—0க்கு விவரம்:—

நாட்டார்குளம் ஹரிஜனங்கள் 30 0 0

ரூ. 10—0—0 : ஸ்ரீமான்கள் செந்திப் பெருமாள், பேரூர்; ரத்தினசாமி நாடார், நடுவக்குறிச்சி; கணேஷ் டாக்கீஸ், ஏரல்.

ரூ. 5—0—0 : ஸ்ரீமான்கள் எஸ். பி. திருநாவுக்கரசு செட்டியார், ஸ்ரீவைகுண்டம்; எஸ். நடராஜன், புதுப்பட்டி; ம. சின்ன நாடார், உமரிமாநகர்; கிருஷ்ணசாமி, கிழத் தட்டப்பாறை; சி. பெருமாள், மேலத்தட்டப்பாறை; கி. தேவராஜ் நாயக்கர், மேலத்தட்டப்பாறை; ஒப்படிக் கமிட்டி பொதுப் பண்டு, மாரமங்கலம்; அ. சுந்தரேச ராமலிங்கம், உமரிமாநகர்; மகாதேவய்யர், மாரமங்கலம்; சடகோபநம்பியாப் பிள்ளை, விஜய நாராயணம்; வி. கே. ஏ. பாலையானந்தம், கொம்மடிக் கோட்டை; கா. பகவதி பாண்டியன், கொம்மடிக்கோட்டை; எஸ். ஜெயராஜ் நாடார், நடுவக்குறிச்சி; பி எஸ். தங்கத்துரை நாடார், நடுவக்குறிச்சி; என். டி. சுந்தரசுப்பு நாடார், நடுவக்குறிச்சி; மூக்கையா நாடார், நடுவக்குறிச்சி; சண்முகப்பெருமாள் நாடார், நடுவக்குறிச்சி; ச. கணேசன், நடுவக்குறிச்சி; ச. தர்மராங்க ராஜா, நடுவக்குறிச்சி; கருத்தையா நாடார், நடுவக்குறிச்சி; ம. சண்முகப் பெருமாள் நாடார், நடுவக்குறிச்சி; த. தங்கத் துரை நாடார், நடுவக்குறிச்சி; ஆ. அய்யாச்சாமி நாடார், நடுவக்குறிச்சி; இ. சுடலைமுத்துக் கோனார், நடுவக்குறிச்சி; ஆர். ராஜகனி நாடார், நடுவக்குறிச்சி; தங்கசாமி ராஜு, திசையன்விளை.

ரூ. 2—0—0 : ஸ்ரீமான்கள் எம். சுந்தரம், ஸ்ரீவைகுண்டம்; ஒ. எம். அபூபக்கர் சாயபு, பேட்மாநகரம்; க. கருப்பசாமியாப் பிள்ளை, பேரூர்; எஸ். எஸ். அப்பாஸ், கொங்கராயக் குறிச்சி; எம். கே. எம். அப்துல்காதர் கொங்கராயக்குறிச்சி; எஸ். ஆர். அப்துல் காதர், கொங்கராயக்குறிச்சி; பூ. சண்முகசுந்தரம் செட்டியார், புதுப்பட்டி; ச. ஆறுமுகம் ஆசாரி புதுப்பட்டி; வி அ. சங்கரநாராயண பிள்ளை, புதுப்பட்டி; நா. சுப்பிரமணியப் பிள்ளை, புதுப்பட்டி; பி. எஸ். பி. சுப்பையா செட்டியார், மாரமங்கலம்; த.பி. அய்யாசாமி, சாயல்புரம்; எஸ். எஸ். ராமன், சாயல்புரம்; எம். செல்லையா, சாயல்புரம்; ஏ. ஆர். கோபால்சாமி, மாரமங்கலம்; ரா.ம. வேலாயுதக்கோன், முக்காணி; வ. தேவசுந்தரம், உமரிமாநகர்; மா. ரூ. அருணாசலம், உமரிமாநகர்; ப. ச. அருணாசல நாடார், உமரிமாநகர்; ஆர். எஸ். துளசி நாடார், புதுக்குடி; டி.பி. சுந்தரராஜ், திருத்தொண்டநல்லூர்.

ரூ. 1—0—0 : ஸ்ரீமான்கள் பூ. சண்முகத் தேவர்; மா. பாக்கியம் பாவநாசம் பிள்ளை, ஆ. சாமுவேல் ஞானையா, எம். குருபாதம், ஒய். டி. இப்ராஹிம்; எஸ். துரைசாமி நாடார்; பெ. அருணாசலம்; த. முத்துமாலைத் தேவர்; து. தியாகராஜன்; கே. எஸ். சேக்கடுமான்; வெ. வேலுச்சாமி; எம். வி. ராமசாமி நாடார்; வி. ஆறுமுகம்; கே. பி. ஈஸ்வர மூர்த்தி; வி. எம். பெரியசாமி நாடார்; சங்கரநாராயண முதலியார்; ப. மூக்கையா ஆச்சாரி; ஆர் வி. சங்கரநாராயணன்; அ. கணபதி சுப்ரமணியம்; ஆர். பலவேந்திரன், எஸ். தேவநேச முதலியார்; சி. சப்பாணிமுத்து முதலியார்; மு. தி. சுப்பையா முதலியார்; அ. திருமலை முதலியார்; த. திருவம்பல முதலியார்; கா. பழனி முதலியார்; கு. சண்முகசுந்தர முதலியார்; மா. சங்கரபாண்டிய முதலியார்; பி. தெல்லையப்ப முதலியார்; த. கா. காசி முத்து முதலியார்; தெட்சிணாமூர்த்தி முதலியார், மா. சுடலையாண்டி முதலியார்; ஆ. ராமையா முதலியார்; கே. கே. திருமலையாண்டி; சி. வரதராஜன்; கே. எஸ். விஸ்வநாதன்; எஸ். சுப்பையாத் தேவர்; எஸ். சுப்ரமணியம்; கே. ஏ. சங்கரநாராயணன்; அந்தோணி மூப்பனார்; ஆர். அப்பாத்துரை; எஸ். பிச்சையா; வி. பி. முத்துமாலை நாடார்; எம். பலவேசமுத்து நாடார்; ரா. தப்பா நாயக்கர்; க. சிதம்பரத் தேவர்; பி. மொட்டையன்; அ. கிருஷ்ணசாமி நாயுடு; ஜீ. வேலப்பா; பி. திருவேங்கடப்ப நாயக்கர்; ஜீ. எஸ். பாண்டியன்; கே. எம். முகைதீன் பிச்சை; ஆர். சேர்மன்; டி. அய்யப்ப நாயக்கர்; ஏ. சண்முக ரெட்டியார்; வி. மாரீசன் நாயக்கர்; எஸ். கே. அழகிரிசாமி; ஈஸ்வரமூர்த்தி செட்டியார்; டி. சி. சரவணப் பெருமாள் நாடார்; பி. குருசாமிக் கவுண்டர்; பெருமாள்சாமி நாயக்கர்; செ. சி. பொன்னம்பல நாடார்; டி. அனந்தப்ப நாயக்கர்; பொத்தி ரெட்டியார்; பெருமாள் ரெட்டியார்; சின்னசங்கரப்ப நாயக்கர்; டி. ராமசுவாமி; சுந்தரம்; எஸ். ஏ. செட்டியார்; கி. கணபதியப்பன்; அன்னம்மாள்; சி. எம். சுப்பையா ரெட்டியார்; சுடலையாடும் பெருமாள் பிள்ளை; ஏ. எஸ். ரங்கசாமி; கிருஷ்ணா ஜுவல்லரி மார்ட்; நா. தருமலிங்கம் வேளார்; என். ராமச்சந்திரன்; ரா. ம. பிச்சையா ஆச்சாரியார்; ச. மே. சுந்தரம் செட்டியார்; பெ. தி. கூரத்தாழ்வார் கோன்; ச. சுப்பையா; ரா. ம. லக்ஷ்மண ஆச்சாரி; து. ராஜையா; துரைசாமி நாடார்; ஆர். எஸ். பால்பாண்டி நாடார்.

சென்னை மில்துணி ஜவுளி வியாபாரிகள் சங்கம் மூலமாக ரூ. 335—0—0க்கு விவரம்:—

| | | | |
|---|---|---|---|
| மெஸ்ஸர்ஸ் இ. வி. சுந்தர ரெட்டி | 25 | 0 | 0 |
| மெஸ்ஸர்ஸ் எம். மோகன்லால் அண்டு கம்பெனி | 25 | 0 | 0 |
| மெஸ்ஸர்ஸ் நரன்தாஸ் அண்டு பிரதர்ஸ் | 25 | 0 | 0 |
| மெஸ்ஸர்ஸ் வி. என். வி. தேவராஜுலு செட்டி அண்டு கம்பெனி | 25 | 0 | 0 |
| மெஸ்ஸர்ஸ் அஜீத்பாய் ஜயந்திலால் அண்டு கம்பெனி | 25 | 0 | 0 |
| மெஸ்ஸர்ஸ் சி. வி. ஏ. சுப்பராயலுச் செட்டி அண்டு கம்பெனி | 25 | 0 | 0 |
| மெஸ்ஸர்ஸ் எம். என். கோபால் அண்டு கம்பெனி | 25 | 0 | 0 |
| மெஸ்ஸர்ஸ் எஸ். மீரா சாகிப் அண்டு பிரதர்ஸ் | 15 | 0 | 0 |
| மெஸ்ஸர்ஸ் ஜயசிங்பாய் பாலாபாய் அண்டு சன்ஸ் | 15 | 0 | 0 |

ரூ. 10—0—0 : மெஸ்ஸர்ஸ் டி. கோபாலசாமி செட்டி அண்டு கம்பெனி; கே. ஹஸாராம் அண்டு கம்பெனி; வால்ஜி கான்ஜி அண்டு கம்பெனி; ஜே. ரங்கய்யச் செட்டி அண்டு கம்பெனி; டி. கே. தேவராஜ் அண்டு கம்பெனி; எம். வெங்கடய்யாச் செட்டி அண்டு கம்பெனி; ரஸிக்லால் ரமண்லால் அண்டு பிரதர்ஸ்; மேத்தா பிரதர்ஸ்; கே.ஆர். பி.ஆர். அழ. ரங்கநாதம் செட்டியார்; ஸ்ரீ பாலசுப்பிரமணியம் அண்டு கம்பெனி; சாராபாய் அண்டு கம்பெனி; பி. எல். என். சீதாராமய்யா.

ரூ. 5—0—0 : மெஸ்ஸர்ஸ் ஹாஜி சையத் ஹுஸேன் சாகிப் அண்டு கம்பெனி; ஜே.எம். பஞ்சாலி.

மதுரை நகரசபைத் தலைவர் ஸ்ரீ டி. கே. ராமா மூலமாக ரூ. 1,156—0—0க்கு விவரம்:

மெஸ்ஸர்ஸ் டி. வி. சுந்தரம் ஐயங்கார் அண்டு சன்ஸ் லிமிடெட், மதுரை 500 0 0

மெஸ்ஸர்ஸ் கே. எம். லக்ஷ்மண ஐயர் அண்டு சன்ஸ் லிமிடெட், மதுரை 200 0 0

ஜனாப் நயாப் முகம்மது நாஜி மூஸா, மதுரை 100 0 0

மெஸ்ஸர்ஸ் எம். பி. வெங்கடாசலபதி ஐயர் & சன்ஸ், மதுரை 100 0 0

ஜனாப் எச்.எம். சுல்தான் ஸையத், மதுரை 50 0 0

ஸ்ரீ டி. கே. வி. எஸ். நரசிம்ம ஐயர், மதுரை 50 0 0

ஸ்ரீ பி. என். எஸ். கே. சீதாராமய்யர், மதுரை 50 0 0

ஸ்ரீ டி. வி. எஸ். அண்டு சன்ஸ் லிமிடெட். ஆபீஸ் சிப்பந்திகள் 47 0 0

ரூ. 2—0—0: ஸ்ரீமதிகள் அமிர்தராம சுப்பிரமணியம்; கிருஷ்ணா; கல்யாணம்; ராமமூர்த்தி; ராமச்சந்திர ஐயர்; சுசீலாதம்பி; சௌந்தரம் பஞ்சநாதம்; கே. சீனிவாச ஐயங்கார்; தேசிகாச்சாரி; சாரதா கிருஷ்ணமூர்த்தி; ராகவாச்சாரி; பி. சி. எம். கணபதி; பி. எஸ். ஏ. கே. துளசி அம்மாள்; கே. வி. ஆர். கோபாலாச்சாரி; கே. எம். எஸ். என். ஹரி லக்ஷ்மி அம்மாள்; ஆர். பங்கஜம்; கே. செல்லம்மாள்; ஸ்ரீமான்கள்: சி. வி. ராமய்யர்; கே. எஸ். ராமாச்சாரி; வி. எஸ். சுவாமிநாத ஐயர்; வி. எஸ். நடராஜன்: காலேஜ் ஹவுஸ், மதுரை.

ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் எம். எஸ். அம்முன்னி மேனன்; டி. எஸ். சுந்தரராஜன்; வி. ராமமூர்த்தி; எம். ஆர். ராமநாதன்; என். நாகராஜன்; வி. சேதுராமலிங்கம்; எம். நடராஜன்; ஜாக்கி; என். சுந்தரராஜ ஐயங்கார்; என். ராமசாமி ஐயங்கார்; கே. எஸ். சங்கர நாராயணப் பிள்ளை; என். அழகிரி ராவ்; டி. ஆர். மாணிக்கக் கோனார்; என். சூரிய நாராயணன்; வி. எஸ். சூரியநாராயணன்.

ரங்கூன், இந்தியன் எம்பானி ஸ்ரீ எஸ். கிருஷ்ணமூர்த்தி மூலமாக ரூ. 52—0—0க்கு விவரம்:—

ரூ. 3—8—0: ஸ்ரீ எஸ். கிருஷ்ணமூர்த்தி. ரூ. 3—0—0: ஸ்ரீமான்கள் ஜி. ஜே. ராமய்யா; டி. சுப்பிரமணியம்.

2—0—0: ஸ்ரீமான்கள் எல. கணேஷ்வர் ராவ்; எச். எல். டட்டா; பி. கே. தாஸ்குப்தா; ஜி. நாராயணன்; கே. ராகவன்; வி. எஸ். விநாயகம்; சு. சி. சங்கர்; பி. கே. நாயர்.

ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் ஜே. அந்தோணி; பி. பி. சென்; எஸ். ஜகநாதன்; எச். வி. சௌத்ரி; ஆர். ஜோஸப்; கே. கே. சௌத்ரி; ஆர். ஆர். டே; பி. எஸ். சேகரன்; என். ஷண்முகம்; டி. என். ராமகிருஷ்ணன்; சு. எல். நாயர்; எஸ். ராமகிருஷ்ணன்; எம். வி. கிருஷ்ண ராவ்; டி. ராஜபாண்டியன்; டி. எம். வில்வரஸ்; ஏ. ஜி. நாயர்; ஜி. கிருஷ்ணன்; எம். சச்சிதானந்தம்; ஜி. உரலாடி; விரையா; எஸ். வி. சாமி; பி. எம். தேவர்; சி. வேலுசாமி; வி. சி. சேகர்; என். பி. பிள்ளை; எஸ். கணேசன்; 0—8—0: ஸ்ரீ ஆர். ஏ. நாராயணன்.

பூந்தமல்லி ஸ்ரீ எம். சேஷாச்சாரியார் மூலமாக ரூ. 30—0—0க்கு விவரம்:—

ரூ. 5—0—0: ஸ்ரீமான்கள் எஸ். வீரராகவாச்சாரியார், மதுரை, செய்யாறு தாலுக்கா; கே. ஆர். பார்த்தசாரதி அய்யங்கார், ஆவடி; எஸ். விஜயராகவாச்சாரியார், பாராரூர்; கே. வெங்கட வரதாச்சாரியார், முக்கூர்; வி. சதாசிவ முதலியார், வலாஜாபாத்; சி. வி. கன்னமுத்துச் செட்டி, ரெட் ஹில்ஸ்.

தஞ்சாவூர் ஜில்லா போர்டு தலைவர் மூலமாக ரூ. 750—0—0க்கு விவரம்:—

ஸ்ரீ என். குப்புசாமிப் பிள்ளை, தஞ்சாவூர் 100 0 0

ஸ்ரீ எஸ். முத்துசாமிப் பிள்ளை, மாரியம்மன் கோயில் 100 0 0

ஸ்ரீ எஸ். எம். பழனிசாமி உடையார், பின்னையார் நத்தம் 100 0 0

ஸ்ரீ ஆர். எம். சோமசுந்தரம் செட்டியார், பட்டுக்கோட்டை 50 0 0

ஸ்ரீ எஸ். முத்துக்கருப்பப் பிள்ளை, அறந்தாங்கி 50 0 0

ஸ்ரீ என். ஆர். மதனகோபால் நாயுடு, மன்னார்குடி 25 0 0

ஸ்ரீ என். துரைசாமிப் பிள்ளை, காரைக்கால் 25 0 0

ஸ்ரீ எஸ். சந்நியாச பிள்ளை, அலியநல்லி 25 0 0

ஸ்ரீ டி.எம். வீரராகவன், தஞ்சை 25 0 0

ஸ்ரீ எம். வீரப்ப முதலியார், கும்பகோணம் 20 0 0

ஸ்ரீ கே. சுப்பையா, பட்டுக்கோட்டை 20 0 0

ரூ. 10—0—0: ஸ்ரீமான்கள் வி. சேஷாத்திரி, தஞ்சாவூர்; ஜி. சுந்தரராஜுலு நாயுடு, தஞ்சாவூர்; ஜி. முத்தையா, தஞ்சாவூர்; ஜே. நடராஜன், பாபநாசம்; டி. ராஜாமணி, திருக்காட்டுப்பள்ளி; ஜி. கே. சுந்தரம், கும்பகோணம்; எஸ். குருசாமி, திருவிடமருதூர்; பி. சின்னப்ப முதலியார், மன்னார்குடி; என். கண்ணபிரான் செட்டியார், நீடாமங்கலம்; கே. ஏ. சங்கரநாராயணன், பட்டுக்கோட்டை; டி. ஜி. அருணாசலம் பிள்ளை, மன்னார்குடி; என். கணேசன், பேராணி; டி. எஸ். ராமச்சந்திரன், அறந்தாங்கி; என். சின்னப்பா, திருவடிக்குடி; ரத்தினவேலு கொட்டண்டார், அமர்வதி; சி. சோமசுந்தரம், பட்டுக்கோட்டை; கே. ஏ. சுப்பிரமணியத் தேவர், மன்னார்குடி; எம். ரத்தினசாமி மழவராயர், முத்துக்குளம்.

ரூ. 5—0—0: ஸ்ரீமான்கள் ஆர். பஞ்சாபகேச ஐயர், சோழபுரம்; ஜி. ராமசாமிப் பிள்ளை, தஞ்சாவூர்: நடராஜ சேதுராயர், திருவடிக்குடி; பழனிவேலு நாட்டார், தஞ்சாவூர், எஸ். குருசாமி, திருவடிக்குடி; வி. சபாபதிப் பிள்ளை, மன்னார்குடி.

ராமநாதபுரம் ஜில்லா போர்டு தலைவர் ஸ்ரீ உதயப்பா, அவர்கள் மூலமாக ரூபாய் 250—0—0க்கு விவரம்:—

திருப்பத்தூர் என். எம். போர்டு ஹைஸ்கூல் சிப்பந்திகள் 15 0 0

ஸ்ரீ ஏ. சோமசுந்தரம், ஹெட்மாஸ்டர், போர்டு மிடில் ஸ்கூல், செட்டியாபட்டி 12 0 0

டாக்டர் டி. என். சுப்பா ராவ், செட்டியாபட்டி 12 0 0

ரூ. 10—0—0: ஸ்ரீமான்கள் ஏ. சுந்தரலிங்கத் தேவர், மதுரை; ஏ. சீதாராம நாயுடு, மதுரை; ஏ. நாகசாமி ஐயர், திருப்பத்தூர்.

ரூ. 6—0—0: ஸ்ரீமான்கள் வெங்கடசுப்பு, செட்டியாபட்டி; கே. எல். வெங்கடாசல ஐயர், பிரான்மலை; கே. சங்கரநாராயணன், பரமக்குடி; பி. டி. சிதம்பரம், பரமக்குடி.

ரூ. 5—0—0: டி. ஸ்ரீமான்கள் கிருஷ்ணசாமி ஐயங்கார், மதுரை; ஆர். என். போஜராஜன், மதுரை; என். எஸ். தையல்பாகம், மதுரை; எஸ். விசுவநாத ஐயர், திருபுவனம். ரூ. 4—0—0: ஸ்ரீமான்கள் ஏ. சண்முகசுந்தர செட்டியார், பரமக்குடி; எஸ். ஏ. என். முகம்

மது ராவுத்தர், பரமக்குடி; ராமநாதன் அம்பலம், பரமக்குடி; கே. எம். வேலுச்சாமி செட்டியார், சங்கரலிங்கபுரம்; எஸ். நாராயண நாடார், சேவல்பட்டி. ரூ. 3—0—0: ஸ்ரீ எஸ். சவரிமுத்து, ராமநாதபுரம்.

ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் டாக்டர் டி. செல்லையா, பரமக்குடி; டி. கந்தசாமிப் பிள்ளை மதுரை; ஜனாப் நாகூர்கனி, பரமக்குடி; ஏ. வி. அங்குச்சாமி சேர்வை; எஸ். ராமன் நாயர், பரமக்குடி; ஏ. கே. சித்திரவேலு, பரமக்குடி; சாமிநாதத் தேவர், பரமக்குடி; கே. எஸ். எம். அப்துல் மஜீத், பரமக்குடி; என். வீரபத்திரன் சேர்வை, பரமக்குடி; ஜி. தேவராஜ நாயுடு, மதுரை; எஸ். அழகர்சாமி நாயுடு, ராமநாதபுரம்; எஸ். சித்தங்க சுப்பிரமணிய அய்யர், மதுரை; வி. சுப்பிரமணிய அய்யர், மதுரை; எஸ். செல்லையா செட்டியார், கரியப்பட்டி; கே. வயிரவன் செட்டியார், கரியப்பட்டி; கே. வி. சௌந்திர பாண்டிய நாடார், கரியப்பட்டி; கந்தன் ஆசாரி, கரியப்பட்டி; ஸ்ரீமதி லக்ஷ்மி அம்மாள், கரியப்பட்டி; நமசிவாயம் பிள்ளை அண்டு பார்ட்டி, செட்டிக்குறிச்சி; நமசிவாயம் ரெட்டியார், ராமநாயக்கன்பட்டி; நாகலிங்கம் அண்டு பார்ட்டி, அத்திப்பட்டி; எஸ். ராமகிருஷ்ண நாயுடு, மதுரை; எஸ். சுந்தரம் செட்டியார், சங்கரலிங்கபுரம்; வி. சோமசுந்தரம் செட்டியார், சங்கரலிங்கபுரம்; மீனாட்சிசுந்தரம் பிள்ளை, சேவல்பட்டி; சங்கரக்குமாரு நாடார்; டி. வெள்ளைக் கோனார்; தேவதாஸ், சேவல்பட்டி; வி. கே. சங்கரலிங்க நாடார், சேவல்பட்டி; ச. தேவதாஸ், சேவல்பட்டி, காளியப்பத் தேவர், சேவல்பட்டி; சேவல் மணியக்காரர், வேம்பகோட்டை; ஆர். சீனிவாச நாயுடு, சங்கரலிங்கபுரம்; என். பாப்பு ரெட்டியார், முண்டலபுரம்; கைத்தறி நெசவாளர் கோவாபரேடிவ் புரொடக்ஷன் அண்டு ஸேல்ஸ் சொஸைட்டி லிமிடெட், சங்கரலிங்கபுரம்; எஸ். வி. வி. ராஜாமணி நாயுடு, முத்தாலபுரம்; எஸ். வி. வி. ராமசாமி செட்டியார், சங்கரலிங்கபுரம்; ஏ. எஸ். எஸ். சந்தையா செட்டியார், சங்கரலிங்கபுரம்.

ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் கே. வி. பட்டாபிராம அய்யர், மதுரை; சி. ராமசாமி அய்யங்கார், மதுரை; பெரியசாமி, மதுரை; எஸ். வேலுசாமி, மதுரை; வி. சீனிவாசன், மதுரை பி. ராமசாமி, மதுரை; ஏ. ஜெகந்நாத ராவ், மதுரை; பி. திருச்சிற்றம்பலம் ரெட்டியார், மதுரை; ஜனாப் ஜெ. முகம்மது அப்துல் மஜீத், மதுரை; வி. வீராசாமி, மதுரை; முத்துதுரைசாமி, மதுரை; ஜெ. சாமுவேல் ஆல்பர்ட், மதுரை; டி. முத்துப் பிள்ளை, மதுரை; எம். என். ராமசாமி, மதுரை; என். வைத்தியநாதன், மதுரை; என். வெங்கடேசுவரன், மதுரை; எஸ். நீலமேகம் பிள்ளை, மதுரை; ஜனாப் எம். சையது அப்பாஸ், மதுரை; எஸ். சிமன், மதுரை; எம். சண்முகவேலுப் பிள்ளை, மதுரை; பி. ராஜாராம் ராவ், மதுரை; டி. ஆறுமுகம், மதுரை; கே. எஸ். ராஜாராம், மதுரை; எஸ். மீனாட்சிசுந்தரம், மதுரை; வி. சுந்தரராமன், மதுரை; ஜனாப் எஸ். அப்துல் காதர், மதுரை; எஸ். பெருமாள், மதுரை; எஸ். காளியப்பன், மதுரை; எஸ். கிருஷ்ண ராவ், திருபுவனம்; ஸ்ரீமதி ஆர். மீனாட்சி, திருபுவனம்; வி. குழந்தைவேலு, திருபுவனம்; ஸ்ரீமதி அங்கையற்கண்ணி, திருபுவனம்; காமாட்சி, திருபுவனம்; என். டி. ராமகிருஷ்ண அய்யங்கார், மதுரை; பி. சுந்தரராஜ அய்யங்கார், மதுரை; ஐ. ஜி. எபனேசர், மதுரை; டி. எம். சோமசுந்தரம் பிள்ளை, மதுரை; வி. நாராயண அய்யங்கார், அருப்புக்கோட்டை.

நமது இலங்கைக் கடிதம்

# குடி உரிமை கோரும் குதர்க்கவாதிகள்

ரஜனி

கொழும்பு, ஜூலை—18

சென்ற வாரம் கொழும்பு முனிசிபல் சபையில் இரண்டு முக்கியமான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. ஒன்று இலங்கை முழுவதும் பூரண மதுவிலக்கை அமுல் நடத்த உடனே சட்டமியற்றுமாறு மத்திய அரசாங்கத்தைக் கோருவது; மற்றொன்று, துர்வியாதியுள்ளவர்கள் முற்றிலும் குணமடைந்து விட்டதாக டாக்டர் சர்டிபிகேட் பெற்றாலன்றி, கல்யாணம் செய்துகொள்வதைச் சட்ட பூர்வமாகத் தடை செய்வது. இவ்விரண்டு தீர்மானங்களுக்கும் கடுமையான எதிர்ப்பு இருந்தது. ஏழை பங்காளர் என்று சொல்லிக் கொள்ளும் இடதுசாரி அங்கத்தினர்களே தீர்மானங்களை எதிர்த்தார்கள். பகல் முழுவதும் உடல் சோர உழைக்கும் தொழிலாளி மாலையில் ஒரு மொந்தை கள் குடிப்பதில் மண்ணைப் போட்டுவிடக் கூடாதென்றும், தொழிலாளரின் குடிக்கும் உரிமையைப் பறிமுதல் செய்யாமல் அயல் தேசத்துச் சாராய இறக்குமதியை மட்டும் தடை செய்ய வேண்டுமென்றும் டாக்டர் என். எம். பெரைரா ஒரு திருத்தம் கொண்டு வந்தார். ஏழைகளுக்குக் குடிக்கும் உரிமை இருக்க வேண்டும் என்பதற்காகத் திருத்தத்தைத் தாமும் ஆதரிப்பதாக மேயர் டாக்டர் குமாரன் ரத்னம் சொன்னார். இதே போல ஏழை மக்களின் கல்யாண உரிமையில் தலையிடக் கூடாதென்று சொல்லி இரண்டாவது தீர்மானத்தையும் அநேக அங்கத்தினர்கள் கடுமையாக எதிர்த்தார்கள். ஆயினும் சொற்ப வோட்டு மெஜாரிட்டியுடன் இரண்டு தீர்மானங்களும் நிறைவேறி விட்டன. இத் தீர்மானங்கள் மீது அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் போகிறதோ!

## இந்தியாவின் நன்கொடை

இந்திய அரசாங்கத்தின் ஆதரவில் திரட்டப்படும் மகாத்மா காந்தி தேசிய ஞாபகார்த்த நிதியிலிருந்து யாழ்ப்பாணநகரில் ஹரிஜன க்ஷேமாபிவிருத்திச் சங்கத்துக்கு ஒரு ஸ்திரமான நிதியை ஏற்படுத்த மூவாயிரம் ரூபாய் நன்கொடையளிக்கப்பட்டிருக்கிறது. இதை யாழ்ப்பாண மேயர் ஸ்ரீ வி. பொன்னம்பலம் ஒரு பொதுக்கூட்டத்தில் வெளியிட்டு, இலங்கை ஹரிஜன முன்னேற்றத்துக்காக இந்திய அரசாங்கம் உதவி புரிகையில் இலங்கை அரசாங்கம் பாராமுகமாயிருப்பது வருந்தத்தக்கதென்றும், க்ஷேமாபிவிருத்திச் சங்கம் போன்ற கிராமிய ஸ்தாபனங்களைக் கைதூக்கி விடுவதினால் மட்டுமே கிராமங்கள் முன்னேறி நாட்டின் பொருளாதாரத்தை ஸ்திரப்படுத்த முடியுமென்றும் கூறினார்.

## தமிழரின் தர்மம்

இலங்கை சர்வ கலாசாலையிலுள்ள ஸ்காலர் 'ஷிப்'புகளைக் கவனித்துப் பார்த்தால் அவற்றில் பெரும்பாலானவை இந்தியர்களாலும் இந்துக்களாலுமே கொடுக்கப்பட்டவை என்று தெரியுமென்றும், இந்த அரும் பெரும் உதாரணத்தை மற்ற வகுப்பினரும் பின்பற்ற வேண்டுமென்றும் சர்வகலாசாலை உப அத்யட்சகர் ஸர் ஐவர் ஜென்னிங்ஸ் சமீபத்தில்தான் சொன்னார். அவருடைய வார்த்தைகள் எவ்வளவு தூரம் உண்மையானவை என்பதை ருசுப்படுத்த சென்ற வாரம் இன்னொரு சம்பவம் நடந்தது. பிரபல தமிழ்க் கொடையாளியாகிய ஸ்ரீ பி. வி. கதிர்வேலு பெரும் பணச் செலவில் ஒரு பௌத்தக் கல்லூரிக்கு விஞ்ஞானப் பகுதியொன்றைக் கட்டி நன்கொடையாக வழங்கியிருக்கிறார். அதை விவசாய மந்திரியும் பிரதம மந்திரியின் புதல்வருமான ஸ்ரீ டட்லி சேனநாயகா திறந்து வைத்துப் பேசுகையில், ஸ்ரீ கதிர்வேலுவின் உதாரகுணத்தைப் பெரிதும் பாராட்டினார்.

## சமூக சௌஜன்யம்

பிரஜாவுரிமைச் சட்டத்தை இந்தியர்கள் இப்பொழுது ஏற்றுக்கொண்டு விட்டபடியினால் இனி இந்தியர்—சிங்களவர் துவேஷப் பிரசாரத்துக்கு இடம் கிடையாது. யாழ்ப்பாணத்தில் நடந்த கல்வி வாரத்தில் மேயர் ஸ்ரீ பொன்னம்பலம் வகுப்பு சௌஜன்யத்தைப் பற்றிக் குறிப்பிட்டுச் சிங்கள மாணவர்களுக்குத் தமிழையும் தமிழ் மாணவர்களுக்குச் சிங்களத்தையும் கட்டாயப் பாடமாக்க வேண்டுமென்று வற்புறுத்தினார். இந்த நடவடிக்கை நாட்டின் இரு முக்கிய மொழிகளுக்கு ஒரு புதிய மதிப்பைக் கொடுப்பதுடன் வகுப்பு ஒற்றுமை வளரவும் வெகு தூரம் உதவி புரிவதாயிருக்கும். தாய் பாஷைகளின் மூலம் கல்வி போதிப்பது வகுப்பு வேற்றுமைகளை வளர்க்குமென்று ஒரு சிலர் துஷ்ப்பிரசாரம் செய்து வருவதை ஸ்ரீ எஸ். எச். பேரின்பநாயகம் பலமாகக் கண்டித்து, ஆங்கில மொழியின் முக்கியத்துவம் என்று குறைகிறதோ அன்றுதான் வகுப்புவாதமும் மறையுமென்று எச்சரித்தது இங்கே குறிப்பிடத் தகுந்தது.

## முருகன் திருவருள்!

கதிர்காமக் கடவுளுக்கு ஒரு தனி மகிமையிருக்கத்தான் செய்கிறது. பிரதி வருடமும் அங்கு நடக்கும் ஆடிவேல் விழாவுக்கு அநேக ஆயிரம் முருகபக்தர்கள் தென்னிந்தியாவிலிருந்தும் இலங்கையின் பல பாகங்களிலிருந்தும் பக்திச் சிரத்தையுடன் வருவார்கள். சென்ற இரண்டாயிரம் ஆண்டுகளாக வேறு எப்பொழுதுமில்லாமல் இவ்வருடம் கதிர்காமத்தில் ஓடும் மாணிக்க கங்கை கொடிய வெப்பத்தினால் வறண்டுபோயிற்று. குடி தண்ணீருக்குக் கடும் பஞ்சம் ஏற்பட்டது. ஆகையால் கதிர்காமத்துக்குப் போகும் யாத்ரீகர்கள் கையிலேயே ஜலம் கொண்டு போக வேண்டுமென்றும் கொடிய வறட்சியினால் பல தொத்து நோய்கள் ஏற்படக்கூடுமாகையினால் அதிக ஜனங்கள் இவ்வருடம் யாத்திரை போகாமலிருப்பதுதான் நல்லதென்றும் இலங்கை அரசாங்கம் எச்சரிக்கை விடுத்திருந்தது.

ஆலய குருமார்களுக்கு மட்டும் முருகன் கைவிட மாட்டார் என்ற நம்பிக்கை இருந்தது. அவர்கள் வழக்கம்போல் சகல ஏற்பாடுகளையும் செய்திருந்தனர். விழா ஆரம்பமாவதற்குச் சில மணி நேரத்துக்கு முன்னால் மலைப் பிரதேசத்தில் மழை பொழிந்து மாணிக்க கங்கையில் சலசலவென்று ஜலம் ஓட ஆரம்பித்தது. "ஹரோஹரா! ஹரோஹரா" என்ற கோஷத்துடன் பக்த கோடிகள் அதிசயமும் ஆனந்தமும் ததும்பியவர்களாய்ப் புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து முருகப் பெருமானை வழிபட்டு மகிழ்ந்தனர்.




**ப**ழக் கடைக்காரன் ஒருவன் பஜாருக்குச் சென்று, சிறியதும் பெரியதுமாக நூறு மாம்பழங்களை வாங்கிக்கொண்டு வந்தான். சிறியவற்றை யெல்லாம் அவன் கூடைக்கு அடியில் போட்டான்; பெரியவற்றை அவற்றுக்கு மேலே அழகாக அடுக்கி வைத்தான்.

அவன் இவ்வாறு செய்தது சிறிய பழங்களுக்குப் பிடிக்காமற் போகவே, "அக்ரமம்!" என்று அவற்றில் ஒன்று சொல்லிற்று.

"அநியாயம்!" என்று இன்னொன்று சொல்லிற்று.

"அயோக்கியத்தனம்!" என்று மற்றொன்று சொல்லிற்று.

"என்ன இருந்தாலும் நாம் சிறிய பழங்கள்தானே? பெரிய பழங்கள் நமக்கு மேல் இருப்பதுதானே நியாயம்?" என்றது ஒரு சாதுப் பழம்.

"நமக்கு மேலே பெரிய பழங்களா! நாம் இல்லாவிட்டால் அவை எப்படி மேலே நிற்குமாம்? பார்த்து விடுவோம், ஒரு கை!" என்று ஒரு முரட்டுப் பழம் தன் முஷ்டியை உயர்த்திற்று.



"பேஷாய்ப் பார்க்கலாம்!" என்று அந்த முரட்டுப் பழம் சொன்னதை இன்னொரு முரட்டுப் பழம் ஆமோதித்தது.

"அதெல்லாம் சரி; எப்படிப் பார்ப்பதாம்?" என்றது ஓர் அசட்டுப் பழம்.

"அதோ, கூடைக்கு அடியில் ஒரு துவாரம் இருக்கிறது, பாருங்கள்! — அதன் வழியே நாம் ஒவ்வொருவராக வெளியே போய்விடலாம்: பெரிய பழங்கள் கீழே சரிந்து விழுந்து அவமானப்படட்டும்!" என்றது ஒரு சமர்த்துப் பழம்.

"சரியான யோசனை!" என்று துள்ளிக் குதித்தது ஒன்று.

"பேஷான யோசனை!" என்று அதன் முதுகில் ஒரு 'ஷொட்டு'க் கொடுத்தது இன்னொன்று.

அவ்வளவுதான்; "அப்படியே செய்வோம்!' என்று சிறிய பழங்களெல்லாம் கூடையை விட்டு ஒன்றன் பின் ஒன்றாக உருண்டு வெளியேறின. இதனால் சரிந்து விழுந்த பெரிய பழங்களைக் கண்டு அவை 'ஓ' வென்று கைகொட்டிச் சிரித்தன.

பெரிய பழங்கள் ஒன்றும் சொல்லவில்லை; அவை தலைக்கு ஒரு மௌனப் புன்னகை புரிந்து விட்டுப் பேசாமல் இருந்தன.

பழக் கடைக்காரன் சிறிய பழங்களெல்லாம் வெளியே வந்து விட்டதற்குக் காரணம் என்னவென்று கவனித்தான்; கூடைக்கு அடியில் ஒரு துவாரம் இருக்கும் விஷயம் அவனுக்குப் புலப்பட்டது. உடனே அதை அடைத்து, அவன் மீண்டும் சிறிய பழங்களைக் கூடைக்கு அடியில் போட்டான்; பெரிய பழங்களை அவற்றுக்கு மேலே அடுக்கினான்!



அவன் அடுக்கி முடிந்ததும் சிறிய பழங்களில் ஒன்று பெருமூச்சு விட்டுக் கொண்டே சொல்லிற்று:—

"நம்முடைய சூழ்ச்சி பலிக்கவில்லை. பெரிய பழங்களுக்குக் கிடைக்கும் கௌரவம் நமக்கும் கிடைக்க வேண்டுமானால், நாமும் அவற்றைப் போல் பருத்துத் தொலைக்க வேண்டும் போலிருக்கிறது!" — விந்தன்.




### கணக்கு சரி!

உபாத்தியாயர் (கணக்கு வகுப்பில் ஒரு சிறு பெண்ணுக்குக் கழித்தல் சொல்லிக் கொடுத்தார்):—இதோ பார், உனக்குப் பத்து விரல்கள் இருக்கின்றன. அதில் நான்கு விரல்கள் இல்லை என்று வைத்துக் கொள்வோம்...!

மாணவி:—நான்கு விரல்கள் இல்லையா! அப்படியானால் என்னுடைய ஹார்மோனியப் பாடம் நின்று போகுமே, ஸார்!

★

### பையனின் ஞாபகம்

போலீஸ் இன்ஸ்பெக்டர், ஒரு வீட்டில் களவு போன சாமான்களின் ஜாபிதாவை எழுதிக்கொண்டு அந்த வீட்டுக்காரரிடம், "உம், இன்னும் எதையாவது காணோம் என்றால் இப்போதே சொல்லி விடுங்கள். அப்புறம் நினைத்து நினைத்து ஒவ்வொன்றாகச் சொல்லிக் கொண்டு வந்து தொந்தரவு பண்ணுநீர்கள்!" என்றார்.

வீட்டுக்காரப் பையன்:— அப்பா, அப்பா! இப்போதுதான் ஞாபகம் வருகிறது! இதையெல்லாம் திருடிக் கொண்டு போன திருடனையும் காணோம்!

★

### உத்தரவு!

சுகாதார அதிகாரி (சர்க்கரை வள்ளிக் கிழங்கு விற்கும் கிழவியைப் பார்த்து):—ஏய், கிழவி! ஊரெல்லாம் ஒரேயடியாக வியாதி பரவிக் கிடக்கிறது! நீ இப்படி ஈ மொய்க்க மொய்க்க இந்தக் கிழங்கை விற்றுக் கொண்டிருக்கிறாயே! எடு, எடு, உம்!

கிழவி:— நாளையிலிருந்து வரவில்லைங்க; மன்னிக்கணுங்க!

சுகாதார அதிகாரி:—நாளைக்கு இங்கே உன்னைப் பார்த்தேனானால்...ஆமாம்... அப்புறம் விடவே மாட்டேன். சரி; கிழங்கு கொடு, ஒரு அணாவுக்கு!

### பெரிய மனிதர்!

முதல் மாணவன்:—எனக்குப் பெரிய பெரிய மனிதர்கள் சிபார்சு பண்ணியும் காலேஜிலே இடம் கிடைக்கவில்லை. ஆனால் உனக்கு எப்படி இடம் கிடைத்தது? யாராவது ரொம்பப் பெரிய மனிதர் சிபார்சு கிடைத்ததோ?

இரண்டாவது மாணவன்:—ஊஹூம்; எனக்குப் பிரின்ஸ்பாலின் பியூனைத் தெரியும்!

★

### சில்லறை விஷயம்

ஒரு மளிகைக் கடையின் எதிரில் ஒரே கூட்டமாயிருந்தது. ஓர் ஆசாமி அங்கே நின்று கொண்டு கடைக்காரரை நச்சரித்துக் கொண்டிருந்தார்.

கடைக்காரன்:—ஐயா, சும்மா நச்சரிக்காதீர்கள். என்ன வேண்டும்? ஏதாவது சில்லறை விஷயமாயிருந்தால் சொல்லுங்கள்!

அவர்:—சில்லறை விஷயம்தான்; பத்து ரூபாய் நோட்டுக்குச் சில்லறை வேண்டும்!

---

## ரொம்பத் தெரிந்தவர்!



வேலைக்காரன்:—யாரோ உங்களைப் 'போனி'ல் கூப்பிடுகிறார்கள்.......

எஜமானர்:—நான் வீட்டில் இல்லை, வெளியே போய்விட்டேன் என்று பதில் சொல்லிவிடு!

வேலைக்காரன்:—அப்படித்தான் சொன்னேன்; அவர் அதை நம்ப மாட்டேன் என்கிறார்!

எஜமானர்:- அப்படியானால் என்னைப் பற்றி அவர் ரொம்பத் தெரிந்தவராக இருக்க வேண்டும்......இதோ, வந்து விட்டேன் என்று சொல்லு!

# போதாத காலம்

### துரோணன்

அந்தக் கும்பிருட்டில் மல்லியம் ரயில்வே ஸ்டேஷனை நோக்கிச் சந்தனத் தேவனும் காளித் தேவனும் ஓடி வந்து கொண்டிருந்தனர். பிசாசு போன்ற அந்தப் பதினொரு மணி வண்டி அவர்களது தொழிலுக்கு அனுசரணையாகக் கிடைத்தது எவ்வளவு பெரிய அதிர்ஷ்டம்!

வெகுதூரத்தில் அந்த வண்டி ஓலமிடும் சத்தம் கேட்கவே, அவர்கள் சிட்டாய்ப் பறந்து கொண்டு வந்தனர். கீழும் மேலுமாக வந்து கொண்டிருந்த அவர்களது சுவாசம் என்ஜினுடன் போட்டி யிட்டுக் கொண்டிருந்தது.

சந்தனம் சாவதானமாக ஒரு சுருட்டைப் பற்ற வைத்துக் கொண்டு பிளாட்பாரத்துக்கு அருகில் சென்றான். காளி அவனைத் தொடர்ந்து சென்றான்.

சமீபத்தில் இருவர் பேசிக்கொண்டு செல்வதைச் சந்தனம் உன்னிப்புடன் கவனித்தான். அடுத்த கணம் தன் சகாவை நோக்கி, "ஏய் காளி, இந்தப் புள்ளிகளைக் கொஞ்சம் கவனி!" என்றான் இரகசியமாக.

அந்த இருவரில் ஒருவர் சிறிய மூட்டை போன்ற ஒன்றை வைத்திருந்தார். ஆனால் அதைத் தூக்குவதற்கு அவர் மிகவும் பிரயாசைப்பட்டார் என்பது புலப்பட்டது.

ஒருவர், "ஏய், ஜாக்கிரதை! நீ எங்கேயாவது ஏமாந்து விடுவாயென்பதற்காகத்தான் இது செய்கிறேன் — இதைக் கார்டிடம் ஒப்படைத்து விட்டுப் போகிறேன்; ஞாபகமாகக் கும்பகோணம் வந்ததும் போய் வாங்கிக் கொண்டு விடு!—தெரிந்ததா? இந்தப் பத்து சேர் வெள்ளிக்கும் நான் சொன்னபடியே ஆர்டர் கொடுத்து விடு; வேலை சுத்தமாக இருக்க வேண்டும்" என்றார்.

மற்றவரும் அதற்கு அநுசரணையான பதிலையே கூறிக் கொண்டிருந்தார்.

சந்தனம் அர்த்தம் நிறைந்த பார்வையுடன் காளியை நோக்கினான். அவனது நாக்கில் ஜலம் ஊறியது.

"என்ன அண்ணே, உனக்கு எப்படிப் புலப்படுது?" என்றான் காளி.

"எல்லாம் நமக்காகத்தாண்டா வந்து சேருது! இதிலே புலப்படறதுக்கு என்ன இருக்குது? ஒரு ரூபாயா, இரண்டு ரூபாயா? — பத்து சேர் வெள்ளியல்லேடா கிடைக்கப் போவுது — ஊம்!"

"அதெல்லாம் சரிதாண்ணே, அந்த எளவு கட்டியைக் கார்டு கிட்டே ஒப்படைச்சுப்புட்டுல்லே இந்த ஆளு நகரப் போறான்?"

இந்தச் செய்தி அரைகுறையாகப் புரிந்து கொண்டிருந்த சந்தனத் தேவனுக்குச் சற்றுப் புதியதாகத்தானிருந்தது. "என்ன, எப்படி யெப்படி?" என்றான் அவன் வியப்புடன்.

"ஆமாம், பின்னே நான் என்ன சொல்றேன்? இந்த இன்னொரு ஆளு வந்திருக்கிறானே, சட்டையும் உருமாலையுமா— அந்தச் சனியன் புடிச்சவன், இவனையும் வண்டியிலே ஏத்தி விட்டுப்புட்டு, அந்தக் கட்டியையும் கார்டுகிட்டே ஒப்படைச்சுட்டுல்லே திரும்பப் போறான்?"

யோசனையுடன் சந்தனம் முகவாய்க் கட்டையைத் தடவிக் கொண்டான். அவன் மூளை தீவிரமாக வேலை செய்து கொண்டிருந்தது. "அப்படின்னு அதைக் கார்டு கிட்டேயா ஒப்படைச்சுட்டுப் போகப் போறான்?" என்றான் மீண்டும் சந்தேகத்துடன். காளி அதையே ஊர்ஜிதம் செய்தான்.

இரண்டே நிமிஷச் சிந்தனையில் சந்தனத்தின் மூளை தீவிரமாக வேலை செய்து ஒரு முடிவுக்கு வந்தபோது அவன் முகம் மலர்ந்தது.

"எலே, எதற்கும் மூளை வேணுமடா!" என்று ஆரம்பித்தவன் கையிலிருந்த புகையை மீண்டும் ஒருதரம் உறிஞ்சி விட்டுக் கூறினான்.

"ஏய், எதுக்கும் நீ சொல்றபடி கார்டு கிட்டேதான் அதை ஒப்படைக்கிறானு என்கிறதைப் பார்த்துக்குவோம்; அப்புறம், நாலு பொட்டிக்கு அந்தாண்டை நான் ஏறிக்கிடறேன். நீ வந்து கார்டுக்குப் பக்கத்துப் பொட்டியிலே ஏறிக்கோ. நல்ல நடுப் பாதையிலே, நமக்குச் சௌகரியமான இடத்திலே சங்கிலியைப் புடிச்சு இழுத்துப்புடறேன். வண்டி நின்ன உடனேயே அந்தக் கார்டு இறங்கி விசாரணை செய்யறதுக்குக் கிளம்பி விடுவான். அதுதான் சமயம்னு நீ போய்ப் பக்குவமாகக் காரியத்தை முடிச்சுடு. நான் அதுக்குள்ளாரேயே வந்துடறேன்" என்றான்.

காளி அவனை ஆச்சரியத்துடன் நோக்கினான். "என்ன இருந்தாலும் உன் மூளையே அலாதிதான். அண்ணே!



—அதெல்லாம் சரி, ஒரு சந்தேகம். நீ ஏறியிருக்கிற பொட்டியிலே இருக்கிற வங்க 'ஏன சங்கிலியை இழுக்கிறே'ன்னு கேட்டா நீ என்ன சொல்லுவே?" என்றான் தொடர்ந்து.

"போடா, மடையா! கக்கூசுக்குள்ளாரே போய் இருந்துட்டு இந்தாண்டை வந்துக்கறேன்" என்று கூறிக்கொண்டிருக்கும்போதே, அந்தப் பிசாசு வண்டி அவன் சொல்லை ஆமோதிப்பது போல் 'கிரீச்'சிட்டுக் கொண்டு பிளாட்பாரத்துக்குள் நுழைந்தது.

சந்தனமும், காளியும் உன்னிப்புடன் 'அந்தப் புள்ளி'களை வட்டமிட்டனர். அவர்கள் அறிந்தபடியே, அந்தக் கூட வந்த உருமாலைக்காரர் கார்டிடம் இரகசியம் பேசி மூட்டையைக் கொடுத்துவிட்டு, அந்தக் கும்பகோணத்துக்காரரையும் அறிமுகப் படுத்திவிட்டுச் சென்றார். அவரது முகத்திலே நிம்மதி—இவர்கள் முகத்திலும் நிம்மதி!

• • •

அந்தப் பிசாசு வண்டி மல்லியம் ஸ்டேஷனை விட்டு நகர்ந்த சிறிது நேரத்திற்கெல்லாமே ஆவேசம் கொண்டது போல் மையிருட்டைப் பிளந்துகொண்டு சென்றது.

குற்றாலத்துக்குச் சமீபமாக மரங்களடர்ந்த சோலை. பதுங்குவதற்கு வசதியான இடங்களெல்லாம் தென்பட்டன. வண்டியும் 'கிரீச்'சிட்டுக் கொண்டே நின்றது. காளித்தேவன் பரபரப்புடன் இறங்கிப் பக்கத்து வண்டிக்குத் தாவினான். அடுத்தக் கணத்தில்—அந்த வெள்ளிப் பாளை அவனது கைகளில் சிக்கிக் கொண்டது. ஆனால்......?

பாவம், சந்தனத்தேவன் ஓடோடியும் வந்து அவனுடன் சேர்ந்து கொள்வதற்கும், அவர்கள் இருவரும் சேர்ந்தாற்போல் அகப்பட்டுக் கொள்ளுவதற்கும் எவ்வளவு பொருத்தமாக விருந்தது!

அடுத்த நிமிஷம் நாலைந்து பேர் சேர்ந்து இரண்டு திருடர்களையும் ஒரே அமுக்காக அமுக்கிப் போலீஸாரிடம் சேர்த்து விட்டார்கள்!

ஆகா! மனிதனின் எண்ணப்படியே எல்லாம் நடந்து விடுகிறதா? அப்பாவிக் காளித்தேவன். அவர்களது 'பிளான்' படி ரயில் நின்றவுடன் ஓடிப்போய்த் தான் வெள்ளிக் கட்டியை எடுத்துக் கொண்டான். சந்தனமும் உடனே வந்து தான் அவனுடன் சேர்ந்து கொண்டான். ஆனால் சந்தனம் சங்கிலியைப் பிடித்து இழுக்க வில்லை என்பதும். கார்டு தம் கையிலிருந்த விளக்கைத் தவறிக் கீழே போட்டுவிட்டுச் சங்கிலியைப் பிடித்து இழுத்தார் என்பதும் காளித்தேவனுக்கு எப்படித் தெரியும்?

எல்லாம் போதாத காலம்!

# கேதாரியின் காதலி

ரா. பா.

என் நண்பன் கேதாரியைக் காண நான் அவன் வீட்டுக்குச் சென்ற சமயம் அவனை அங்கு காணவில்லை. அறையின் கதவு திறந்திருந்தால் 'பக்கத்தில்தான் எங்கேயாவது சென்றிருக்க வேண்டும்; உடனே வந்துவிடுவான்' என்று தீர்மானித்து நாற்காலியை இழுத்து மேஜைக் கருகில் போட்டுக்கொண்டு அமர்ந்தேன்.

மேஜையின் மீதிருந்த ஒரு காகிதத்தின் மீது என் பார்வை விழுந்தது. "எனது ஆருயிரே!" என்று ஆரம்பிக்கப்பட்டிருந்ததைப் பார்த்ததும் எனக்கு ஒரே பிரமிப்பாக இருந்தது. இந்தப் பிரம்மச்சாரிப் பயலுக்குத் திடீரென்று முளைத்த காதலி யார் என்றறிய என் மனம் அவாக் கொண்டது. கடிதத்தை முழுவதும் படித்தாலோ?...சே! எவ்வளவு தான் நெருங்கிய நண்பனாயிருந்தபோதிலும் பிறர் கடிதத்தைப் படிக்க எனக்கு உரிமை ஏது? என் மனச் சாட்சியே என்னைக் குத்திக் காட்டியது.

"கேதாரி!" என்று குரல் கொடுத்தேன்.

"ஸ்நானம் செய்யப் போயிருக்கிறார்; இதோ வந்து விடுவார்!" என்று அடுத்த போர்ஷனில் குடியிருந்த ஒருவர் பதிலிறுத்தார். அவன் வருவதற்கு எப்படியும் பத்து நிமிஷங்களாவது பிடிக்கும் என்ற தைரியம் அக் கடிதத்தைப் படிக்கத் தூண்டியது; படித்தேன்.

"ஆறு மாதங்களுக்கு முன்பு தங்களை சேட் ஆனந்தராமின் கடையில் பார்த்த போதே என்னை எப்படியும் தாங்கள் ஆட்கொண்டு விடுவீர்கள் என்று உறுதி கொண்டேன். அதே போலவே நான் அன்றே தங்கள் வசமானேன். அன்று தொடங்கி இதுகாறும்—நேற்று வரை—தங்களுக்குச் சேவை புரிவதிலேயே கண்ணும் கருத்துமா யிருந்து வந்தேன். தங்கள் உடலில் வெய்யில் பட்டால் என் உடலே கருகிச் சாம்பலாகி விடும் போலிருக்கும். தங்கள் அழகிய திருமேனி மழையில் நனைந்தால் எனக்கு உள்ளம் பதறிவிடும். தங்களுடைய சரீர சௌக்கியத்துக்காக என் உடலை எவ்வளவோ வருத்திக் கொண்டேன். ஆனால், என்ன செய்து என்ன? தங்கள் அலட்சியம் தான் என் வாழ்வைக் குலைத்துவிட்டதே!"

என் கண்களையே என்னால் நம்ப முடியவில்லை. ஆறு மாதங்களாக என் இணைபிரியா நண்பன் கேதாரி எனக்கே தெரியாமல் கள்ளக் காதல் புரிந்து வருகிறான் என்பதை அறிந்ததும் எனக்கு வியப்பு மேலிடாமலிருக்குமா? அதிலும், வாயில் விரலைக் கொடுத்தால் கடிக்கத் தெரியாத இந்த அப்பாவி கேதாரியா காதல் விளையாட்டில் ஈடுபட்டிருக்கிறான்?—என் சிந்தனை ஓட்டத்துக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு மீண்டும் கடிதத்தின் மீது கவனத்தைச் செலுத்தினேன்.

"நேற்று மாலை நாம் இருவரும் கையோடு கை கோர்த்து சங்கீதக் கச்சேரிக்குச் சென்றபோது என் உள்ளம் எத்தனை உவகை பூத்தது? கச்சேரி முடிந்ததும் என்னைத் தேடி வருவீர்கள், வருவீர்கள் என்று எத்தனை நேரம் ஆவலோடு காத்திருந்தேன்? என் ஆசை இவ்வளவு சீக்கிரம் கருகிவிடும் என்று நான் கண்டேனா? ஆங்கனே இப்படித்தான்!...உம்......உங்களைச் சொல்லி என்ன பயன்? நானில்லாவிட்டால் உங்களுக்கு வேறொரு...ஐயோ! அதை எழுதக் கூடக் கை நடுங்குகிறதே!"



டேய்! சங்கீதத்தைப் பொறுத்த மட்டில் ஔரங்கசீப்பைப் போன்ற கேதாரியா சங்கீதக் கச்சேரிக்குச் சென்றான்? கேதாரியையே சங்கீதக் கச்சேரி கேட்கும் அளவுக்குக் கொண்டு வந்த அவன் காதலியின் மகா சக்தி தான் எத்தனை மகத்தானது! அவ்வளவு அழகியா, அவள்?...கேதாரி ஸ்நானம் செய்துவிட்டுத் திரும்புவதற்குள் படித்து முடிக்க வேண்டுமே என்று பாக்கியை அவசர அவசரமாகப் படிக்கத் தொடங்கினேன்.

"என்மேல் உங்களுக்கிருந்த மோகம் என் இப்படித் திடீரென்று மறைந்து விட்டது? 'பட்டுப்போன்ற உன் மேனியழகும் கடைந்தெடுத்த தந்தம் போன்ற உன் கையின் வழுவழுப்பும் எனக்கு எவ்வளவு ஆனந்தத்தை யளிக்கிறது!' என்றெல்லாம் முகஸ்துதி செய்து பெருமைப்பட்டீர்களே, முன்பெல்லாம்! அதை எண்ணிப் பார்த்தாவது தங்களிடம் மறைந்த பிரேமை மீண்டும் துளிர்க்குமோ என்ற நம்பிக்கையில் எங்கோ உயிர் வாழ்கிறேன்."

பின் பக்கம் அறையின் கதவு ஓசைப் படுவதைக் கேட்டு மெதுவாக அதை மேஜையின் மீது வைத்து விட்டுத் திரும்பினேன். கேதாரி உள்ளே நுழைந்தான்.

"எப்போடா வந்தே? ரொம்ப நாழிகையாகி விட்டதோ நீ வந்து?" என்று கேட்டவாறே பேனாவைக் கையிலெடுத்து அந்தக் கடிதத்தின் கீழ் இரண்டொரு வரிகளை எழுதி, "படித்துப் பார்! என் கற்பனை எப்படி?" என்றான்.

"கற்பனையா! செய்வதையும் செய்து விட்டுக் கற்பனைக் கோட்டைக்குள் ஒளிந்து கொள்ளப் பார்க்கிறாயா?" என்று கருவிக் கொண்டே அவன் கடைசியாக எழுதியவற்றைப் படித்தேன்:

"நேற்று மாலை சங்கீத சபாவில் கச்சேரி முடிந்ததும் ஞாபக மறதியாக என் குடையை வைத்து விட்டு வந்து விட்டேன். அந்தக் குடைக்கு மட்டும் மனிதர்களைப் போல் உணர்ச்சி இருக்குமேயானால் அது இப்படித்தானே என்னை நினைத்துப் பிரலாபித்திருக்க வேண்டும்?"

என் முட்டாள்தனத்தை நொந்து கொள்ளுவதைத் தவிர வேறு வழி? அவசரப்பட்டுப் பிறர் விஷயத்தில் தலையிட்டு ஏதோ தாருண முடிவுக்கு வந்து விட்டேனே!

மூன்றாம் பாடப் புத்தகத்தில் படித்த ஒரு விஷயம் என் கவனத்துக்கு வந்தது. ஒருவன் கடிதம் எழுதிக் கொண்டிருக்கும் போது, அவனுக்குத் தெரியாமல் பின்னாலிருந்து கொண்டு தன் நண்பன் அதைப் படிப்பதைத் தெரிந்து கொண்டுவிட்டான் அவன். "ஒரு முட்டாள் இதைப் படித்துக் கொண்டிருப்பதால் இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன்" என்று அவன் கடிதத்தை முடித்ததும் அதை வாசித்துக் கொண்டிருந்தவன் நிலைமையை ஒத்திருந்தது என் நிலைமை என்பதைக் கூறவும் வேண்டுமா?



# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 302. தம்பிக்கு நீயே புகல்!

யுத்த களத்தில் லக்ஷ்மணனும் கும்பகர்ணனும் சந்தித்து நின்றதைப் பார்த்தோம்.

கும்பகர்ணன் ஏதோ வீர வார்த்தைகள் பேசி, வீர சல்லாபம் செய்யலாம் என்று சொன்னான். அதற்கு லக்ஷ்மணன், "வார்த்தைகள் பேசுகிற பள்ளிக்கூடத்தில் நாங்கள் படிக்கவில்லை, அப்பா! நாங்கள் பேசுவதெல்லாம் வில்லைக் கொண்டுதான்! அம்பைக் கொண்டு தான்!" என்று கும்பகர்ணனது உள்ளம் பஸ்மீகரம் ஆகும்படி சொன்ன ஏளன வார்த்தையைக் கேட்டோம்.

* * *

யுத்தம் ஆரம்பித்து விட்டது.

லக்ஷ்மணனது வில்லில் இருந்து அம்புகள் சரமாரியாய்ப் பாய்ந்து வந்தன. அவைகளைக் கும்பகர்ணன் கடுத்து முறித்தான்.

கும்பகர்ணனது அம்புகளை லக்ஷ்மணனது அம்புகள் தவிடு பொடியாக்கின.

இந்த விதமாக வெகு நேரம் விற்போர் நடந்தது. இருவரும் களைத்துப் போனார்கள்.

* * *

ராமன் போர்க்களத்துக்கு வருகிறான்.

கும்பகர்ணனும் ராமனும் கடுமையாய் யுத்தம் செய்கிறார்கள்.

* * *

ராம பாணங்களால் கும்பகர்ணனது படைகள் எல்லாம் சேதப்பட்டு இரத்தம் நாலா பக்கத்திலும் ஓடுகிறது. இரத்த ஓட்டத்தில் தேரென்ன, யானை என்ன, குதிரை என்ன, காலாட்படைகள் என்ன எல்லாம் இழுபட்டுப் போகிறதாகக் கும்பகர்ணனது மனக் கண்ணுக்குத் தோன்றுகிறது.

தன்னுடைய கையும் காலும் புண்பட்டு உதவாது போய் விட்டன.

இந்த மன நிலையில் ராமனைப் பார்த்துப் பேசுகிறான்:

சிந்துரச்செங் கொழுங்குருதி
 திசைகள்தொறும் திரையாறு,
எந்திரத்தேர் கரிபரிஆள்
 ஈர்ந்தோடப் பார்த்திருந்த
கந்தரத்தின் கிரிகும்ப
 கருணனும்தன் கண்முன்நின்ற
சுந்தரப் பொற்றோளனை
 முகநோக்கி இவைசொன்னான்.

[சிந்துரச் செங்கொழுங்குருதி: சிந்துரம் போன்ற ஒரே சிவப்பாய் உள்ள இரத்தப் பெருக்கு; திசைகள் தொறும் திரை ஆறு: நாலா பக்கமும் அலைகளோடு கூடிய ஆறுகளாக ஓடி; எந்திரத்தேர் கரி பரி ஆள்: யுத்தத்துக்கான எந்திரங்கள் அமைந்த தேர்களும், யானைகளும், குதிரைகளும், படை வீரர்களும்; ஈர்த்தோடப் பார்த்திருந்த: இழுபட்டு ஓடுவதைக் கண்ட; கந்தரத் தின்கிரி கும்பகருணனும்: மேகத் குகைகளைக் கொண்ட பெரும் கல்மலைபோலத் தோன்றிய கும்பகர்ணனும்; தன் கண்முன் நின்ற: சுந்தரப் பொற் தோளனை: மந்தர கிரிபோல் பருத்த தோள் கொண்ட ராமனை — முகம் நோக்கி இவை சொன்னான்.]

* * *

இரத்தம் மிகுதியாகச் சிந்திய காரணத்தால் மனசில் ஜன்னிக் கோளாறு கண்டு இரத்தப் பெருக்கு ஆறாய் ஓடுவதாகவும் அந்த ஆற்றில் தேர் முதலியவைகள் இழுபட்டுப் போவதாகவும் தோன்றுகிறது கும்பகர்ணனுக்கு.

இந்த மயக்கத்துக்குள் ராமனது உருவம் எதிரே தோன்றுகிறது; பேசுகிறான்.

"என் தம்பி விபீஷணன் நீதியை விட்டுச் சிறிதும் விலகாத உத்தமன். அரக்கர்களாகிய நாங்கள் என்ன தவறெல்லாம் இழைத்தாலும் அவைகளில்

ஒன்றும் என் தம்பி விபீஷணனைப் பாதிக்கவில்லை.''

'நீதியால் வந்ததொரு
 நெடுந்தரும நெறியல்லால்
சாதியால் வந்தசிறு
 நெறியறியான் என்தம்பி:
ஆதியாய்! உனை அடைந்தான்,
 அரசர்உருக் கொண்டமைந்த
வேதியா! இன்னும்உனக்(கு)
 அடைக்கலம்யான் வேண்டு
 கின்றேன்.'

[நீதியால் வந்ததொரு: நெடுங்காலமாய் நியதி பெற்று உயர்ந்த மக்களிடையே வந்த: நெடுந்தரும நெறியல்லால்: எல்லாத் துறைகளிலும் சென்று பரவிய தர்ம நெறி அல்லாமல்; சாதியால் வந்த சிறு நெறி: அரக்கர் குலத்தோரை ஒட்டிய கீழான நெறியை அறியான் என் தம்பி: அறியாத சன்மார்க்கன் என் தம்பி விபீஷணன்; ஆதியாய்: ஆதியா கடவுள் சொரூபமானவனே; உனை அடை தான்: உன்னைச் சரண் அடைந்தான்; அர உருக் கொண்டமைந்த வேதியா: அரச வோடு அவதரித்த சர்வக்ஞனான கடவுளே வேதியா: எல்லா அறிவுக்கும் நிலைக்களனா உள்ளவனே; இன்னும் உனக்கு அடைக்க யான் வேண்டுகின்றேன்: விபீஷண சொன்னது மாத்திரம் அல்லாமல் அவ காக நானும் உன்னை அடைக்கலம் வேண் கொள்கிறேன்.]



''இந்தாப்பா! நாடெல்லாம் வன மகோத்சவம் நடக்கிறது; நீ பச்சை மரத்தை வெட்டிப் பாழ் பண்ணு கிறாயே?''

மரத்தின்மேல் இருப்பவன்:—அதற்காகத்தான் வெட்டுகிறேன். வன மகோத்சவம் கொண்டாட இந்த ஊருக்கு யாரோ மந்திரி ஐயா வருகிறாராம். தெருவிலே மாவிலைத் தோரணம் கட்ட வேண்டுமாம். வெட்டி வரச் சொன்னாங்க!

* * *

மேலும் சொல்லுகிறான் கும் கர்ணன்:

''ராவணனே அறிவோ இரக்கமே ஒன்றும் இல்லாத நிலையில் இரு கிறான் இப்போது. தம்பி விபீஷண மேல் கோபங் கொண்டவனாய்த்தா இருக்கிறான். விபீஷணனை எதிரி காண நேர்ந்து விட்டால் உயி வாங்கியே விடுவான். இரக்கம் காட் மாட்டான்.''

'தம்பியென நினைந்திரங்கித்
 தவிரான்அத் தகவில்லான்;
தம்பி! இவன் தனைக்காணிற்
 கொல்லும்; இறை நல்கானால்;
உம்பியைத்தான் உன்னைத்தான்
 அனுமனைத்தான் ஒருபொழுது
எம்பிபிரி யானாக அருளுதியால்!
 வேண்டினேன் எம்பிரானே!'

[தம்பி என நினைந்து இரங்கித் தவிரா அத் தகவில்லான்: தம்பி என்று இரக் கொண்டு விபீஷணனை வேலில் விட்டுவிட ம டான் ராவணன்; தம்பி: மக்களினத்து நாயகமாய் உள்ள ராமனே; இவன் த காணில்: இந்த விபீஷணனைக் காணி கொல்லும்: கொன்று விடுவான்; இறை காணல்: கொஞ்சமும் இரக்கம் காட்ட ம டான் ஆகையால்; உம்பியைத்தான்: ல மணனைத்தான்; உன்னைத்தான் அனுமனை தான்; ஒருபொழுதும் எம்பி பிரியானாக: எ தம்பி விபீஷணன் பிரிந்து நிற்காதப அருளுதியால்: அருள் செய்வாயாக;]

கும்பகர்ணனது வேண்டுகோ முடிந்தது; உயிர் நீங்கிற்று. ராவண புலம்பினான்; சோகத்துக்கு உள் னான். வீராதி வீரனை தம்பிய இழந்தான்.

வீரம், நீதி, அன்பு எல்லா நிறைந்த அரிய பாத்திரமான கு கர்ணன் ராமாயண இதிகாசத் விட்டு மறைகிறான்.

# குபேரபுரி

ரா. வெங்கடேசுவரன்

அவன் நகர் வீதி வழியே சென்றான். மாட மாளிகைகள் கூட கோபுரங்கள் இவற்றையெல்லாம் கடந்து சென்றது அந்த நகர் வீதி. கணக்கிலடங்காத 'பியூக்' 'செவர்லெட்' மோட்டார் வண்டிகள் வீதியைத் துருவிக்கொண்டு சென்றன. ஆண்களும் பெண்களும் வித விதமான உடை உடுத்திக் கொண்டு சென்றார்கள்.

அது குபேரபுரி!

அவன் வீதிவழியே நடந்த வண்ணமாக இருந்தான். தொலையாத வழியாக இருந்தது.

ஜவுளிக் கடைகள், நகைக்கடைகள் இவற்றில் ஏராளமாக விலையுயர்ந்த வஸ்துக்கள் விலையாகிக் கொண்டிருந்தன.

நடுநடுவே 'டவுன் பஸ்'கள் வீதியைத் துருவிக்கொண்டு செல்வதை அவன் கவனிக்காமல் இல்லை. அவன் பஸ்ஸில் போகக் கூடாதோ? நடந்து சென்றே நானாவிதமானக் காட்சிகளையும் பார்க்க விரும்பினான் போலும்! கையில் சம்பளம் கிடைத்த ஐந்து தேதிக்குள் எல்லாவற்றையும் செலவழித்துவிட்டு, அடுத்த மாதம் முதல் தேதியை ஆவலுடன் எதிர்நோக்கும் அதிசயக் கோஷ்டியாகிய 'நடுத்தர வகுப்பை'ச் சேர்ந்தவன், அவன். சுமாரான உத்தியோகத்திலிருந்தும், அவன் சட்டைப் பையிலிருந்தது சில சில்லறைக் காசுகளே. அதை அவன் அடிக்கடி தடவிப் பார்த்துக் கொண்டான். அந்தச் செய்கை 'தான் குபேரப் பட்டணத்திற்குத் தகுதியில்லாதவன்' என்று அவன் எண்ணுவதைக் காட்டுவதுபோல் இருந்தது.

ராம பாணத்தைப் போல் வீசியடித்துக் கொண்டு சென்ற ஒரு 'ஸ்டுடிபேகர்' வண்டி அங்கிருந்த ஹோட்டல் அருகே சென்று நின்றது. அதிலிருந்து ஒரு இளம் தம்பதிகள் இறங்கி ஹோட்டலுக்குள் நுழைந்தார்கள். ஆடவன் முகத்திலே இளமை துள்ளியது. மிடுக்காக வந்த அந்தப் பெண்ணின் முகத்திலே மந்தகாசம் தவழ்ந்தது. மின்சார விளக்கிலே 'டால்' அடிக்கும் வைர நகைகளைக் கண்டு மோகித்து நின்றான் அவன்.

தன் மனைவியின் நிலையை எண்ணினான். அவள் செவியை அலங்கரிப்பது ஒரு பழைய சிகப்புத் தோடுதானே? என்றைக்காவது அவன் கையால், அவளுக்கு வைரக் கம்மல் செய்தளிக்க முடியுமா?

அவனுக்கு ஏதோ ஆவேசம் வந்தது. அந்த இளம் தம்பதிகள் நுழைந்த அதே ஹோட்டலுக்குள் அவனும் நுழைந்தான். அவர்கள் உண்டதையெல்லாம் அவனும் உண்டான். நெய்த் தோசை, அல்வா, பூரி, பாஜி, பாதாம் கீர், பாம்பே மிக்ஸ்சர்,—காப்பி சாப்பிட்டால் முன்னால் சாப்பிட்ட பாதாம்கீரின் தித்திப்பு தெரியாமல் இருக்க வேண்டுமே அதற்காக மிக்சர்—அப்புறம் கடைசியாகக் காப்பி.

ஹோட்டலை விட்டு வெளியே வந்தான். ஹோட்டல் முன் நின்றுகொண்டு அதன் பெயர் பொறித்த பலகையை வெறித்து நோக்கிக் கொண்டிருந்தான்.

வீட்டிலிருக்கும் அவன் மனைவி, குழந்தைகளின் நினைவு வந்தது. அவன் சாப்பிட்டானே, அத்தகைய சிற்றுண்டி என்றாவது அவர்கள் சாப்பிட்டிருப்பார்களா? "ஹோட்டலுக்குக் கொடுக்கும் பணத்திலே, உங்களுக்கு நான் நாலு நாளைக்கு உப்புமா பண்ணிக் கொடுத்து விடுவேனே" என்று எத்தனையோ தடவை சொல்லியிருக்கிறாள், அவன் மனைவி. அந்த அரிசிக் குருணை

## பெயர்ப் பொருத்தம்!



உப்புமாதான் அவனும் அவன் குழந்தைகளும் சாப்பிட்ட சிற்றுண்டி.

அதோ, அங்கொருவன் பலூன்கள் கொண்டு போகிறான்.

அவன் மனத்திலே மகிழ்ச்சி ஏற்பட்டது. குழந்தைகளுக்கு அவன் இதுவரை விளையாட்டுச் சாமான்களை வாங்கிக் கொடுத்ததில்லை. மூன்று பலூன்கள் வாங்கினான்.

திரும்பவும் ஹோட்டல் பக்கமே நின்றான். பஸ் நிற்குமிடமும் அதுதான். "சொந்த மோட்டார்தான் இல்லை, பஸ்ஸிலாவது போகலாம்" என்று அவன் எண்ணியிருக்கலாம். பஸ் வர இன்னும் நேரம் இருந்தது.

ஆனால் உலகம் காத்திருக்குமா? அது சுழன்று கொண்டேதானிருந்தது. ஆம், இன்னொரு 'ஸ்டூடிபேகர்' ஹோட்டலின் முன் வந்து நின்றது.

அவன் ஒரு பெருமூச்சுவிட்டான்.

மல்லிகை ஆரம் விற்றுக்கொண்டு ஒருவன் சென்றான். தன் மனைவியின் நிலையை எண்ணினான். அவன் மனைவி கர்ப்பிணி. இதுவரை அவன் அவளுக்கு, அவள் கேட்காமல் ஒன்று வாங்கிக் கொடுத்தானென்பதே கிடையாது. இரண்டு சரம் மல்லிகை மாலை வாங்கினான்.

ஆயிற்று. இன்று நிறையச் செலவு ஆகிவிட்டது—ஹோட்டல், பலூன், பூமாலை என்று. குபேர பட்டணத்திற் கேற்றபடிதான் செலவாகிவிட்டது! கையில் இருப்பதென்ன, ஒரு அணாதான். அதை உபயோகித்தால் பஸ்ஸில் போகலாம். அவன் மனம் என்ன அலைகளில் ஈடுபட்டிருந்தது. 'தினமும்தான் நம் ஏழ்மை இருக்கிறது. இன்றைக்காவது பஸ்ஸில் போகலாம்' என்றெண்ணினான்.

பஸ் வந்தது. அதில் தாவி ஏறப்போகும் சமயத்தில் ஒரு குரல் 'சாமி, ஒரு காலணாக் கொடுங்க, சாமி—தர்ம ராசாவே' என்று வந்தது. மோட்டாரிலிருந்து அவன் இறங்கிவிட்டான்.

குபேரபுரியிலுமா 'இல்லை' என்ற ஓலம்? கையில் வேறு காசில்லை, அந்த ஒரு அணாவைத் தவிர. அதை அவனுக்குப் போட்டான். போட்டுவிட்டு, வீட்டுக்கு நடந்து கொண்டிருந்தான்!

* * *

இப்பொழுது அவன் வைரத் தோடையும், பாதாம் கீரையும் மறந்து விட்டான். குபேரபுரியில் ஏழ்மையின் சின்னத்தைப் பார்த்தவுடன் கையிலிருந்த பலூனும் மலர் மாலையும்கூட அவனுக்குப் பாரமாக இருந்தன. பலூன்களை எதிரே அழுதுகொண்டு வந்த ஒரு குழந்தையிடம் கொடுத்தான்! மலரைக் கர்ப்பிணியான தன் மனைவியிடம், அவள் முகம் மலரக் கொண்டு போய்க் கொடுக்கக் கூடாதோ? இல்லை. நடைபாதையிலேயே பிய்த்து எறிந்து விட்டான்.

மனதிலிருந்து ஒரு பாறாங்கல் அகன்ற மாதிரி அவனுக்கு ஒரு உணர்வு ஏற்பட்டது.

திடீரென்று மோட்டார் ஹார்ன்!

பஸ் நிற்குமிடத்தில் வந்த பஸ்-அவன் ஏறத் தவறிய பஸ்-அவனைக் கடந்து கன வேகத்துடன் சென்று கொண்டிருந்தது.

அதைப் பரிதாபமாகப் பார்த்தான். திடீரென்று அவன் கண்கள் அங்கிருந்த யாரையோ ஊடுருவி நோக்கின.

அவனைத் 'தர்ம ராசாவே' என்று அழைத்து அவனிடம் பிச்சை வாங்கிய அந்தக் குபேரபுரி ஏழை பஸ்ஸில் போய்க் கொண்டிருந்தான்!

குபேரபுரி ஏழை யல்லவா? குபேரபுரியில் அவன் நடந்து செல்லலாமா?




ஒருவர்:—தயவுசெய்து நாலு அணா இருந்தால் கொடுங்கள்; பஸ் சார்ஜுக்கு வேண்டியிருக்கிறது!
மற்றொருவர்:—என்னிடம் நாலு அணாவாக இல்லை. ஐந்து ரூபாய் நோட்டாக இருக்கிறது.
முதலவர்:—அதனால் என்ன? ஐந்து ரூபாய் நோட்டையே கொடுங்கள். டாக்ஸியில் போய் விடுகிறேன்!

# அம்பா, நீ இரங்காவிடில்...

எஸ். வி. எஸ்.

சாம்புவைப் பார்த்து வெகுநாளாயிற்றே என்று ஒரு நாள் மத்தியானம் அவனைப் பார்க்கச் சென்றேன். அப்போது அவன் தன் ஞாயிற்றுக்கிழமைத் திட்டத்தை நிறைவேற்றுவதில் ஈடுபட்டிருந்தான்.

சாம்பு பொதுவாகத் திட்டப்படி ஒன்றும் செய்வதில்லை என்று கூறி விடலாம். ஆனாலும் சில அம்சங்களை விடாப்பிடியாக நிறைவேற்றி வருகிறான்.

வாரத்தில் திங்கள், புதன், வெள்ளி முக க்ஷவரம் செய்து கொள்ளும் நாட்கள் என்று தன் திட்டத்தில் போட்டிருக்கிறான். அந்த நாட்களில் உலகம் தலைக் குப்புறக் கவிழ்ந்தாலும் அவன் அந்தத் திட்டத்தை நிறைவேற்றத் தவறமாட்டான்! அவன் தாயார் எத்தனையோ தடவை, "கண்ணே! இன்னிக்கு அமாவாசையடா! நாளைக்கு ஆடிப் பண்டிகையடா!" என்றெல்லாம் சொல்லி அந்தத் திட்டத்தை நிறைவேறாமல் தடுக்கப் பார்த்திருக்கிறான்; முடியவே இல்லை.

'செவ்வாய்க் கிழமைகளில் ஒரு சலவைத் தொழிலாளருக்குத் தன் அழுக்கைப் போட வேண்டும்' என்று திட்டமிட்டிருக்கிறான் சாம்பு. அந்தக் கிழமைகளில் அந்தத் திருத்தொண்டை செய்யாமலிருக்க மாட்டான். 'சனிக்கிழமை மாட்டினி சினிமாக்களுக்குப் போக வேண்டும்' என்று அவன் திட்டமிட்டிருக்கிறான். அத்தினங்களில் தமிழ்ப்படமானாலும் சரி, ஹிந்திப்படமானாலும் சரி, பத்தணா டிக்கட் கிடைக்க வேண்டியதுதான் தாமதம். சினிமா தியேட்டருக்குள் நுழைந்து விடுவான் சாம்பு.

இப்படிப்பட்ட சாம்பு, ஞாயிற்றுக் கிழமை பகல் நேரங்களில் ஊரிலுள்ள அத்தனை மாத-வாரப் பத்திரிகைகளைப் படித்துத் தீர்த்து விடுவது என்று திட்டமிட்டிருக்கிறான். இந்தத் திட்டத்தை நடத்திக் கொண்டிருந்தபோதுதான் நான் போய்ச் சேர்ந்தேன். என்னைக் கண்டதும் ஒரு துள்ளுத் துள்ளி எழுந்து உட்கார்ந்தான்.

"வா, வா! உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். நல்ல சமயத்தில் வந்தாய்!" என்று கோபத்துடன் சொல்லிக் கொண்டே குத்துச் சண்டை போட வரும் பயில்வானைப்போல் கைச் சட்டையை யெல்லாம் மடக்க ஆரம்பித்துவிட்டான்.

"என்ன, சாம்பு! ஏன் அவ்வளவு கோபம்? யார்மேல் அவ்வளவு கோபம்?" என்று கேட்டேன்.

"எல்லாம் இந்த எழுத்தாளர்கள்மேல் தான்! இவர்கள் எதிர் வீட்டிலிருக்கும் பெண்ணைச் சும்மா விடமாட்டார்கள் போலிருக்கிறதே! எப்ப பார்த்தாலும் வம்புக்கிழுத்துக் கொண்டு... வேறு வேலை கிடையாதா? வேறு விஷயமே கிடையாதோ? அல்லது கற்பனைதான் வேறு திசையில் ஓடாதோ? கேட்கிறேன்!" என்று கத்த ஆரம்பித்து விட்டான்.

இவ்விதம் கத்தியதிலிருந்து யாரோ சில எழுத்தாளர்கள் ஒழுங்கீனமாக நடந்து கொண்டு விட்டார்கள்; அதனால் தான் கத்துகிறான் போலிருக்கிறது என்று தீர்மானித்தேன். இந்த எண்ணம் வரவும் எனக்கு ரொம்பவும் அவமானமாகப் போய்விட்டது.

"சாம்பு, சற்று நிதானமாக என்ன விஷயம் என்று சொல்! உன் எதிர் வீட்டுப் பெண்ணை யார் என்ன செய்து விட்டார்கள்?" என்று கேட்டேன்.

"சீ...சீ...! என் எதிர்வீட்டுப் பெண்ணை யாரும் ஒன்றும் செய்துவிடவில்லை. இந்தப் பத்திரிகைகளில் வரும் கதைகளைச் சொல்லுகிறேன்" என்றான் சாம்பு.

நின்றுவிடும்போலிருந்த மூச்சு எனக்குத் திரும்ப வந்தது!

"அப்பாடா! கதைகளைப் பற்றித்தானே, நல்ல வேளை! தலை தப்பியது... கதைகளைப்பற்றி என்ன சொல்லுகிறாய்?"

"ஒரு கதாநாயகன், அவன் எதிர் வீட்டில் நவயௌவன நாரீமணி யிருப்பாள். கதாநாயகன் தன் வீட்டிலிருந்து ஜன்னல் வழியாக அவன் காரியாதிகளைப் பார்த்துக் கொண்டிருப்பான். பிறகு கண்கள் சந்திக்கும்; காதல் உண்டாகும்; கத்தரிக்காய் முளைக்கும்; கடைசியில் கல்யாணமாகிவிடும்!—இதே மாதிரிக் கதைகள் இதோ இருக்கிற எட்டுப் பத்திரிகைகளில் ஆறு பத்திரிகைகளில் வெளியாகியிருக்கின்றன! ஆனால் ஒரே ஒரு வித்தியாசம்! ஒரு பத்திரிகையில் 'எதிர் வீட்டுப் பெண்' என்று இருந்தால் அடுத்த பத்திரிகையில் 'பக்கத்து வீட்டுப் பாவை' என்று இருக்கும்; மூன்றாவது பத்திரிகையில் 'அடுத்த வீட்டு அம்புலு' என்று



இருக்கும். இந்தச் சிறு மாறுதலுக்கும் காரணம் எழுத்தாளர்களின் சொந்தக் கற்பனையல்ல. அவரவர்கள் வீட்டு ஜன்னல்களை வைத்த கொத்தர்கள்தான். வாசல்புறம் ஜன்னல் வைத்தால் 'எதிர் வீட்டுப் பெண்' பக்கவாட்டில் வைத்தால் 'பக்கத்து வீட்டுப் பெண்' என்று எழுதுகிறார்கள் என்றுதான் நினைக்கிறேன்!"—இவ்விதம் ரொம்பவும் ஆத்திரத்தோடு பேசினான் சாம்பு.

"ஏதோ அவனவனுக்குத் தோன்றியதை எழுதிவிட்டுப் போகிறான். அந்தக் கதை எழுதிய எழுத்தாளன் நேரே உன்னைத் தேடி வந்து 'படி' என்று தொந்தரவு செய்தானா? என்ன? ஒன்றுமில்லையே! இஷ்டமிருந்தால் படி, கஷ்டமாக இருந்தால் விட்டுத் தொலையேன்! இவ்வளவு அற்ப விஷயத்தைப் போய்ப் பெரிதாக எடுத்துக் கொண்டு பேசுவது நன்றாக இல்லை" என்றேன்.

"சரிதான் போ! இந்தக் கதைகளை என்னைப் படி என்று தொந்தரவு செய்தால்கூட அவ்வளவு கஷ்டப் படமாட்டேன். ஆனால் இந்த கதைகளை எதிர் வீட்டுப் பெண்கள் படித்துத் தொலைத்தால் என் கதி என்ன ஆவது? அதைச் சொல்!" என்றான் சாம்பு.

எனக்குச் சிரிப்பு வந்து விட்டது! சாம்பு அப்படியொன்றும் அழகனல்ல. அதுவும் ஒவ்வொரு சமயம் அவன் முகத்தில் வழிகிற அசட்டுக் களையை ஒரு தடவையாகிலும், அவன் கண்ணாடியில் பார்த்திருந்தானாகில் மேற்கண்டவாறெல்லாம் பயப்பட வேண்டிய அவசியமிராது. ஆனாலும் 'காதலுக்குக் கண்ணில்லை' என்ற மணிமொழி நூற்றுக்கு நூறு உண்மை. அதனால் சாம்புவைக் கண்டும் எவளாவது காதலிக்கலாம்! நாம் என்னத்தைக் கண்டோம்? சாம்பு பயப்படுவதிலும் நியாய மிருக்கலாம்.

இவ்விதம் நான் சிந்தித்த வண்ணம் உட்கார்ந்திருந்தேன்!

அந்தச் சமயத்தில் என் சிந்தனையைக் கலைக்க வருவதுபோல், 'அம்பா, நீ இரங்காவிடில் புகலேது?' என்ற இசைத் தட்டின் இன்னிசை என் காதில் விழுந்தது. அடுத்த கணம், நாராசம்போல், அந்த இன்னிசையுடன் இரண்டு பெண் குரல்கள் வந்தன! காதை இறுகப் பொத்திக் கொண்டேன்.

ஆம், சாம்புவின் எதிர் வீட்டிலிருந்த பெண்கள்தான் மேற்கண்டவாறு கிராமபோனில் இசைத் தட்டை வைத்துவிட்டுக் கூடவே தாங்களும் பாடத் தொடங்கி விட்டார்கள்.

இத்தனை நேரமும் என்னைப் போலவே சிந்தனையி லாழ்ந்திருந்த சாம்பு, "எழுத்தாளர்களும் தாங்கள் எழுதும் கதைகள் வாழ்க்கையோடு ஒட்டின கதைகளாக எழுத வேண்டும். எனக்குத் தெரிந்த மட்டில் யாரும் தங்கள் எதிர் வீட்டுப் பெண்களை, எழுத்தாளர்கள் சொல்லுகிறபடி பார்க்கவோ, பேசவோ விரும்புவார்கள் என்று தோன்றவில்லை. ஆகவே 'எதிர் வீட்டுப் பெண்கள் மீது காதல் ஏற்பட்டது' என்று எழுதுவதற்குப் பதில் 'வெறுப்பு ஏற்பட்டது' என்று எழுதினால் வாழ்க்கையைப் புரிந்து கொண்டு எழுதியதாக இருக்கும். வாழ்க்கையை ஒட்டின கதையாகவும் இருக்கும்" என்றான்.

இவை அவன் சொந்த அனுபவத்திலிருந்து வெளிப்படும் வார்த்தைகள் என்று சும்மா இருந்துவிட்டேன். பிறகு கொஞ்ச நேரம் வேறு விஷயங்களைப் பற்றிப் பேசிவிட்டு, அவனிடமிருந்து விடை பெற்றுக் கொண்டேன்.

* * *

சாம்புவை நடுவில் நான்கு ஐந்து மாதங்கள் பார்க்கவில்லை. எனக்கும் ஓய்வு கிடைக்கவில்லை; பார்க்கவேண்டிய பிரமேயமும் ஏற்படவில்லை. ஆனால் அன்று ஒரு நாள் தெருவில் போய்க் கொண்டிருந்த போது, எதேச்சையாக சாம்புவைச் சந்தித்தேன். அவன் அன்று சைக்கிளில் வந்து கொண்டிருந்தான். என்னைக் கண்டதும் சைக்கிளை விட்டு அவசரமாகக் கீழே இறங்கினான்.

"ஏண்டா பழி! சௌக்கியமா?" என்று கேட்டேன்.

"எல்லாம் சௌக்கியந்தான்; சௌக்கியத்துக்கு என்ன குறைச்சல்?" என்றான் சாம்பு.

"உன் எதிர் வீட்டிலும் சௌக்கியத்துக்குக் குறைச்சல் இல்லையே?" என்று சிரித்துக் கொண்டே கேட்டேன்.

"அங்கேயா? சௌக்கியம், ரொம்ப அதிகமாகப் போய் நான் என் வீட்டில் இருக்க முடியாது என்ற நிலை ஏற்பட்டு விட்டது!"

"ஏன்?"

"ஏன் என்று ஒரு கேள்வியா கேட்டாய்? நன்றாய்க் கேட்டாய் போ! பொழுது விடிஞ்சு பொழுது போனா அப்புறமும், அர்த்த ராத்திரி வரை எதிர் வீட்டில் பாட்டும், கூத்தும், நாட்டியமும் டான்ஸுமாக ஒரே ரகளையாக இருக்கும். ரேடியோ வேறு வாங்கி விட்டார்கள். அது இருபத்து நாலு மணி நேரமும் அலறும்! அத்துடன் கூடவே அந்தப் பெண்களும் பிலாக்கணம் வைக்கத் தொடங்கிவிடுவார்கள். பாட்டு, கூத்து ஒழிந்த நேரங்களில், 'க்யாரே பூரே, கக்ரே புக்ரே' என்று பேச ஆரம்பித்து விடுவார்கள். 'இது என்ன?' என்று விசாரித்தேன். அவர்கள் ஹிந்திப் பள்ளிக் கூடத்தில் ஹிந்தி நாடகம் போடப்போகிறார்களாம் அதில் அந்தப் பெண்களும் வேஷம் போட்டுக் கொண்டு நடிக்கப் போகிறார்களாம். அதற்குத் தங்கள் பகுதியைப் பாடம் பண்ணிக் கொள்கிறார்கள் என்று தெரிந்து கொண்டேன். இப்படிக் கொஞ்ச நஞ்சம் தெரிந்த கூச்சல்களுடன் நமக்குப் புரியாத பாஷைக் கூச்சலும் சேர்ந்து கொண்டு விட்டன."

"அப்புறம்?"

"அப்புறம் நமக்கு அங்கே இருக்க முடியவில்லை. ஓயாத ஒழியாத தலை வேதனையாகப் போய் விட்டது!"

"அதனால் அந்த இடத்தை விட்டுக் காலி செய்து விட்டாயா, என்ன? நீ இருந்த இடம் நல்ல இடமாச்சே! அடடா!" என்று அங்கலாய்த்தேன்.

"இந்தச் சாம்புவை என்னவென்று நினைத்துக் கொண்டாய்? இந்த அற்ப விஷயங்களுக்காக நான் வீட்டை விட்டுக் காலி பண்ணி விடுவேனா, என்ன?"

"காலி பண்ணாமல், சகித்துக் கொண்டு போகக் கற்றுக் கொண்டு விட்டாயாக்கும்!" என்றேன்.

"சரிதான், போ! என்னை என்ன மகாத்மா காந்தி என்று நினைத்துக் கொண்டு விட்டாயா, அல்லது புத்த பகவான் என்று நினைத்துக் கொண்டு விட்டாயா?"

"பின் என்ன செய்தாய்?"

"அவர்களை அந்த இடத்தை விட்டுக் காலி பண்ணச் செய்து விட்டேன்!"

"அட பாவி!"

"ஏன்?"

"உன்னிடம் காலணா காசு வாங்காமல், பாட்டுப் பாடியும் டான்ஸ் ஆடியும் காண்பித்தார்கள். அதற்குச் சற்றும் நன்றி தெரிவிக்காமல் வீட்டை விட்டு விரட்டி விட்டாயே!" என்றேன்.

"லக்ஷணம் தான், போ!" என்று சொல்லி விட்டுச் சாம்பு தன் சைக்கிளை ஒரு மிதி மிதித்து, ஏறி உட்கார்ந்து போய்விட்டான்!

* * *

ஒரு நாள் காலை காப்பி சாப்பிட்டு விட்டுக் காலைப் பத்திரிகையைப் பார்த்துக் கொண்டிருந்தேன். சாம்பு வீட்டு வேலைக்காரன் ஒரு கடிதாசியைக் கொண்டு வந்து கொடுத்தான். "நான் ஒரு பேராபத்தில் மாட்டிக்கொண் டிருக்கிறேன்! இன்று



டாக்டர்:—என்ன செட்டியார்! உங்களைப் பார்த்து ரொம்ப நாளாகிறதே! நீங்கள் இங்கே வந்து ஒரு மாதத்துக்கு மேலே ஆகியிருக்கும் போலிருக்கிறதே!

வந்தவர்:—கொஞ்ச நாளாகப் படுத்த படுக்கையாயிருந்தேன். இப்பொழுது தேவலை. அதனால் நான் உங்களைப் பார்த்து வாடகை கேட்டு விட்டுப் போகலாம் என்று வந்தேன்!

பகல் ஒரு மணிக்கு வீட்டுக்கு வரவும்" என்று சாம்பு எழுதியிருந்தான்.

அந்தக் கடிதம் கொண்டு வந்தவனிடம் "சரி, நான் வருகிறேன்" என்று சொல்லி யனுப்பி விட்டேன்!

சாம்புவுக்கு எத்தகைய ஆபத்து வந்திருக்கக்கூடும் என்று என்னால் ஆன மட்டும் யோசித்துப் பார்த்தேன்; புலப்படவே இல்லை. அவனுடைய சாமர்த்தியத்தின் முன்பு எதுவும் நிற்க முடியாதே! அப்படிப்பட்ட சாம்புவுக்கு நம்மால் என்ன உதவி செய்து விட முடியும் என்றெல்லாம் நினைத்துப் பார்த்தேன்.

இருந்தாலும் அவன் சொன்ன நேரத்துக்குப் போய்ச் சேர்ந்தேன்.

"என்ன சாம்பு?" என்று கேட்டேன்.

"என்னவென்று சொல்ல? அம்மா பெரிய ஆபத்திலேல்னு என்னைச் சிக்க வைத்து விட்டாள்?" என்றான்.

"என்ன?"

"இன்றைக்கு இரண்டரை மணிக்குப் பிள்ளையைப் பார்க்கப் பெண் வராளாம்!"

"இது என்ன கூத்து? பெண்ணைப் பார்க்கத்தான் பிள்ளை போவதுண்டு! பிள்ளையைப் பார்க்க இப்ப பெண் வராளோ! பலே, பலே! அப்புறம் கேசரி, பஜ்ஜி, காப்பியெல்லாம் நீ ஒரு தட்டில் வைத்துப் பெண்ணுக்குக் கொண்டு போய் வைக்க வேண்டுமாக்கும். ஹார்மோனியப் பெட்டியை வைச்சுண்டு பெண்ணுக்குப் பாடிக் காட்டணுமாக்கும். பெண்ணுக்கு நமஸ்காரம் பண்ணிவிட்டு, கதவிடுக்கிலே நின்று பெண்ணழகைப் பார்க்க வேண்டுமாக்கும்!" என்றேன்.

"இது வேடிக்கையே அல்ல. காலம் போகிற போக்கைப் பார்த்தால் நீ சொல்கிறபடி சீக்கிரமே நடந்தாலும் நடக்கலாம். ஆனால் இன்றைக்கு அப்படியல்ல! அம்மா, நான் கல்யாணம் பண்ணிக்கவோ பெண் பார்க்கவோ சம்மதிக்க மாட்டேன் என்று பெண்ணை வரவழைத்துப் 'பெண் பார்க்க' ஏற்பாடு பண்ணி விட்டாள். இந்தக் கஷ்டத்திலே யிருந்து விடுபட நீ தான் உதவ வேண்டும்; அதற்குத்தான் உன்னைக் கூப்பிட்டேன்."

"கல்யாணம் பண்ணிக்கப்போறவனும் கஷ்டப்படப் போறவனும் நீ! நீ இருக்க நான் என்ன பண்ண இருக்கிறது?"

"ஆமாம், நீதான் பண்ணியாகணும், பெண்ணை அழைச்சுண்டு யார் வந்தாலும் எனக்குப் பெண் பிடிக்கவில்லை என்றோ, ஒரு காது செவிடு என்றோ, எனக்குப் புத்திச் சுவாதீனமில்லை என்றோ, ஏதோ சொல்லி விரட்டிவிடு. இந்த உபகாரம் தான் நீ பண்ணணும்!"

"அழகுதான்!" என்றேன்.

அதற்குள் கீழே யாரோ வந்து பே கொண்டிருக்கும் சத்தம் கேட்டது.

"அவாளும் வந்து விட்டாப்போ இருக்கே, வா போவோம்!" என்றேன்.

சாம்பு "அவசரப்படாதே! அம் பூர்வாங்கமாகக் கவனிச்சப்பிட்டு, எ னைக் கூப்பிடுவா, அப்போ போவோம்!" என்றான்.

"சரிதான்" என்றேன்.

• • •

கொஞ்ச நேரம் கழித்து நாங்க அழைக்கப்பட்டோம். நாற்பது ஐம்ப வயது மதிக்கத் தக்க ஒருவர் கூடத்தி ஒரு பலகையின் மீது உட்கார்ந்திருந்தார்.

நாங்கள் போய் ஒரு சுவர் ஓரமாக உ கார்ந்தோம்.

சாம்புவின் தாயார், சாம்புவை என்னையும் அவருக்கு அறிமுகப்படுத் வைத்தாள். வந்தவர்தான் பெண்ணை பெற்றவர் என்பதை ஊகித்தோம்.

அவர் "இந்தா, புவனா! கூடத்துக் வந்து நாளைக்குப் புருஷனாக வரப்போகி வருக்கு நமஸ்காரம் பண்ணு, அம்மா என்று சொன்னார்.

அதற்குள் சாம்புவின் தாயார், "வே டாம், இப்படி சுவாமி படத்துக்கு நம காரம் பண்ணினால் போதும்" என்றா

அடுத்த கணம் காலில் இருக்கும் மெட் குலுங்க, கை வளையல்கள் கிணு கிணு பதினேழு வயது மதிக்கத்தக்க நவயௌ வன நாரிமணி வந்து அடக்க ஒடுக் மாக நமஸ்காரம் செய்து விட் சென்றாள்!

அவளைப் பார்த்தவுடனேயே, சாம்பு க்குத் தூக்கிவாரிப் போட்டது! 'இவ ஏது, இங்கே வந்தாள்?' என்று மனதி நினைத்தான்.

"நீங்கள் ராமசாமித் தெருவில் இருக் றீர்களோ? உங்களை ராமசாமித் தெ வில்தான் அடிக்கடி பார்த்ததாக ஞா கம் வருகிறது!" என்றான் சாம்பு.

"ராமசாமித் தெருவில் என்னைப் பார் திருக்க மாட்டீர்கள் எங்கள் புவனாவை தான் பார்த்திருப்பீர்கள். ஏனென்றா புவனா தான் ராமசாமித் தெருவில், அவ மாமா வீட்டிலிருந்தாள். நான் இப்ப செ னைக்கு மாற்றலாகி வந்திருக்கிறேன் என்றார் புவனாவின் தந்தை அட்ட சிரிப்புச் சிரித்துக் கொண்டு!

சாம்புவின் முகத்தில் அசடு வழிந்த உண்மையைச் சொன்னால் யாருக்கு தான் அசடு வழியாது?

ராமசாமித் தெருவில், எனக்கும் சாம்புவுக்கும் தெரிந்த நண்பன் ஒருவன் இருந்தான். அவன் வீட்டுக்குச் சாம்பு அடிக்கடி போய் வருவான். அப்போதெல்லாம் அந்த வீட்டு எதிர் வீட்டில் சுறுசுறுப்புடன், முகத்தில் களை பொங்க மேலும் கீழும் நடமாடிக் கொண்டிருந்த பெண்ணைப் பார்த்துச் சாம்பு வியந்திருக்கிறான்! அதே பெண்ணை இன்று 'புவனா' என்று அறிமுகப்படுத்தியதும் சாம்புவுக்கு 'இன்ப ஏமாற்றம்' ஏற்பட்டு, அவள் தந்தையை அந்தக் கேள்வி கேட்டு வைத்தான். பதில் வந்த மாதிரி, சாம்புவின் முகத்தில் அசடு வழியச் செய்யவே இந்த தர்மசங்கடமான நிலையைச் சமாளிக்க வேண்டிய பொறுப்பு என் தலையில் வந்து விழுந்தது.

அதன்படி, "ஓஹோ, மாற்றலாகி விட்டதா? சென்னைக்கே மாற்றிவிட்டார்களாக்கும்! இங்கே வந்து எத்தனை நாள் ஆச்சு?" என்று கேட்டேன்.

"பதினைந்து நாளாகி விட்டது!"

"தற்சமயம் பெண்ணுடன் அவள் மாமா வீட்டில்தான் இருக்கிறீர்களாக்கும்" என்றேன்!

"இல்லையே! எனக்குச் சொந்தமாக ஜாகை பார்த்துக் கொண்டு குடிவந்து விட்டேனே" என்றார்.

"எங்கே?"

"இதோ எதிர் வீட்டிலேயே தான் இருக்கிறேன். புவனாவும் என்கூடத்தான் இருக்கிறாள். நான் இங்கு வந்து இரண்டு நாள் ஆகிவிட்டதே!" என்றார்.

எனக்குத் திடுக்கிட்டது; சாம்புவுக்குத் தலை கிறு கிறு என்று வந்தது!

கொஞ்ச நேரத்தில் சாம்பு தனக்குத் தலையை வலிக்கிறது என்று சொல்லி விட்டு மாடிக்குப் போய்விட்டான்.

நானும், சாம்பு கோரிய உதவி கொடுக்க வேண்டிய சந்தர்ப்பம் நேரவில்லை. ஆம், நான் எப்படி கொடுக்க முடியும்? அவன் உள்ளத்தை ஏற்கெனவே கவர்ந்த ஒரு பெண், அவனை மாலையிடத் தயாராகவரும் போது, அவன் கேட்டுக் கொண்டபடி, ஏதாகிலும் உளறி வைக்கலாமா? நான் பாட்டுக்கு வீட்டுக்கு வந்து சேர்ந்தேன்.

• • •

இந்தச் சம்பவம் நடந்த பதினைந்து நாட்களுக்குப் பிறகு சாம்புவைச் சந்தித்தேன்.

"என்ன சாம்பு! கல்யாணச் சாப்பாடு ஏதாகிலும் சமீபத்தில் போடப் போகிறாயா, இல்லையா?" என்று குசலப் பிரச்னம் செய்தேன்.

"கல்யாணமாவது? சாப்பாடாவது? இன்னும் இரண்டு நாளில் அந்த ஜாகையை விட்டுக் காலி பண்ணிக் கொண்டு நீலகண்ட மேத்தா தெருவுக்குப் போகப் போகிறேன்! அந்த விசேஷ சம்பவத்தைக் கொண்டாட வேண்டுமானால் என்னுடைய ஒருவேளை ரேஷனைத் தியாகம் செய்து, உனக்கு வடை பாயசத்தோடு, சாப்பாடு பண்ணி வைக்கிறேன்" என்றான்.

"ஏன் அந்த இடத்தை விட்டுக் காலி செய்கிறாய்?" என்று கேட்டேன்.

"'புவனா பண்ணுகிற அட்டகாசம் தாங்க முடியவில்லை! ராமசாமித் தெருவில் இருந்தபோது நல்ல பெண்ணாகத்

● ○ ● ○ ● ○ ● ○ ● ○ ●

## பாராட்டும் கலை!

பாராட்டுவது என்பது அருமையான கலை; நளினமான கலை ஏன் கம்பி மீது நடனம் புரிவது போன்ற தர்ம சங்கடமான கலை.

யாரையாகிலும் கொஞ்சம் அதிகமாகப் பாராட்டி விட்டால் முகஸ்துதியாகப் போய் விடும்; ரஸக்குறைவாகவும் தொனிக்கும். அதற்குப் பயந்துசொல்ல வேண்டியதைக் குறைத்துச் சொன்னாலோ பாராட்டினதாகவே தோன்றாது!

இன்னும் சிலர் ஒருவரைப் பாராட்டுவது என்றால் அதே துறையில் இருக்கும் இன்னொருவரை வைவது என்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஒரு சமயம் பல நாவல்கள் எழுதிப் புகழ் பெற்ற சரத் சந்திர சட்டர்ஜியைப் பாராட்டிப் பேச வந்த சில நண்பர்கள் "சரத் பாபு! நீங்கள் எழுதுவது எவ்வளவு எளிமையாக இருக்கிறது! எவ்வளவு சுலபமாகப் புரிகிறது! இந்த ரவீந்திரநாத டாகூர் என்ன எழுதுகிறார்! அவர் எழுதுவதும் ஒரு எழுத்தா? ஒன்றுமே புரிவதில்லை!" என்று ஆரம்பித்து விட்டார்கள்.

உடனே சரத் சந்திரர், "ஆமாம்; ஆமாம்! அவர் எனக்காக எழுதுகிறார்; நான் உங்களுக்காக எழுதுகிறேன்!" என்று பதில் சொன்னாராம்.

● ○ ● ○ ● ○ ● ○ ● ○ ●



பெண் எறும்பு:—இதென்ன, எண்ணி ஏழு அரிசி கொண்டு வந்திருக்கிறீர்களே?

ஆண் எறும்பு:—போதுமடி! பாவம், மனுஷர்களுக்கே அரிசியை ஏழு அவுன்ஸாகக் குறைத்து விட்டார்களே!

தோன்றினாளே. இப்பொழுது பார்த்தால் முன்னிருந்த பெண்களுக்கு அக்காவாக இருக்கிறாள்! என்ன பாட்டு! என்ன கூத்து! சிவ, சிவா! பொறுக்க முடியவில்லை. அவர்களைக் கிளப்புவதைவிட நாமே கிளம்பி விடுவோம் என்று புறப்பட்டு விட்டேன்" என்றான்.

"கல்யாண விஷயம்?"

"எதிர் வீட்டிலிருக்கும் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு யாரப்பா உபத்திரவப்படறது? கல்யாணம் பண்ணிக்கொண்டு, பெண்டாட்டிக்கு மட்டும் ஜவாப்தாரியாக இருக்கலாம்! மாமனார் வீட்டையும் எதிர் வீடாக வைத்துக் கொண்டால் பெண்டாட்டிக்கு மட்டுமன்றி, மாமனார், மாமியார், மச்சினன், மச்சினி, குழந்தை, குட்டி, நாய், நண்டு எல்லாவற்றிற்கும் பதில் சொல்லியாக வேண்டுமே! மேலும் 'நான் எதிர் வீட்டில் வந்து குடியேறும் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கொள்வதில்லை' என்று சபதம் செய்துவிட்டேனே!" என்றான்.

எனக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை. "கல்யாணம் உன் சொந்த விஷயம். அதில் நான் தலையிட்டுக் குட்டையைக் குழப்ப விரும்பவில்லை. ஆகவே, எனக்கு எப்போது சாப்பாடு போடுகிறாய்? அதை மட்டும் சொல்! சாப்பாட்டுக்கு வந்து சேருகிறேன்" என்றேன்.

"அடுத்த ஞாயிற்றுக்கிழமை வந்து சேரு" என்றான்!

* * *

சாம்பு நல்ல ரஸிகன். அதாவது, சங்கீதம், நாட்டியம் ஆகியவற்றில் நல்ல ரஸிகனோ என்னவோ, எனக்குத் தெரியாது! ஆனால் சாப்பாடு விஷயத்தில் நல்ல ரஸிகன்! எப்படிப்பட்ட சாப்பாடு போட்டான்! எத்தனை வகை வியஞ்சனங்கள். ஆஹா ஹா!

இப்படிப்பட்ட அருமையான சாப்பாட்டுக்குப் பிறகு யாருக்குத்தான் களைப்பாக இராது. கண்ணைச் சுழற்றுது!

"சாம்பு! ஒரு பாயும் தலைகாணியும் கொடு. கொஞ்ச நேரம் சிரமபரிகாரம் பண்ணிக் கொண்டால்தான் உடம்பு சரிப்பட்டு வரும்" என்றேன்.

சாம்பு எனக்கு ஒரு பாயும் தலைகாணியும் கொடுத்துவிட்டுத் தானும் பாயை விரித்துப் படுத்துத் தன் ஞாயிற்றுக்கிழமைத் திட்டத்தை நிறைவேற்ற ஆரம்பித்து விட்டான். ஆம், அந்த வாரப் பத்திரிகைகளைப் படிக்க ஆரம்பித்து விட்டான்.

நான் கண்ணை மூடிக்கொண்டு படுத்திருந்தேன்.

சற்று நாழிகைக்கெல்லாம் "அம்பா நீ இரங்காவிடில் புகலேது!" என்று பரிச்சயமான குரல் கேட்டது! ஆம்; சாம்பு முன் குடியிருந்த வீட்டின் எதிர் வீட்டில் குடியிருந்த பெண்களில் ஒருத்தியின் குரல்தான் அது!

"என்ன சாம்பு! அந்தப் பெண்கள் உன்மேல் இரக்கமே இல்லை போலிருக்கிறதே! நீ எங்கே போய்க் குடியேறினாலும், அவர்களும் உன்னைத் துரத்திக் கொண்டு உன் வீட்டு எதிரில் குடி வந்து விடுவார்கள் போலிருக்கிறதே!"

"இல்லை, இல்லை! அம்பாள் இரங்கி விட்டாள்! எதிர்வீடு அவள் பிறந்தகம் அல்ல—புக்ககம். அவளுக்குக் கலியாணமாகி விட்டது! கணவனுடன் குடித்தனம் செய்கிறாள். முன்னைப்போல் இப்பொழுது அவ்வளவு பாட்டும் கூத்தும் இல்லை!" என்றான் சாம்பு.

"சரிதான்" என்று சொல்லிவிட்டு மறுபடியும் கண்ணயர முயன்றேன்.

சற்று நேரத்துக்கெல்லாம் சாம்பு, "சபாஷ்!" என்று சொல்லிவிட்டு உற்சாக மிகுதியில் ஒரு பத்திரிகையை விட்டெறிந்தான்!

"என்ன சாம்பு, 'சபாஷ்'!" என்றேன்.

"'எதிர்வீட்டு எச்சரிக்கை' என்ற ஒரு கதையைப் படித்தேன். ரொம்ப நன்றாக இருக்கிறது!" என்றான்.

இதைக் கேட்ட நான் மூர்ச்சையாகித்தான் போனேனா, அல்லது தூங்கிப்போனேனா என்பதை இன்றுவரை நிச்சயமாக என்னால் சொல்ல முடியவில்லை!

# மீனாவின் கணவன்

லக்ஷ்மி ராஜேந்திர சங்கர்

காமு எங்கள் ஊருக்கு வந்து பத்து வருஷங்களுக்கு மேலிருக்கும். முதல் முதலாக அவள் வந்தபோது ஊரில் அவளைப் பற்றிப் பலர் பலவிதமாகப் பேசிக் கொண்டார்கள். சிலர் 'அவளுக்குக் கல்யாணமே யாகவில்லை' என்றார்கள். வரதட்சிணைக்குப் பயந்து 'அவள் தகப்பனார் ஒரு தாலியைக் கட்டி வைத்து விட்டார்' என்றார்கள் வேறு சிலர். 'அவள் புருஷன் ஓடிப்போய் விட்டான்' என்றார்கள் இன்னும் சிலர். 'அவள் புருஷன் இறந்து பல வருஷங்களாகிவிட்டன; பிழைப்புக்காக சுமங்கலி வேஷத்தைக் கலைக்காமலிருக்கிறாள்' என்று கூறியவர்களும் உண்டு. ஆனால் காமு இதற்கொன்றும் பயப்படாமல் எங்கள் ஊரிலேயே சாசுவதமாகத் தங்கி விட்டாள்.

காலை முதல் இருட்டும் வரை காமு சர்வாத்திரியாமியாகத் தோன்றுவாள். ஆற்றில் குளித்துவிட்டு எந்த வீட்டிற்காவது ஜலம் கொண்டுபோய்க் கொட்டுவாள். கடையில் சாமான்கள் வாங்கிக் கொடுப்பாள். குழந்தைகளுக்குச் சாதம் ஊட்டுவாள். தோசைக்கு அரைத்துக் கொடுப்பாள். இன்னும் சில வீடுகளில் அப்பளம் இடுவாள். தனியாக இருக்கும் பெண்களுக்குத் துணையாகக் காவலிருப்பாள். எந்த வீட்டிலாவது கல்யாணம் கார்த்திகை என்றால் காமுவுக்குத்தான் கிராக்கி. ஊஞ்சல் பாட்டு முதல் கட்டுச் சாதம் பிசையும் வரையில் எல்லாம் காமுவே செய்வாள்.

இப்படியாகச் சில காலத்திற்குள் காமு ஊரில் எல்லாருடைய அன்புக்கும் பாத்திரமாகி விட்டாள். யாராவது பெரிய மனிதர் வீட்டுப் பெண்கள் அவளுக்கு நல்ல புடவைகளும் ரவிக்கைகளும் கொடுப்பார்கள். மஞ்சளும் குங்குமமுமாக எப்பொழுதும் மலர்ந்த முகத்துடன் காமு பளிச்சென்று காட்சி யளிப்பாள்.

வயதின் ஒற்றுமையாலோ எதனாலோ காமுவுக்கு என்னிடம் ரொம்பப் பற்றுதல் உண்டாகி விட்டது. நானும் தன்னந் தனியளாக ஒரு பெரிய வீட்டிலிருந்ததால் இரவு எவ்வளவு நேரமானாலும் படுக்க வந்து விடுவாள். படுக்கையில் படுத்ததும் காமுவுக்குத் தூக்கம் வருவதில்லை. யார் வீட்டில் என்ன நடந்தது, புதிதாக ஊருக்கு யார் வந்தார்கள், பேப்பரில் என்ன விசேஷம், அடுத்த ஊர்களில் என்ன விசேஷம் என்றெல்லாம் சொல்லுவாள். காமுவுக்கு முதல் முதலில் தமிழ்கூட எழுதப் படிக்கத் தெரியாமலிருந்தது. ஆனால் நாளா வட்டத்தில் எப்படியோ தமிழ்ப் பத்திரிகைகளையும் படிக்கக் கற்றுக் கொண்டு விட்டாள். காமுவை ஓரிடத்தில் நிம்மதியாகப் பார்க்க வேண்டுமானால் பத்திரிகையும் கையுமாகத்தான் பார்க்கலாம். அவள் பத்திரிகை படித்து ரசிப்பதை யாரோ பொல்லாத பிள்ளைகள் படமாகப் பிடித்துப் பத்திரிகைக்கு அனுப்பி விட்டார்கள். அது வெளி வந்தபோது காமு ஒரு வாரம் வெளியில் தலை காட்டவில்லை. ஆனால் அந்தப் படங்கள் வந்த பத்திரிகையை மெத்தைமேல் ஒளித்து வைத்துக் கொண்டு ரகசியமாகப் பார்ப்பாள்.

அன்று சற்றுத் தாமதமாக வந்த காமு வாசல் திண்ணையிலேயே உட்கார்ந்து விட்டாள். உற்சாகம் குறைந்து அவள் முகம் சோர்ந்து காணப்பட்டது.

"என்ன காமு? இன்றைக்கென்ன, ஒரு மாதிரியாக யிருக்கிறாயே?" என்றேன்.

"ஒன்றுமில்லை அக்கா! ஏதோ அலுப்புத்தான். சேஷியின் மாப்பிள்ளை திரும்பி வந்து விட்டானாம். பாவம்! இனி அவளை உயிரோடு காணப்போகிறோமா என்றிருக்



தார்கள். அவன் வீட்டை விட்டுப் போய் பத்து வருஷங்களுக்கு மேல் ஆகிவிட்டன" என்றாள் காமு.

"அப்படியா? எப்பொழுது வந்தான்? இவ்வளவு நாட்கள் எங்கேயிருந்தானும்?"

"யுத்தத்தில் சேர்ந்து ஊரூராகத் திரிந்தானும். எங்கெங்கேயோ நடந்த யுத்த பயங்கரங்களை அவன் விவரித்ததையல்லவா கேட்க வேண்டும்! ...... முதலில் ஆளையே அடையாளம் தெரியவில்லை!"

"அவ்வளவு மாறிவிட்டானுக்கும்?"

"ஆமாம்! முதலில் ரொம்ப சந்தேகமாக யிருந்தது. பிறகுதான் நிச்சயமாகத் தெரிந்தது. இந்தச் சம்பவம் எனக்குப் பழைய கதை ஒன்றை நினைவூட்டுகிறது!"

"அதென்ன கதை? எனக்குச் சொல்லியிருக்கிறாயோ?"

"ஹூம்! கதையே அல்ல, நிஜமாக நடந்ததுதான்!"

"எங்கே சொல்லு பார்க்கலாம்!" என்று சொல்லித் திண்ணையிலேயே படுத்துக் கொண்டேன்.

காமுவும் தூணில் சாய்ந்த வண்ணம் கதையை ஆரம்பித்தாள்.

★

மீனாட்சி கல்யாணமாகிப் புக்ககம் வந்தபொழுது, மாமியார் மட்டும் தானிருந்தாள். அந்த மாமியாருக்கு அவ்வளவாகக் கண் தெரியாது. ஆகவே மீனாட்சியே வீட்டுக்



காரியங்களை ஏற்றுக் கொண்டு சமத்தாகக் குடித்தனத்தை நடத்தி வந்தாள். அவள் கணவன் வயல்களில் வேலை செய்வான்; வண்டி ஓட்டுவான். இப்படிச் சில காலம் சென்றது. மீனாட்சிக்குத் தலைச்சன் பெண்ணும் அடுத்தாற்போல் பிள்ளையும் பிறந்தது.

இப்படியிருக்கையில் ஊருக்குப் புதிதாக ஒரு சர்க்கஸ் கம்பெனி வந்தது. அதில் ஒரு பெண்ணுடன் மீனாட்சியின் கணவன் சுந்தரம் சிநேகம் வைத்திருக்கிறான் என்று வதந்தி ஊரில் பரவியது. அந்தச் சமயத்தில், போதாக் குறைக்கு ஊரில் கொள்ளை நோயும் பஞ்சமும் வந்து பலருக்குக் கஷ்டமும் நஷ்டமும் சேர்ந்தது. மீனாட்சியின் புருஷனுக்கு கஷ்டம் ஏற்பட்டுச் சாப்பாட்டிற்கே கஷ்டமாகி விட்டது.

இந்தக் கஷ்டம் சகிக்காததினாலோ ஏதுனாலோ, சுந்தரம் திடீரென்று அந்தர்தியானமாகிவிட்டான். ஊரார் பலர் பலவிதமாகப் பேசிக் கொண்டார்கள். மீனா பாவம், தன்னைத் தனியாகக் கிழவியையும் குழந்தைகளையும் வைத்துக்கொண்டு தவித்தாள். அவளே வயல்களுக்குச் சென்று உழைத்தாள். மாடுகளைக் கட்டிக்கொண்டு பால், மோர், நெய் வியாபாரம் செய்தாள். இப்படி ஓயாமல் உழைத்துக் காலத்தைக் கழித்தாள். ஊராரின் வம்பைப் பொறுக்காமல் கணவன் தன்னிடம் சொல்லிக் கொண்டு தான் போனான் என்றும், வெளியூரில் வேலை பார்க்கிறான் என்றும் சமாதானங்கள் சொல்லி வந்தாள்.

சில வேளைகளில் சுந்தரத்தினிடமிருந்து கடிதம் வரும். மீனாவுக்குப் படிக்கத் தெரியாது. கிராமத்துப் பிள்ளைகள் படித்துச் சொல்லுவார்கள். இரண்டொரு தடவை இருபது, முப்பது என்று பணமும் வந்தது. இப்படியாகக் கணவனுடைய கண்ணடத்தையும் தன்னுடைய மதிப்பையும் காப்பாற்றிக் கொண்டு மீனாட்சி காலத்தைக் கழித்து வந்தாள்.

இந்தச் சமயத்தில் திடீரென்று ஒரு நாள், 'மீனாட்சியின் கணவன் சுந்தரம் ஊருக்கு வந்து ஒரு பந்து வீட்டில் இறங்கியிருக்கிறான்' என்று சமாசாரம் ஊரில் பரவியது. இருபது வருஷங்கள் முன்பு ஏதுவேமே அதிசயம்தான். கிராமத்து ஜனங்கள் எல்லோரும் ஒருங்கே திரண்டு அவனைப் பார்க்கச் சென்றார்கள். "அவனே தான்! கொஞ்சம் மாறியிருக்கிறான்! ஆனாலும் சுந்தரம் தான்!" என்று ஊரார் 'சர்டிபிகேட்' கொடுத்துவிட்டார்கள். மாலை வயலிலிருந்து

திரும்பிய மீனாட்சியிடம் விஷயத்தைச் சொன்னார்கள். மீனாட்சி ஒரு கணம் ஸ்தம்பித்து நின்றாள். பிறகு ஒருவாறு சமாளித்துக் கொண்டு "சரிதான்! எனக்கென்ன!" என்று சொல்லிவிட்டு விடுவிடு என்று வீட்டுக்குப் போய் விட்டாள்.

ஊரார் எல்லோருமாகச் சேர்ந்து அவனை அவன் வீட்டுக்கே அழைத்துச் சென்றார்கள். மீனாட்சியின் மாமியார் கூடத் தன் காணமற்போன மகன் அவன்தான் என்று சற்று நேரம் பேசியதிலிருந்து ஒப்புக் கொண்டாள். அவனும் தாயாரை நமஸ்கரித்துக் குழந்தைகளைக் கூப்பிட்டு விசாரித்தான். ஆனால் மீனாட்சி இரேழி உள்ளேயே உட்கார்ந்திருந்தாள். கடைசியில் அவள் "இவர் என் கணவரல்ல!" என்று தைரியமாகக் கூறிவிட்டாள்.

"ஏன் அப்படிச் சொல்லுகிறாய்? உன் புருஷன் உயிரோடிருப்பதாகவும் கடிதமும் பணமும் அனுப்புவதாகவும் சொல்லிக் கொண்டிருந்தாயே? இப்பொழுது என்ன சந்தேகம்?" என்று பலர் கேட்டார்கள். மீனாட்சியின் மாமியாரும் அவளைத் திட்ட ஆரம்பித்து விட்டாள்.

மீனாட்சி சாவதானமாக, "உங்களுக்கு நன்றாக விஷயம் தெரியாது. இவரைச் சில விஷயங்கள் கேட்கிறேன் அதற்குப் பதில் சொல்லட்டும்!" என்றாள்.

வந்திருப்பவனின் முகம், இதைக் கேட்டதும் சற்று மாறுபட்டது. ஆயினும் சமாளித்துக் கொண்டு "சரி" என்றான்.

கூட்டத்தில் முக்கியஸ்தர்களாயிருந்தவர் ஒருவர் "சரி, சரி! கேள்வி கேட்பதெல்லாம் அப்புறம்; காலையில் பார்ப்போம்!" என்று சொன்னதும், கூட்டம் பிரிந்தது.







"இது என்ன நடந்தது என்று நினைக்கிறீர்கள்?" என்று ஒரு கேள்வியுடன் நிறுத்தினான் ராமு.

"என்ன நடந்திருக்கும்? மனஸ்தாபங்களை மறந்து தம்பதிகள் ஒன்று சேர்ந்திருப்பார்கள்!" என்றேன்.

"அதுதான் இல்லை. மீனாட்சியின் கணவனாக வந்தவன் விடிவதற்குள்ளாகவே ஓடிப் போய் விட்டான்!"

"என்ன! கணவனாக வந்தவனா?"

"ஆமாம்! சிலநாள் கழித்து நான் மீனாவை அந்தரங்கமாகக் கேட்டேன். பிறகு தான் உண்மை விஷயம் புலப்பட்டது. பாவம்! ஊராரின் பழிக்கஞ்சி அவளே அடுத்த ஊருக்குச் சென்று ஒருவரைக் கொண்டு அவள் கணவன் எழுதியது போல் காசைக் கொடுத்து எழுதச் சொல்லி வந்தாளாம். அதேபோல் அடிக்கடி போய்ப் பணமும் கொடுத்துத் தன் விலாசத்திற்கு அனுப்பச் சொல்லி வந்தாளாம். அதற்காகத் தன் கதையை எல்லாம் அந்த மனிதரிடம் சொல்லியிருந்தாளாம். சில மாதங்களுக்கு முன்னால் அந்த மனிதன் அவள் மேல் ஏதோ கெட்ட எண்ணம் கொண்டதுபோல் தோன்றியதால், அது முதல் அவனிடம் போவதை நிறுத்திக் கொண்டாளாம். பிறகு அம்மனிதனே தன் கணவனாக வந்தானென்று கூறினாள். கேட்டீர்களா, கதையை? யாரை நம்புவது; யாரை நம்பாமலிருப்பது? பெண் ஜென்மமே கஷ்டம்தான்!" என்று ஒரு கொட்டாவியுடன் கூறி முடித்தான்.

"என்ன, ராமு, பெரிய கதாசிரியர்களைக் கூடத் தோற்கடித்துவிடுவாய் போலிருக்கிறது. சேஷியின் மாப்பிள்ளை திரும்பி வந்ததை வைத்துக்கொண்டு நல்ல கதை கட்டி விட்டாயே!" என்றேன்.

## விசேஷ சலுகை விற்பனை!

மிகவும் குறைந்த விலையில் புதிய ஸ்விஸ் ஸில்வர் கடிகாரங்களை தருவித்துள்ளோம். 15, 17 ஜுவல் கெடிகாரங்கள் 5 வருஷமும், மற்றவை 3 வருஷமும் உத்தரவாத முள்ளவை. கடிகாரத்துடன் உத்திரவாதப்பத்திரம், ஸ்டிராப், வெல்வெட் பெட்டி இவை இலவசமாக அளிக்கப்படும். விற்பனை வரி, பாக்கிங், தபால் செலவு இன்றி கெடிகாரங்களை வி.பி.பி. மூலம் பெற்றுக்கொள்ளலாம்





### இலவசப் பரிசுகள்

ஒரே பாக்கிங்கில் இரண்டு கடிகாரங்களை ஆர்டர் செய்பவர்களுக்கு இரண்டு செல் பேட்டரியுடன் அமெரிக்கன் டார்ச் லைட் கிடைக்கும். அதேபோல், ஏதாவது 3 கடிகாரங்கள் ஆர்டர் செய்பவர்களுக்கு ஒரு பாக்கெட் வாட்ச், 4 கெடிகாரங்கள் ஆர்டர் செய்பவர்களுக்கு ஒரு ஆபீஸ் டேபிள் க்ளாக்கும் கிடைக்கும்.



ரவுண்டு - சைஸ் 10½

| | | | ரூ. |
|---|---|---|---|
| 507 | க்ரோம் ஸ்டீல்பேக் | 5 ஜுவல் | 20 |
| 508 | ரோ. கோ. ஸ்டீல்பேக் | 5 ஜுவல் | 23 |
| 509 | முழு ரோல்டு கோல்டு | 5 ஜுவல் | 26 |
| 510 | க்ரோம் ஸ்டீல்பேக் | 7 ஜுவல் | 30 |
| 511 | ரோ. கோ. ஸ்டீல்பேக் | 7 ஜுவல் | 33 |
| 512 | முழு ரோல்டுகோல்டு | 7 ஜுவல் | 36 |
| 570 | க்ரோம் ஸ்டீல்பேக் | 15 ஜுவல் | 38 |
| 571 | ரோ. கோ. ஸ்டீல்பேக் | 15 ஜுவல் | 43 |
| 572 | 20 மைக்ரோன் தங்கம் | 15 ஜுவல் | 53 |
| 573 | க்ரோம் ஸ்டீல்பேக் | 17 ஜுவல் | 58 |
| 574 | ரோ. கோ. ஸ்டீல்பேக் | 17 ஜுவல் | 63 |
| 575 | 20 மைக்ரோன் தங்கம் | 17 ஜுவல் | 73 |



வாடர் ப்ரூப் ஷாக் ப்ரூப்
சென்டர் செகண்டு ரேடியம் - சைஸ் 8½

| | | | |
|---|---|---|---|
| 636 | க்ரோம் ஸ்டீல்பேக் | 15 ஜுவல் | 85 |
| 637 | ரோ. கோ. ஸ்டீல்பேக் | 15 ஜுவல் | 90 |
| 638 | 20 மைக்ரோன் தங்கம் | 15 ஜுவல் | 95 |
| 639 | க்ரோம் ஸ்டீல்பேக் | 17 ஜுவல் | 105 |
| 640 | ரோ. கோ. ஸ்டீல்பேக் | 17 ஜுவல் | 110 |
| 641 | 20 மைக்ரோன் தங்கம் | 17 ஜுவல் | 115 |



ஸ்குயர் - சைஸ் 10½

| | | | |
|---|---|---|---|
| 537 | க்ரோம் ஸ்டீல்பேக் | 5 ஜுவல் | 29 |
| 538 | ரோ. கோ. ஸ்டீல்பேக் | 5 ஜுவல் | 32 |
| 539 | முழு ரோல்டு கோல்டு | 5 ஜுவல் | 35 |
| 540 | க்ரோம் ஸ்டீல்பேக் | 7 ஜுவல் | 33 |
| 541 | ரோ. கோ. ஸ்டீல்பேக் | 7 ஜுவல் | 36 |
| 542 | முழு ரோல்டுகோல்டு | 7 ஜுவல் | 39 |
| 588 | க்ரோம் ஸ்டீல்பேக் | 15 ஜுவல் | 45 |
| 589 | ரோ. கோ. ஸ்டீல்பேக் | 15 ஜுவல் | 50 |
| 590 | 20 மைக்ரோன் தங்கம் | 15 ஜுவல் | 55 |
| 643 | ஆல் ப்ரூப் முழு ஸ்டீல் சென்டர் செகண்டுடன் | 17 ஜுவல் | 125 |



நீண்ட சதுர வடிவம்-சைஸ் 7¾

| | | | ரூ. |
|---|---|---|---|
| 555 | க்ரோம் ஸ்டீல்பேக் | 5 ஜுவல் | 33 |
| 556 | ரோ. கோ. ஸ்டீல்பேக் | 5 ஜுவல் | 36 |
| 557 | முழு ரோல்டுகோல்டு | 5 ஜுவல் | 39 |
| 558 | க்ரோம் ஸ்டீல்பேக் | 7 ஜுவல் | 39 |
| 559 | ரோ. கோ. ஸ்டீல்பேக் | 7 ஜுவல் | 42 |
| 560 | முழு ரோல்டுகோல்டு | 7 ஜுவல் | 45 |
| 610 | க்ரோம் ஸ்டீல்பேக் | 15 ஜுவல் | 50 |
| 611 | ரோ. கோ. ஸ்டீல்பேக் | 15 ஜுவல் | 55 |
| 61' | முழு ரோல்டுகோல்டு | 15 ஜுவல் | 60 |
| 613 | 20 மைக்ரோன் தங்கம் | 15 ஜுவல் | 65 |
| 614 | க்ரோம் ஸ்டீல்பேக் | 17 ஜுவல் | 60 |
| 615 | ரோ. கோ. ஸ்டீல்பேக் | 17 ஜுவல் | 67 |



லேடீஸ் - சைஸ் 5¼

| | | | |
|---|---|---|---|
| 660 | க்ரோம் ஸ்டீல்பேக் | 5 ஜுவல் | 40 |
| 661 | ரோ. கோ. ஸ்டீல்பேக் | 5 ஜுவல் | 43 |
| 662 | முழு ரோல்டுகோல்டு | 5 ஜுவல் | 46 |
| 663 | க்ரோம் ஸ்டீல்பேக் | 7 ஜுவல் | 45 |
| 664 | ரோ. கோ. ஸ்டீல்பேக் | 7 ஜுவல் | 48 |
| 665 | முழு ரோல்டுகோல்டு | 7 ஜுவல் | 51 |



ஆபீஸ் டேபிள் கடிகாரம் (நெ. 681)

681 ஆபீஸ் டேபிள் க்ளாக், சதுர வடிவம், தனி முழு க்ரோம் டயல் 3½" — 30

682 அலாரம் டேபிள் க்ளாக், டயல் 4" — 19

683 அலாரம் டேபிள் க்ளாக், முழு க்ரோம் கேஸ், ரேடியம் டயல், சைஸ் 4" — 21

684 மெட்ரோ அலாரம் டேபிள் க்ளாக் தனி ரேடியம் டயல், சைஸ் 2½" — 35

**SWISS WATCH CO., 23, Sadashiv Lane, Post Box No. 3552, BOMBAY-4**

# பாதத்திலுள்ள புண்கள் நான்கு நாட்களிலேயே குணமடைகின்றன

## குத்து வலியும் நமைச்சலும் 7 நிமிஷங்களில் நிறுத்தப்படுகிறது



உங்கள் பாதங்கள் அதிகமாக வெறுப்படையுமாறு நமைச்சல் எடுக்கிறதா? வெடித்துக் காயமடைகின்றனவா? பாதங்களின் மேலும் விரல்களுக்கிடையிலும் கொப்பளித்து வெந்திருக்கிறதா? மேலும் கொப்புளங்களை உண்டாக்குகின்றனவா? ரத்தம் கசியும்படி பாதங்கள் புண்ணாகின்றனவா? இது ஏதோ கிருமி அல்லது நோயின் ஏற்படும் அழுகல் என்பதையும் இவற்றை ஒழித்தாலன்றி உபாதைகளிலிருந்து விடுதலை பெற முடியாதென்பதையும் நீங்கள் உணர வேண்டும்.

### மூலகாரணத்தையே அழிக்கிறது

களிம்புகளோ தைலங்களோ அதிக குணத்தை அளிப்பதில்லை. உபாதைக்கு மூல காரணத்தை அவை கொல்லுவதோ வெல்லுவதோ கிடையாது. அதிருஷ்டவசமாக, டாக்டர்கள் சிபார்சு செய்யும் நிக்ஸோடெர்ம் இருக்கிறது. ஒரு பிரபல ஆங்கில சரும நிபுணர் தயாரித்தது; பிரபல மருந்து வியாபாரிகளால் இறக்குமதி செய்யப் படுகிறது. நிக்ஸோடெர்ம் உங்கள் பாத உபாதையைக் கட்டாயம் போக்கிவிடும் என்பதற்கு உத்தரவாதம். அதன் மூன்று முக்கிய குணங்களாவன: (1) பாதங்களில் ஏற்படும் உபாதைக்கும், படைக்கு மூலகாரணமான கிருமிகளையும், அவற்றை வளர்க்கும் இதர புழுக்களையும் கொன்றுவிடுகிறது. (2) நமைச்சலை நிறுத்தி, சருமத்தை ஏழே நிமிஷங்களில் குளிர்வுறச் செய்து ஹிதமளிக்கிறது. (3) சருமத்தைச் சுத்தமாகவும், வழவழப்பாகவும் மிருதுவாகவும் செய்கிறது.

### பரீக்ஷைக்கு உத்தரவாதம்

இன்றே நிக்ஸோடெர்ம் வாங்குங்கள். இன்றிரவே ஒருமுறை போட்டுப் பார்த்தால் மறுநாள் காலை அற்புதமான தேர்ச்சி ஏற்படும். நாலு நாட்களில் பாதங்களில் ஏற்படும் உபாதைகளும் தீர்ந்துவிடும். உங்கள் சருமம் சுத்தமாகவும், வழவழப்பாகவும் மிருதுவாகவும் ஆகும். தொடர்ந்து மூன்று நாட்கள் போட்டால் உங்கள் பாதங்களில் ஏற்படும் நமைச்சல், கொப்புளங்கள், குணமடையாவிட்டால் நிக்ஸோடெர்ம் மதிப்பை இழந்ததாகிறது. இந்த உத்திரவாதத்தின் பேரில், நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் இதுதான். ஏழு நாட்களுக்கு நிக்ஸோடெர்ம் போட்டு பரீக்ஷை செய்து பாருங்கள். உங்களுக்கு திருப்தி ஏற்படாவிட்டால், காலிப் பெட்டியைத் திருப்பிக்கொடுத்தால் பணத்தைத் திரும்பப் பெறுவீர்கள். உங்கள் மருந்து வியாபாரியிடம் இன்றே நிக்ஸோடெர்ம் வாங்குங்கள். அதற்கு அளிக்கப்பட்டிருக்கும் உத்தரவாதமே உங்களைப் பாதுகாக்கும்.

# ப்ரூக் லாக்ஸ்

## சாக்லெட் மலமிளக்கி




உட்கொள்ள சுலபமானது. உடம்புக்கு உபத்திரவமில்லாமல் வேலை செய்கிறது. ப்ரூக்லாக்ஸ் குழந்தைகளுக்கும் வயதானவர்களுக்கும் ஏற்றது.

மென்மையானது ஆனால் வேலையில் துரிதமானது. 2, 8, 24 பில்லைகள் கொண்ட வாட்டமான சைஸ்கள். பெரிய சைஸ் வாங்குவது மிகவும் சிக்கனமானது.

**ஒரே இரவில் மலச் சிக்கலை அறவே அகற்றுகிறது.**

ஏஜெண்டுகள்: தி ஓரியண்டல் மெர்கண்டைல் ஏஜென்ஸி, 99-ஏ, அரண்மனைக்காரத் தெரு, மதராஸ்-1

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119 Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

Regd. No. M. 4892